சோதிட ரகசியம் என்னும்

# அனுபவ
# சுந்தர சேகரம்

(இரண்டு பாகங்கள்
அடங்கியது)

இஃது

K. குற்றால லிங்கம் பிள்ளை
அவர்களால் இயற்றப்பட்டது

பதிப்பாளர்

சண்முகானந்த புக்டிபோ
67, T.K. முதலி தெரு,
சூளை, சென்னை - 600 112.

 [விலை : ரூ. 25

# உரிமை அறிவிப்பு

—(0)—

இதனால் உலகில் பல புத்தக வியாபாரிகளுக்கும் மற்றும் சோதிடத்தில் சிறந்த மகா நிபுணர்களுக்கும் தெரிவித்துக் கொள்வது யாதெனில், இச் சோதிட இரகசியம் என்னும் "அனுபவ சுந்தரசேகரம்" என்னும் நூலை K. குற்றாலலிங்கம் பிள்ளை அவர்களால் பல ஏட்டுப்பிரதிகளின் ஆதரவைக் கொண்டு எழுதப் பெற்றதை அடியிற் கண்டுள்ள யான் 1867-ம் வருஷத்திய 25-வது ஆகஸ்ட் 20-வது பிரிவு 6-வது விதியின் பிரகாம்ரம் கனம் தங்கிய கவர்ன்மெண்டில் (ரிஜிஸ்டர் காபிரைட்) செய்யப்பெற்றிருப்பதால் இதைப் பதிப்பிக்கவோ, மாற்றி எழுதவோ முயற்சிப்பரேல் இதனால் உண்டாகும் சகல நஷ்கிங்களுக்கும் பாத்திரராவார் என்பதை உணர்வாகளாக,

இங்ஙனம்,
K.M. பாலசுந்தரம்
சன்முகானந்தா புக் டிபோ
சூளை, சென்னை-122

## முதற்பாக அட்டவணை



எண் பக்கம்

# முகவுரை

—(௸)—

நீரால் சூழப்பட்ட இவ்வுலகில் மானிடர்கள் அனைவ ரும் தத்தம் விதிவிலக்குகளை யுணர்ந்து உய்யும் பொருட் டுத் திருவாய் மலர்ந்தருளியது வேதம் இவ்வேதத்தில் அங் கங்கள் ஆறு இவ்வாறு அங்கங்களுள் நேத்திரமாகிய அங் கம் ஜோதிடம் நமது சரீரத்திலுள்ளவைகளுள் கண் எவ் வாறு முக்கியமானதோ அதுபோல் வேதங்களுள் சிறந்தது ஜோதிடம் பூமியில் மேடுபள்ளம் சமமான இடம், இவை களைத் தெரிந்து நடப்பதறகும். நடக்கும் காரியங்கள் அனைத்தும் சேர்க்கக் கண் எவ்வாறு பயன்படுகிறதோ அதுபோல் இவ்வுலகில் மானிடராய்ப் பிறந்தவர்களுக்கும் கிரிகைகளைத் தாம் நன்கு உணர்ந்து செய்வதற்கு ஜோதி டமே முதன்மை பெற்று விளங்குகின்றது கால அளவை நிர் ணயிக்கும் கருவியாகிய சூரியன் முதலிய கிரகங்கள் பூமி யின் இன்ன பாகத்தில் இன்ன இன்ன பலனைதரும் என்று பலன் சொல்லுவதும் ஜோதிடம்

மானிடராகப் பிறந்த உயிர்க்கு இறந்தகாலம் எதிர் காலம் நிகழ்காலம் என முக்காலங்களில் இன்ன கிரகம் இன்ன பலன் என்பதையும், வரும் நன்மை தீமை இன்ன தென்பதையும் அறிந்து தீமை இன்னதென்பதையும் அறிந்து தீமைக்கு வேண்டிய சாந்தியையும் தெரிவித்து பரிதாபகர மான வழியை நீக்கி நல்வழியைத்தேடி அதன் பலனை அடையச்செய்வதும் ஜோதிடமே இந்நூலில் ஜோதிடம் முதன்முதல் கற்றுக்கொள்ளும் வழியையும் எல்லா அம்சங் களையும் தெசைகளையும் தெளிவாகக் எடுத்துக்கூறி நவக் கிரகங்களால்உண்டாகும் தீமைக்குச் சாந்தியும் கூறப்பட்டி ருக்கிறது ஜோதிடம் கற்றுகொள்ள விரும்புகிறவர்

களுக்கு வேறு ஆசிரியரே தேவை இல்லை என்றே கூறலாம் ஜோதிடம் கற்றுக்கொள்ள வேண்டிய சகல விஷயங்களை யும் எழுதப்பட்டிருக்கிறது இவ்வுலகில் ஜெனித்த மானிடர் கள் அனைவரும் இந்நூலின் உதவியை ஆதரிக்க வேண் டியவர்களே இந்நூல எம்மதத்தினரும் எச்சாதியினரும் அன்புடன் ஆதரிப்பார்களென கருதுகிறேன் சகலரும் நன்கு உய்யுமாறு பரிசுரித்த எனது நண்பர் K.A. மதுரை முதலியார் அவர்கள் தீர்க்காயுளுடன் திடகாத்திரம் பெற்று நீடுழிவாழ்வாராக சுபம்!

இங்ஙனம் :

அரண்மனை சோதிட வித்துவான்

காலம் சென்ற ஸ்ரீ குரும்பலா பிள்ளை
அவர்களின் குமாரன் K.குற்றாலம் பிள்ளை

ஏரசக்க நாயக்கனூர் ஜமீன் பெரியகுளம் தாலுக்கா
மதுரை ஜில்லா



## இந்திய கால அளவை

| | |
|---|---|
| 60 விநாடி-1 நாழிகை | 7½ நாழிகை-1 ஜாமம் |
| 60 நாழிகை-1 நாள் | 15 நாள்-1 பக்ஷம் |
| 2 நாழிகை-ஒரு முகூர்த்தம் | 2 பக்ஷம்-1 மாதம் |
| 3 முகூர்த்தம்-1 ஜாமம் | 2 மாதம்-1 பருவம் |
| 8 ஜாமம்-1 நாள் | 3 பருவம்-அயனம் |
| 1 நாழிகை-24 நிமிஷம் | 2 அயனம்-1 வருஷம் |
| 2½ நாழிகை-1 மணி | |

## ஆங்கில கால அளவை

| | |
|---|---|
| 60 செகன்ட்-1 நிமிஷம் | 4 வாரம்-1 மாதம் |
| 60 நிமிஷம்-1 மணி | 12 மாதம்-1 வருடம் |
| 24 மணி-1 நாள் | 52 வாரம்-1 வருஷம் |
| 7 நாள்-1 வாரம் | |

| மாதங்கள் | கிழமைகள் | திதிகள் |
|---|---|---|
| 1 சித்திரை | | 1 பிரதமை |
| 2 வைகாசி | ஞாயிறு | 2 துதியை |
| 3 ஆனி | திங்கள் | 3 திரிதியை |
| 4 ஆடி | செவ்வாய் | 4 சதுர்த்தி |
| 5 ஆவணி | புதன் | 5 பஞ்சமி |
| 6 புரட்டாசி | வியாழன் | 6 சஷ்டி |
| 7 ஐப்பசி | வெள்ளி | 7 சப்தமி |
| 8 கார்த்திகை | சனி | 8 அஷ்டமி |
| 9 மார்கழி | | 9 நவமி |
| 10 தை | | 10 தசமி |
| 11 மாசி | | 11 ஏகாதேசி |
| 12 பங்குனி | | 12 திரயோதசி |
| | | 13 சதுர்த்தசி |
| | | 14 அமாவாசை (தேய்பிறை) |
| | | 15 பௌர்ணமி (வளர்பிறை) |

---

குறிப்பு:—இந்த விதமாக 15 நாளைக்கு வரும் திதிகள் தேய்பிறையாகும் கடைசி திதியாகிய அமாவாசைக்குப்பின் வருகின்ற திதிகள் வளர்பிறை என்றும் பௌர்ணமிக்குப்பின் வருகின்ற திதிகள் தேய்பிறை என்றும் அறிய வேண்டும் வளர்பிறைக்குச் சுக்கலபட்சம் என்றும், பூர்வலட்சம் என்றும் சொல்வதுண்டு.

தேய்பிறைக்குக் கிருஷ்ணபக்ஷம் என்றும் அமரபக்ஷம் என்றும் சொல்வதுண்டு ஆனால் சந்திரன் வளர்வது மில்லை தேய்வதுமில்லை அது எப்போதும் ஒரே தன்மை யாகத்தான் இருக்கிறது என்பதைத் தெரிந்துக்கொள்ளவும்.

## வருஷங்கள்-60

| | | |
|---|---|---|
| 1 பிரபவ | 21 சர்வசித்து | 41 பிலவங்க |
| 2 விபவ | 22 சர்வதாரி | 42 கீலக |
| 3 சுக்கில | 23 விரோதி | 43 சௌமிய |
| 4 பிரமோதூத | 24 விக்ருதி | 44 சாதாரண |
| 5 பிரஜோர்ற்பத்தி | 25 கர | 45 விரோதிகிருது |
| 6 ஆங்கிரஸ | 26 நந்தன | 46 பரிதாபி |
| 7 ஸ்ரீமுக | 27 விஜய | 47 பிரமாதீக |
| 8 பவ | 28 ஜய | 48 ஆனந்த |
| 9 யுவ | 29 மன்மத | 49 ராக்ஷச |
| 10 தாது | 30 துன்முகி | 50 நள |
| 11 ஈஸ்வர | 31 ஹேவிளம்பி | 51 பிங்கள |
| 12 வெகுதான்ய | 32 விளம்பி | 52 காளயுக்தி |
| 13 ப்ரமாதி | 33 விகாரி | 53 சித்தாத்திரி |
| 14 விக்கிரம | 34 சார்வரி | 54 ரௌத்திரி |
| 15 விஷு | 35 பிலவ | 55 துன்மதி |
| 16 சித்திரபானு | 36 சுபகிருது | 56 துந்துபி |
| 17 சுபானு | 37 சோபகிருது | 57 ருத்ராத் காரி |
| 18 தாரண | 38 குரோதி | 58 இரத்தாட்சி |
| 19 பார்த்திவ | 39 விஸ்வாவசு | 59 குரோதன |
| 20 விய | 40 பராபவ | 60 அக்ஷப |

## நட்சத்திரங்கள் 27

| | | |
|---|---|---|
| 1 அஸ்வினி | 10 மகம் | 19 மூலம் |
| 2 பரணி | 11 பூரம் | 20 பூராடம் |
| 3 கிருத்திகை | 12 உத்திரம் | 21 உத்திராடம் |
| 4 ரோகிணி | 13 அஸ்தம் | 22 திருவோணம் |
| 5 மிருகசீரஷம் | 14 சித்திரை | 23 அவிட்டம் |
| 6 திருவாதிரை | 15 சுவாதி | 24 சதையம் |
| 7 புனர்பூசம் | 16 விசாகம் | 25 பூரட்டாதி |
| 8 பூசம் | 17 அனுஷம் | 26 உத்திரட்டாதி |
| 9 ஆயில்யம் | 18 கேட்டை | 27 ரேவதி |

## நட்சத்திரங்களின் அதிபதி

| | | | |
|---|---|---|---|
| அஸ்வனி<br>மகம்<br>மூலம் | கேது | பரணி<br>பூசம்<br>பூராடம் | சுக்கிரன் |
| கிருத்திகை<br>உத்திரம்<br>உத்திராடம் | சூரியன் | ரோகிணி<br>அஸ்தம்<br>திருவோணம் | சந்திரன் |
| மிருகசீரிஷம்<br>சித்திரை<br>அவிட்டம் | செவ்வாய் | திருவாதிரை<br>சுவாதி<br>சதையம் | இராகு |
| புனர்பூசம்<br>விசாகம்<br>பூரட்டாதி | குரு | பூசம்<br>அனுஷம்<br>உத்திரட்டாதி | சனி |
| ஆயில்யம்<br>கேட்டை<br>ரேவதி | புதன் | | |

### யோகங்கள்-27

1 விஷ்கம்பம்
2 பிரீதி
3 ஆயுஸ்மான்
4 சௌபாக்கியம்
5 சோபனம்
6 அதிகாண்டம்
7 சகர்மம்
8 திருதி
9 சூலம்
10 கண்டம்
11 விருத்தி
12 தூருவம்
13 வியகாதம்
14 ஹாஷ்ணம்
15 வச்சிரம்
16 சித்தி
17 விதிபாதம்
18 விரியான்
19 பரிகம்
20 சிவம்
21 சிந்திம்
22 சாத்தியம்
23 சுபம்
24 சுப்ரம்
25 பிரமம்
26 மகேந்திரன்
27 வைதிருதி

### காரணங்கள்-11

1 பவம்
2 பாலவம்
3 கௌலவம்
4 தைதுலை
5 கரசை
6 வணிசை
7 பத்திரை
8 சகுனி
9 சதுஷ்பாதம்
10 நாகவம்
11 கிம்துஷ்க்கினம்

| காலம் பகல் | இராகு மணி | எமகண்டம் | குளிகன் மணி | காலநேமி மணி | அர்த்தப் பிரகரணம் | வாரசூலை |
|---|---|---|---|---|---|---|
| 1 ஞாயிறு | 4-30 6 | 12 1-30 | 3 4- 0 | 6 7-30 | 10 12 | மேற்கு |
| 2 திங்கள் | 7-30 9 | 10-12 10 | 1-30 3 | 3 4-30 | 9 1-30 | கிழக்கு |
| 3 செவ்வாய் | 3- 4 30 | 9 ,0-30 | 12·301 3C | 1 - 30 3 | 7-30 9 | வடக்கு |
| 4 புதன் | 12 1-30 | 7-30 9 | 0 30 1ε | 12 1-30 | 6 7-30 | வடக்கு |
| 5 வியாழன் | 1-30 3 | 6 7-30 | 9 10 30 | 10-30 12 | 3 4-30 | தெற்கு |
| 6 வெள்ளி | 10-30 12 | 3 4-30 | 7 - 30 9 | 9 10-50 | ı-30 3 | மேற்கு |
| 7 சனி | 9 10 3 | 1-30 3-0 | 6 7-30 | 7-30 9 | 12 1-30 | கிழக்கு |

குறிப்பு:-வாரசூலைக்கு பரிகாரம்
மேற்கு—வெல்லம், கிழக்கு—தயிர், வடக்கு—பால், தெற்கு—நல்லெண்ணெய்

# சோதிட ரகசியம் என்னும்

# அனுபவ சுந்தர சேகரம்

(முதற்பாகம்)



ஆதியந்த மிலாதவன் கபான்னடி
ஆதியம் பிகை வாலை மலரடி
ஆதிவாரண மாமுகன் சேவடி
ஆதிசோதிட நாதனை வணங்குவோம்

## கிரகங்கள்

1. சூரியன்
2. சந்திரன்
3. செவ்வாய்
4. புதன்
5. குரு
6. சுக்கிரன்
7. சனி
8. ராகு
9. கேது

## உபகிரகங்கள்

1. குளிகன்
2. யமகண்டன்
3. அர்த்தப்பிரகாரணன்
4. மிருந்யு
5. காலன்
6. தூமன்
7. வியதிபாதன்
8. தூமகேது
9. பரிவேடம்
10. இந்திரதனுசு

# இராசிகள்

| | | |
|---|---|---|
| 1 மேஷம் | 5 சிம்மம் | 9 தனுசு |
| 2 ரிஷபம் | 6 கன்னி | 10 மகரம் |
| 3 மிதுனம் | 7 துலாம் | 11 கும்பம் |
| 4 கடகம் | 8 விருச்சிகம் | 12 மீனம் |

| சரராசிகள் | ஸ்திர ராசிகள் | உபய ராசிகள் | ஆண் ராசிகள் | பெண் ராசிகள் |
|---|---|---|---|---|
| மேஷம் | ரிஷபம் | மிதுனம் | மேஷம் | ரிஷபம் |
| கடகம் | சிம்மம் | கன்னி | மிதுனம் | கடகம் |
| துலாம் | விருச்சிகம் | தனுசு | சிங்கம் | கன்னி |
| மகரம் | கும்பம் | மீன | துலாம் | விருச்சிகம் |
| | | | தனுசு | மகரம் |
| | | | கும்பம் | மீனம் |

## இராசிகளும் அவைகளின் அவையங்களும்

1. மேஷம்-சிரசு
2. ரிஷபம்-முகம்
3. மிதுனம்-மார்பு
4. கடகம்-இருதயம்
5. சிம்மம்-வயிறு
6. கன்னி-தொப்புள்
7. துலாம்-அடி வயிறு
8. விருச்சிகம்-சிசுனம்
9. தனுசு-இரண்டு துடைகள்
10. மகரம்-இரண்டு முழங்கால்கள்
11. கும்பம்-இரண்டு கணுக்கால்கள்
12. மீனம்-இரண்டு பாதங்கள்



## இராசிகளும் அவைகளின் அதிபதிகளும்

1. மேஷத்திற்கு-செவ்வாய்
2. ரிஷபத்திற்கு-சுக்கிரன்
3. மிதுனம்-புதன்
4. கடகம்-சந்திரன்
5. சிம்மம்-சூரியன்
6. கன்னி-புதன்
7. துலாம்-சுக்கிரன்
8. விருச்சிகம்-செவ்வாய்
9. தனுசு-குரு
10. மகரம்-சனி
11. கும்பம்-சனி
12. மீனம்-குரு

............

## கிரகங்களும் அவைகளின் ஆட்சியும்

1. சூரியன்-சிம்மம்
2. சந்திரன்-கடகம்
3. செவ்வாய்-மேஷமும் விருச்சிகமும்
4. புதனுக்கு-மிதுனமும், கன்னியும்
5. குருவுக்கு-தனுசும், மீனமும்
6. சுக்கிரனுக்கு-ரிஷபமும், துலாமும்
7. சனிக்கு-மகரமும், கும்பமும்

குறிப்பு :— ஏழு கிரகங்களும் பன்னிரெண்டு இராசி வீடுகளும் சொந்தமாகி விட்டதாலும், ராகு, கேது இவ்விரு கிரகங்களுக்கும் ஆட்சி வீடில்லாததால் அவர்கள் எந்த வீட்டில் இருக்கிறார்களோ அதையே சொந்த வீடாக மதித்து அந்த ராசிநாதன் கொடுக்கும் பலனையே கொடுப்பார்கள்.

2

## கிரகங்களும் அதன் உச்ச ராசிகளும்

1. சூரியன்-மேஷம்
2. சந்திரன்-ரிஷபம்
3. செவ்வாய்-மகரம்
4. புதன்-கன்னி
5. குரு-கடகம்
6. சுக்கிரன்-மீனம்
7. சனி-துலாம்
8. இராகு-விருச்சிகம்
9. கேது-விருச்சிகம்

## கிரகங்களும் அவைகளின் நீச்ச ராசிகளும்

1. சூரியன்-துலாம்
2. சந்திரன் விருச்சிகம்
3. செவ்வாய்-கடகம்
4. புதன்-மீனம்
5. குரு மகரம்
6. சுக்கிரன்-கன்னி
7. சனி-கும்பம்
8. இராகு விருச்சிகம்
9. கேது-ரிஷபம்

## கிரகங்களும் அதன் மூலத்திரிகோண ராசிகளும்

1. சூரியன்-சிம்மம்
2. சந்திரன் ரிஷபம்
3. செவ்வாய்-மேஷம்
4. புதன்-கன்னி
5. குரு-தனுசு
6. சுக்கிரன்-துலாம்
7. சனி-கும்பம்
8. இராகு-கும்பம்
9, கேது-சிம்மம்

## ஜெனன லக்கின நிச்சயம் தெரிந்துகொள்ளும் முறை

| | | | |
|---|---|---|---|
| பங்குனி 7 | சித்திரை 7 | வைகாசி 8 | ஆனி 10 |
| மாசி 8 | முதற் சக்கரம் | | ஆடி 11 |
| தை 10 | | | ஆவணி 11 |
| மார்கழி 11 | கார்த்திகை 11 | ஐப்பசி 11 | புரட்டாசி 11 |

| மாதப் பெயர் | | மேஷம் | ரிஷபம் | மிதுனம் | கடகம் | சிம்மம் | கன்னி | துலாம் | விருச்சிகம் | தனுசு | மகரம் | கும்பம் | மீனம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சித்திரை | நா | 3 | 7 | 12 | 18 | 24 | 30 | 35 | 41 | 47 | 52 | 56 | 60 |
| | வி | 41 | 54 | 50 | 40 | 25 | 0 | 35 | 20 | 2 | 6 | 19 | 1 |
| வைகாசி | நா | 60 | 4 | 9 | 14 | 20 | 26 | 31 | 37 | 43 | 48 | 52 | 56 |
| | வி | 0 | 13 | 17 | 59 | 44 | 19 | 54 | 39 | 21 | 25 | 38 | 19 |
| ஆனி | நா | 55 | 60 | 5 | 10 | 16 | 22 | 27 | 33 | 39 | 44 | 48 | 52 |
| | வி | 47 | 0 | 4 | 46 | 31 | 6 | 44 | 26 | 8 | 12 | 25 | 6 |
| ஆடி | நா | 50 | 54 | 60 | 5 | 11 | 17 | 22 | 28 | 34 | 39 | 43 | 47 |
| | வி | 43 | 56 | 0 | 42 | 27 | 2 | 37 | 22 | 4 | 8 | 21 | 2 |
| ஆவணி | நா | 45 | 49 | 54 | 60 | 5 | 11 | 16 | 22 | 28 | 33 | 37 | 41 |
| | வி | 1 | 14 | 18 | 0 | 45 | 20 | 55 | 40 | 22 | 26 | 39 | 20 |
| புரட்டாசி | நா | 39 | 43 | 48 | 54 | 60 | 5 | 11 | 16 | 22 | 27 | 31 | 35 |
| | வி | 16 | 29 | 33 | 15 | 0 | 35 | 10 | 55 | 37 | 41 | 54 | 35 |
| ஐப்பசி | நா | 33 | 37 | 42 | 48 | 54 | 60 | 5 | 11 | 17 | 22 | 26 | 30 |
| | வி | 41 | 54 | 58 | 40 | 25 | 0 | 35 | 20 | 2 | 6 | 19 | 0 |
| கார்த்திகை | நா | 28 | 32 | 37 | 43 | 48 | 54 | 60 | 5 | 11 | 16 | 20 | 24 |
| | வி | 6 | 19 | 23 | 5 | 50 | 25 | 0 | 45 | 27 | 31 | 44 | 25 |
| மார்கழி | நா | 22 | 26 | 31 | 37 | 43 | 48 | 54 | 60 | 5 | 10 | 14 | 18 |
| | வி | 21 | 34 | 38 | 20 | 5 | 40 | 15 | 0 | 42 | 46 | 59 | 40 |
| தை | நா | 16 | 20 | 25 | 31 | 37 | 4 | 48 | 54 | 60 | 5 | 9 | 12 |
| | வி | 39 | 52 | 56 | 38 | 23 | 58 | 33 | 18 | 0 | 43 | 17 | 58 |
| மாசி | நா | 11 | 15 | 20 | 26 | 32 | 37 | 43 | 49 | 54 | 60 | 4 | 7 |
| | வி | 35 | 48 | 52 | 34 | 19 | 54 | 29 | 14 | 56 | 0 | 13 | 54 |
| பங்குனி | நா | 7 | 11 | 16 | 22 | 28 | 33 | 39 | 45 | 50 | 55 | 60 | 3 |
| | வி | 22 | 35 | 39 | 21 | 6 | 41 | 16 | 1 | 43 | 47 | 0 | 41 |

குறிப்பு:—ஒருவர் ஜெனித்த தேதியையும், முதல் சக்கரத்தில் அம் மாத ராசியில் குறித்த தொகையையும், பெருக்கி வந்த ஈவு விருப்பாம். அதை நாழிகையாகச் செய்து ஜெனன நாழிகையில் மேற்படி ஈவைக் கழித்து - வந்த மீதியுடன்

| | | | |
|---|---|---|---|
| பங்குனி<br>3-41 | சித்திரை<br>3-41 | வைகாசி<br>4-13 | ஆனி<br>10 |
| மாசி<br>4-12 | இரண்டாஞ் சக்கரம் | | ஆடி<br>5-42 |
| தை<br>5-4 : | | | ஆவணி<br>5-45 |
| மார்கழி<br>5-45 | கார்த்திகை<br>4-13 | ஐப்பசி<br>5-35 | புரட்டாசி<br>5-35 |

இரண்டாவது சக்கரத்தில் அந்த மாதத்திய் குறித்திருக்கின்ற வினாடித் துகையும் கூட்டிச் சேர்த்து வைத்துக் கொண்டு மூன்றாவது சக்கரத்தில் அந்த மாதத்திற்கு எதிரில் கொடுத்திருக்கும் எண்களில் பார்க்க எந்தத் துகையுடன் நெருங்கி வருகிறதோ அதுவே ஜாதகனுடைய ஜென்சுலக்கினமாக வரும் என்று தெரிந்துக் கொள்ளவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| மீனம்<br>4-15<br>பங்குனி | மேஷம்<br>4-15<br>சித்திரை | ரிஷபம்<br>4.45<br>வைகாசி | மிதுனம்<br>5-5<br>ஆனி |
| கும்பம்<br>4-45<br>மாசி | 12-இராசிகளின்<br>இராசி மானம் | | கடகம்<br>5-30<br>ஆடி |
| மகரம்<br>5-5<br>தை | | | சிம்மம்<br>5-15<br>ஆவணி |
| தனுசு<br>-30<br>மார்கழி | விருச்சிகம்<br>5-15<br>கார்த்திகை | துலாம்<br>5-0<br>ஐப்பசி | கன்னி<br>5-0<br>புரட்டாசி |

குறிப்பு:—இந்தவிதமாக இராசியான 12-வீட்டிற்கும் நடக்கும் சிலர் இதைக் கணக்கிட்டு ஜெனன லக்கினம் அறிந்து கொள்வார்கள் எவ்வாறெனில் ஒரு குழந்தை கார்த்திகை மாதத்தில் 5-ந்தேதியில் பகல் 4மணிக்கு ஜனனம் என்றால், அந்நாளில் சூரிய உதயம் 6 மணி என்று வைத்துக்கொண்டால் (ஆங்கில முறைப்படி) காலை 6-00 மணி முதல் 4 மணிவரை மொத்தம் 10-மணியாயிற்று ஒரு மணிக்கு 2-00 நாழிகை வீதம் 10-மணிக்கும் 49-நாழிகை ஆயிற்று மேஷத்திலிருந்து ஒவ்வொரு வீடாக மொத்தம் நாழிகையை எண்ணி எந்த வீட்டில் நாற்பது நாழிகை வருகிறதோ அந்த ராசியே லக்கினம் என்று தெரிந்துக் கொள்ளலாம்.

உதாரணமாக,

| | | |
|---|---|---|
| மேஷம் | 4 | 16 |
| ரிஷபம் | 4 | 45 |
| மிதுனம் | 5 | 15 |
| கடகம் | 5 | 30 |
| சிம்மம் | 5 | 15 |
| கன்னி | 5 | 00 |
| துலாம் | 5 | 00 |
| விருச்சிகம் | 5 | 16 |
| ஆகமொத்தம் | 40 | 51 |

இந்தக் கணக்குப்போ 40 நாழிகை 15 வினாடி விருச்சிக ராசியில் வருவதால் அக்குழந்தையின் ஜெனன லக்கினம் விருச்சிகம் உதயமாகி 15 வினாடி இருப்பு என்று தெரிந்துகொள்ள வேண்டும். அன்றையத்தினம் அந்த மாதத்தில் பஞ்சாங்கத்தைப் பார்த்து எந்த எந்த வீட்டில் எந்தெந்த கிரகங்கள் இருக்கிறதோ அதன்படி பலன் சொல்ல வேண்டும் குழந்தை ஜெனனமான தேதியில் எந்த நட்சத்திரம் இருக்கிறதோ அந்த நட்சத்திரத்தில் சந்திரனிருப்பது தான் ராசியாகும் ஒவ்வொரு வீட்டிலும் கிரகங்கள் வசித்து வரும் கால நிர்ணயம் அடியிற் குறித்துள்ளபடி அறிந்து கொள்ளவும்.

# ஒவ்வொரு வீட்டிலும் நவக்கிரகங்கள் சஞ்சரிக்கும் காலம்

| கிரகங்களின் பெயர் | சஞ்சரிக்கும் காலம் | |
|---|---|---|
| 1. சூரியன (ஞாயிறு) | 1 மாத காலம் | சூரியன்-பிதுர்காரகன் |
| 2. சந்திரன் (திங்கள்) | 2கால் நாள் மட்டும் | சந்திரன்-மாதுர்காரகன் |
| 3. செவ்வாய் (அங்காரகன்) | 1அரை மாதம் | செவ்வாய்-சகோதரகாரகன் |
| 4. புதன் | 1 மாதம் | புதன்-வித்யாகாரகன் |
| 5 வியாழன் (குரு) | 1 வருஷம் | வியாழன் புத்திரகாரகன் |
| 6. வெள்ளி (சுக்கிரன்) | 1அரை மாதம் | சுக்கிரன்-களத்திரன் |
| 7. சனி | 2 வருஷம் | சனி-ஆயுள் காரகன் |
| 8 இராகு | 6 மாதம் | இராகு மாதா பிதாகாரகன் |
| 9. கேது | 1 அரை வருஷம் | கேது-மோக்ஷகாரகன் |

குறிப்பு;- சந்திரன் ஒவ்வொரு வீட்டிலும் இரண்டேகால் நாள் சஞ்சரிப்பதால் ஜாதகன் எழுதும் பொழுது பஞ்சாங்கத்தைப் பார்த்துச் சந்திரனிருக்கும் ஸ்தானத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும்

ஒரு ஜாதகனுக்கு லக்னமே உயிர் இரண்டாவது வீடு குடும்ப ஸ்தானமும் தாக்குஸ்தானமும், மூன்றாவது சகோதரஸ்தானமும் தீர ஸ்தானமும் நான்காவது மாதுருஸ்தானமும் சுகஸ்தானமும் ஐந்தாவது புத்திரஸ்தானம் ஆறாவது சத்ருஸ்தானமும் ஏழாவது களத்திரஸ்தானம் எட்டாவது ஆயுள் ஸ்தானம் ஒன்பதாவது, பிதுர்ஸ்தானமும்; பாக்கியஸ்தானமும் பத்தாவது ஜீவனஸ்தானம் பதினோராவது மூத்த சகோதரஸ்தானமும், லாபஸ்தானமும் பன்னிரெண்டாவது வீடு சயனஸ்தானமும் விரயஸ்தானமும் இதுபோலவே கிரகங்களிருக்கும் வீட்டையும் அவைகளின் நட்பு, ஆக்ஷி, உச்சம் பகை நீசமென்று சொல்லப்படும் விதிகளை அனுசரித்து சுபா சுபபலன்களைத் தெரிந்து சொல்லவேண்டும்,

## 12-இராசிகளும் நட்சத்திர பாதங்களும்

| 12 இராசிகளின் பெயர் | நட்சத்திரங்களின் பெயரும் பாகமும் | ஆகமொத்தம் |
|---|---|---|
| 1 மேஷம் | அசுவனி 1 பரணி, கிருத்திகையின் முன் கால் | 2 கால் |
| 2 ரிஷபம் | கிருத்திகையின் பின் முக்கால் ரோகிணி 1. மிருகசீரஷம் முன் ½ | 2 கால் |
| 3 மிதுனம் | மிருகசீரஷம் பின் ½ திருவாதிரை. 1 புனர்பூசம் முன் முக்கால் | 2 கால் |
| 4 சடகம் | புனர்பூசம் பின் கால் பூசம் 1 ஆயில்யம் 1. | 2 கால் |
| 5 சிம்மம் | மகரம் 1 பூரம் 1 உத்ரமுன் கால் | 2 கால் |
| 6 கனனி | உத்திரபின் முக்கால் அஸ்தம் 1 | 2 கால் |
| 7 துலாம் | சித்திரை மூன் அரை | 2 கால் |
| 8 விருச்சிகம் | சித்திரையின் ½ சுவாதி 1 விசாகம் முன் முக்கால் | 2 கால் |
| 9 தனுசு | விசாகம் பின் காரு அனுஷம் 1 கேட்டை 1 | 2 கால் |
| 10 மகரம் | மூலம் 1 பூராடம் 1. உத்திராடம் முன் கால் | 2 கால் |
| 11 கும்பம் | உத்திராடம் பின் முக்கால் திருவோணம் 1 அவிட்டம் முன் அரை | 2 கால் |
| 12 மீனம் | அவிட்டம் பின் ½ சதயம் 2 பூரட்டாதி முன் முக்கால் பூரட்டாதி கால் பன் உத்திரட்டாதி 1 ரேவதி 1. | 2 கால் |

ஆகமொத்தம் பன்னிரெண்டு இராசிகளுக்கும், ஒவ்வொரும் இராசியின் மூன்று நட்சத்திரங்களும் அவைகளின் பாகமும் மேற்குறித்தபடி தெரிந்துகொள்ளவேண்டும்.

குறிப்பு:-முக்கால் என்றால் நட்சத்திரத்தில் ஓராவது பாதமாகும், பின் கால் என்றால் நட்சத்திரத்தின் நான்காவது பாதமாகும் முன் அரை அன்றால் நட்சத்திரத்தின் முதல் இரண்டாவது பாதகங்களாகும் பின் அரை என்றால் நட்சத்திரத்தின் மூன்றாவது நான்காவது பாதங்களாகும் முன் முக்கால் என்றால் நட்சத்திரத்தின் முதல் இரண்டாவது மூன்றாவது பாதங்களாகும் பின் முக்கால் என்றல் நட்தேத்திரத்தின் இரண்டாவது, மூன்றாவது பாதங்களாகும் என்று தெரிந்துக்கொள்ள வேண்டும் முக்கால் நட்சத்திரத்திற்கு தலையற்ற நாள் என்றும் அரை நட்சத்திறத்திற்கு உடலற்ற நாள் என்றும் அரை நட்சத்திறத்திற்குத்தலை உடல் கால் இவைகள் உண்டு நினைத்தால் கூடாது என்பது நட்சத்திரத்திற்குப் பெயர் அற்ற என்றால் முழுப் பாகத்திலிருந்து அறுக்கப்பட்டதனால் அற்ற என்று பெயர் வத்தது இருபத்தேழு நட்சத்திரங்களையும் பன்னிரண்டு ராசிகளுக்குபி பங்கிட்டு கொடுக்கப்பட்டதனாலும், அற்றும் என்றும் பெயர் வந்தது என்று தெரிந்துக்கொள்ள வேண்டும்.

குறிப்பு:-இது போலவே அவர்கன் ஜாதக அமைப்பின் படி நவக்கிரகாதிபதிகள் எவ்வாறு எந்த வீட்டில் அமைந்திருக்கிறதோ அதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதாம்.

ஒரு குழத்தை ஜெனனமானால் அக்குழந்தைக்கு நாமகாரணம் செய்ததனால் கீழ்க்கண்டபடி நட்சத்திரங்களின் (ஜென்ம நட்சத்திரம்) முதலெழுத்தை யறிந்து நாமகாரணம் செய்வது நலம் இவ்வாறு நாமகரணம் செய்வதனால் ஒரு குழந்தைக்குப் பிறந்த ஜாதகமே இல்லாவிடினும் பெயரைப் பார்த்துப் பலாபலன்கள் சொல்ல நட்சத்திரப் பெயர் பொருத்தமாக இருக்கும் என்பதாகும்.

## நாமகர்ண நட்சத்திரங்களும்

## எழுத்துக்களும்

| நெ. | நட்சத்திரங்களின் பெயர் | நாமகர்ண எழுத்துக்கள் | | | |
|---|---|---|---|---|---|
| 1 | அஸ்வனி | சு | சே | சோ | ல |
| 2 | பரணி | லி | லு | லெ | லே |
| 3 | கிருத்திகை | அ | இ | உ | எ |
| 4 | ரோகிணி | ஒ | வ | வி | வு |
| 5 | மிருகசீரிடம் | வே | ஒ | கா | கி |
| 6 | திருவாதிரை | கு | கே | ஙு | ச |
| 7 | புனர்பூசம் | கே | கோ | க | கி |
| 8 | பூசம் | கூ | கே | கோ | ட |
| 9 | ஆயில்யம் | டி | டு | டெ | டொ |
| 10 | மகம் | ம | மி | மு | மெ |
| 11 | பூரம் | மோ | டா | டு | டு |
| 12 | உத்திரம் | டே | டோ | பா | பி |
| 13 | அஸ்தம் | பு | ச | ண | ட |
| 14 | சித்திரை | பே | போ | ரா | ரி |
| 15 | சுவாதி | ரு | ரே | ரோ | த |
| 16 | விசாகம் | தி | து | தெ | தொ |
| 17 | அனுஷம் | நா | நி | நு | நெ |
| 18 | கேட்டை | நொ | ய | யி | யு |
| 19 | மூலம் | ஏ | போ | பா | பி |
| 20 | பூராடம் | பூ | தா | ப | ட |
| 21 | உத்திராடம் | பெ | போ | ஜ | ஜி |
| 22 | திருவோணம் | சூ | சே | போ | க |
| 23 | அவிட்டம் | க | கி | கு | கே |
| 24 | சதயம் | கோ | ச | சி | சூ |
| 25 | பூரட்டாதி | சே | சோ | த | தி |
| 26 | உத்திரட்டாதி | து | ச | ஞா | த |
| 27 | ரேவதி | தெ | தொ | சா | சி |

## திசா புத்திகளும் தசையும்

| நெ. | கிரகதசை | திசா நட்சத்திரங்கள் | | | தசை காலமொத்தம் |
|---|---|---|---|---|---|
| 1. | சூரிய திசை | கிருத்திகை | உத்திரம் | உத்திராடம் | 6 வருஷம் |
| 2. | சந்திர திசை | ரோகிணி | அஸ்தம் | திருவோணம் | 10 ,, |
| 3. | அங்கார திசை | மிருக சீரிஷம் | சித்திரை | அவிட்டம் | 7 ,, |
| 4. | இராகு திசை | திருவாதிரை | சுவாதி | சதயம் | 18 ,, |
| 5. | குரு தசை | புனர் பூசம் | விசாகம் | பூரட்டாதி | 16 ,, |
| 6. | சனி தசை | பூசம் | அனுஷம் | உத்திரட்டாதி | 19 ,, |
| 7. | புதன் தசை | ஆயில்யம் | கேட்டை | ரேவதி | 17 ,, |
| 8. | கேது தசை | மகம் | மூலம் | அசுவனி | 7 ,, |
| 9. | சுக்கிர தசை | பூசம் | பூராடம் | பரணி | 20 ,, |
| | | | | ஆக மொத்தம் | 120 |

# திசாபுத்தி

திசா நாதனுடைய வருஷத்தைப் புத்திநாதனுடைய வருஷத்தால் பெருக்கி 120 ஆல் வகுக்க வரும் ஈவே வருஷமாம் மிகுதியான மீதத்தை முறையே 20 30 60 ஆகிய எண்களால் பெருக்கி அந்தத் தொகைகளை மேற் காட்டியபடி 12-க்குவரும் ஈவுகளே மாதம். நாள் நாழிகை என்று தெரிந்துகொள்ளவேண்டும் பாகநாதனுக்குரியவை என்று தெரிந்துகொள்ளவேண்டும்பாகநாதனுக்குரியகாலங் களை அந்தர நாதனுக்குரிய திசா வருஷத்தால் பெருக்கி மேலே கூறிய பிரகாரம் கணக்குச் செய்தால் அவ்வந்தர நாதனுக்குரிய காலங்களைத் தெரிந்து கொள்ளலாம் சூட்சமம் அதி சூட்சமம் பிராண காலங்களுக்கும் இது போலவே கணக்கும் பார்த்துத்தெரிந்துககாள்ளவேண்டும்.

ஒரு குழந்தை பிறந்த காலத்தில் எந்த திசை ஆரம்ப மாயிற்றோ அந்த திசைக்குரிய வருஷத்தொகையிலே கெற்பத்தில் செல்லு போக பாக்கி யிவ்வளவென்றிய வேண்டிய விபரம் ஜென்ம நட்சத்திரம் குழந்தை ஜெனன மான தேதியிலாவது அதற்கு முன்தேதியிலாவது எப்போது ஆரம்பித்து ஜெனனமான தேதியிலாவது அதற்கு மறு தேதியிலாவது எதுவரைக்கு யிருக்கிறதோ வென்று பஞ் சாங்கத்தை பார்த்து ஒன்று சேர்க்கப்பட்ட மொத்த நாழி கை விகடிகையே அந்தநக்ஷத்திரத்துக்கு ஆதியந்தம்என்று பேராம் அந்த ஆதியந்த நாழிகைவிகடிகைபோருக்கு அந்த நட்சத்திரத்திற்குரிய திசை வருஷத்தைப் பங்கிட்டு நாழிகை ஒன்றுக்கு வருஷம் இவ்வளவு மாதம், நாள் நாழிகை விக டிகையென்று அறிந்து தெரிந்து கொள்ளவேண்டும் இதை ஜெனன காலம் வரையில் ஷ நட்சத்திரத்தில் செல்லான நாழிகையில் பொங்கி வந்தது எவ்வளவு வருஷம், மாதம், நாள், நாழிகை, விகடிகையென்று தெரிந்து கொள்ள வேண்டும். இதை ஜெனன காலம் வரையில் ஷ நட்சத் திரத்தில் சொல்லான நாழிகையினால் பெருக்கி வந்தது எவ்வளவு வருஷம், மாதம் முதலியதையறிந்து அதை கெற்பச் சொல்லாக வைத்துக் கொண்டும் அந்த திசையில்

மொத்தவருஷத்தில் கழித்து வந்த மிச்சமானது வருஷம் மாதம் முதலியவை அந்த திசையில் பாக்கியிருந்த காலம் என்று அதற்குமேல் முன் கூறிய கிரமப்படிக்குள்ள திசைக ளையும் வயசுகளையும் காணுவதே திசையாகும் ஒருவருக்கு ஜெனன காலத்தில் திசை செவ்வாயானால் அதற்கடுத்த திசைகள் இராகு வியாழன், சனி, புதன், கேது, சுக்கிரன், சூரியன் சந்திரன் என்று வரிசையாயறிய வேண்டும் மேற் சொல்லியபடி கெற்பத்தில் சொல்லானது போக பாக்கியறி வதற்கு கணக்கு விபரம் ஜெனன நட்சத்திரத்தினாயந்த நாழிகைத்தொகையில் ஜனனம்வரை சென்ற நாழிகைக்கும் அந்த நட்சத்திரத்தின் கிரக தினச ஞூத்துக்கும் பெருக்கி ஆயந்த நாழிகைத்தொகைக்கு கொடுக்க வந்தது ஞூமீதத் தை 10-ல் பெருக்கு முன்போல் கொடுக்க வந்ததுமீ மாசத் தை 1-ல் பெருக்கி முன்போல் கொடுக்க வந்தது நாள் மாதத்தை ஞூல் பெருக்கி முன்போல கொடுக்க வந்தது நாழிகை மாசத்தை ஞூ பெருக்கி முன் போல் கொடுக்க வந்தது விநாடியாம்.

ஒவ்வொரு கிரகத்தின் திசையில் அந்தக்கிரக முதலிய நவக்கிரகங்களும் பலனை பகுந்துண்ணவந்திருக்கும் உள்ள பிரிவுகளாவன ஒவ்வொரு திசைக்கும் ஒன்பது பித்தி களென்றும் புத்தியொன்று ஒன்பது அந்தரமென்றும் அந்த ரம் ஒன்றுக்கு ஒன்பது சூக்ஷ்மாந்தரமென்றும் சூக்ஷ்மாந்தர மொன்றுக்கு ஒன்பது பிராண பிரிவுகளென்றும் வரும்.

புத்திக்கு அபகாரமென்றும் அந்தரத்திற்கு சித்திரமென் றும் ஜெயராம்

## சூரியதிசை 6 ஞூ

சூரியபுத்தி 3 மாதம் 18 நாள் :-இப்புத்தியில் அரச னால் வெகுமதியும் காடுமலை இவற்றின் சஞ்சாரத்தையும், தனவருமானத்தையும், சுரம் உஷ்ண வியாதி இவைகளை யும் பிதுரர் முதலியோர் வியோக பயத்தையும் அடையக் புத்திநாதனாகிய சூரியன் சுபக்கிரகங்களின் சேர்க்கை அல் லது பார்வை பெற்றிருந்தாலும் சுபகாரியமும் சௌக்கிய மான வாழ்வு முண்டாகும் இராகு, கேது, சனி, பார்வை அல்லது சேர்க்கை பெற்றிருந்தால், கஷ்டமும் மனச்சஞ்ச லமும் கொடுப்பதுடன், தனது மாதா, பிதா, பிதுர்வர்க்கத் தில் சூதகச் சம்மந்தமான காரியங்களை கொடுப்பான்.

சந்திரபுத்தி:—6-ம் மாதம் புத்திநாதனாகிய சந்திரன் கேந்திர திரிகோணத்திலும், வாக்கு ஸ்தானத்திலும் இருந்தால், சத்துருநாசம் துக்க நிவர்த்தி தனப்பிராப்தி விவசாய விருத்தி. புதுமனை ஆரம்பம் வித்தியாரம்பம் இவைகள் உண்டாகும் அக்கினி பயம் நிவாரணமாகும் ஆனால் திசாநாதன் 12, 8 6 இந்த வீடுகளிருந்தான் வறுமையும் னக்கஷ்டமும் உண்டாகும் என்பதாம்.

செவ்வாய் புத்தி-4 மாதம் 6 நாள்:-புத்திநாதனாகிய செவ்வாய். சுபக்கிரகங்களின் சம்மந்தமானாலும் அல்லது பார்வை பெற்றாலும் கீர்த்தியும் வீடு பூமி தனப்பிராப்தி உண்டாகும். ஆனால் புத்திநாதனாகிய செவ்வாயபகவான் இராகு கேது சனி அவர்களுடன் சம்மந்தப்பட்டால் வியாதி அலைச்சல், சத்துருபீடை பந்து ஜனவிரோதம். பூமி விரையம் முதலிய கஷ்டங்கள் உண்டாகும் என்பதாம்.

இராகு புத்தி:- 10 மாதம் 24 நாள்:-புத்திநாதனாகிய இராகு பகவான் மேஷம் ரிஷபம், கடகம், கன்னி இந்த இராசி வீடுகளிலிருந்தும் சுபகிரகம் பார்வை பெற்றால்நல்ல லாபத்தைக் கொடுப்பான். சனி, இராகு, கேது முதலிய கிரகங்களின் பார்வை பெற்றாலும் சேர்க்கை பெற்றாலும் பெரிய விபத்து விஷ பயம் கொடிய நோய், பைத்தியம் முதலிய வியாதிகளைக் கொடுப்பான்

குருபுத்தி:-9 மாதம் 18 நாள்:—புத்திநாதனாகிய குரு பகவான் இலக்கினத்திலும் திரிகோண வாக்கு ஸ்தானத்திலுமிருந்தால் இடைவிடாத தேவபூஜை சத்துருநாசம் பிராமணர், குரு தெய்வபக்தி இவர்களின் வழிபாடுகளுண்டாகும். ஆனால் புத்திநாதன் சனி, இராகு, கேது முதலிய கிரகங்களின் பார்வை பெற்றாலும் சேர்க்கையாயிருந்தாலும் லெவிதமான கஷ்டமும், வறுமையும் ஓயாக்கலையையும் கொடுப்பான்.

சனிபுத்தி:- 11 மாதம் 12 நாள் புத்திநாதனாகிய சனி பகவான் நட்பு, ஆக்ஷி உச்சஸ்தானத்திலிருந்து, கேந்திராதிபதியாகிய சுபகிரகங்களின் பாரவை பெற்றிருந்தால் உத்தியோகம் தொழில் அபிவிர்த்தியும் சகலமான நன்மையையும் கொடுப்பான். புத்திநாதன் பகை. நீச்ச ஸ்தானத்

திலிருந்தால் தன நாசத்தையும் புத்திரப் பிரிவையும் களத்திர ரோகத்தையும், சரீரபீடையும் மிருகாதிகளின் பயத்தையும் கொடுப்பான் என்பதாம்.

புதன் புத்தி:-10·மதாம் 6-நாள் புத்திநாதனாகிய புதன் லக்கினத்திலும் வாக்கு ஸ்தானத்திலும் கேந்திர திரிகோணம் பெற்றிருந்தால் நற்புகழையும் நற்பலனையும் கொடுப்பான் ஆனால் புத்திநாதன் நீச்சம் பெற்று மறைவு ஸ்தானத்திலிருந்தால் விகார வியாதியையும் செய்யும் காரியங்களுக்கு இடையூறும் சரீரத்தில் நோயும் குடும்பத்தில் மனக்கஷ்டத்தையும் கொடுப்பான் என்பதாம்.

கேது புத்தி:- மாதம் 2 நாள் புத்திநாதனாகிய கேது பகவான் சுபகிரகங்களின் பார்வை பெற்றாலும் அல்லது சம்மந்தப்பட்டாலும் ஞானம் கல்வி, புகழ் முதலிய நன்மைகளையே கொடுப்பான் ஆனால் புத்திநாதன் சனி இராகு சூரியன் செவ்வாய் இக்கிரகங்களின் பார்வை பெற்றாலும் சம்மந்தப்பட்டாலும் மித்திரர்களை இழக்க நேரிடும் சந்துக்களிடத்திலும் குடும்பத்திலும் சச்சரவு ஏற்படும் இருப்பிடத்தை விட்டுப்பிரிந்து வாழநேரிடும் சத்ருபயம், தனநாசம் சரீரப்பீடை முதலிய வியாதிகளையும் கொடுப்பான் என்பதாம்

சுக்கிரபுத்தி:-ஒரு வருஷம்; புத்திநாதனாகிய சுக்கிரன் சுபக்கிரகங்களின் பார்வை பெற்று நட்பு உச்சஸ்தானத்திலிருந்தால் கல்வி ஞானத்தையும் தர்மகுணத்தையும் பல விதமான நன்மைகளையும் கொடுப்பான். ஆனால் புத்திநாதன் சனி, இராகு கேது அங்காரகன் பார்வை பெற்றிருந்தாலும் அவர்கள்டன் சம்மந்தப்பட்டிருந்தாலும், சரீரத்தில் நோயும் விவசாயத்தில் நஷ்டத்தையும், தானிய நாசத்தையும் மனையில் மனைவி மக்களின் அசௌக்கியத்தையும் கொடுப்பான் என்பதாம்.

## சந்திர திசை வரு 10

சந்திர புத்தி:-10-மாதம்:-புத்திநாதனாகிய சந்திரன் மறைவு ஸ்தானந்திலிருந்து சனி இராகு, கேது, முதலிய கிரகங்களின் பார்வை பெற்றிருந்தாலும் சம்மந்தப் பட்டிருந்தாலும் அனேக விதமான புணியையும் கொடுப்பான் புத்திநாதன் சுபக்கிரகங்களின் பார்வை கேந்திர திரிகோண

ஸ்தானத்திலிருந்தால் களத்திரப் பிராப்தியும் மக்கட் பேற்றையும் பிராம்மண சேர்க்கையும் மாதாவுக்கு உயர்ந்த பல சித்தியையும், நற்சுகத்தையும் கொடுப்பான் என்பதாம்.

செவ்வாய் புத்தி 7-மாதம்;-புத்திநாதனாகிய செவ்வாய் பகவான் ஆக்ஷி உச்சம் நட்பு ஸ்தானத்திலிருந்து சுபக்கிரகங்களின் பார்வையும் சேர்க்கையையும் பெற்றால் பந்துமித்திரர்களின் சோக்கைரிந் நட்பையும் கொடுப்பான் ஆனால் புத்திநாதன் நீச்சஸ்தானத்திலிருந்தால் பித்த உஷ்ண இரத்த சம்மந்தமான வியாதிகளையும், மனக்கிலேசத்தையும் தன் நாசத்தையும் கொடுப்பதுடன் இதேக விதமான மானக்கேடுகளையும் உண்டு பண்ணுவான் என்பதாம்.

இராகுபுத்தி:-18-மாதம் புத்திநாதனாகிய இராகு ஆக்ஷி நட்பு ஸ்தானத்திலிருந்தால் குரு சந்திரன் இக்கிரகங்களின் பார்வை பெற்றால் நற்பலன்களையே கொடுப்பான். ஆனால் புத்தி நாதன் பகை ஸ்தானத்திலிருந்து சனி, கேது அங்காரகன் பார்வை பெற்றால் மனக்கிலேசத்தையும் கலகத்தையும் பந்துக்களுக்குப் பிணியையும் பித்தவாதப் பிணியையும் பூமியிற் பயத்தையும் உண்டுபண்ணுவான் என்பதாம்.

குருபுத்தி;-16-மாதம் புத்திநாதனாகிய குருபகவான் வாக்குஸ்தானத்திலும் திரிகோணத்திலும் இருந்து ஆக்ஷீ நட்புப்பெற்றிருந்தால், தானதருமங்களையும் செய்து வஸ்திர பூஷனாதிகளைப் பெற்று சுகமுடன் வாழ்வான் ஆனால் புத்திநாதன் சரநாதனாகிய சந்திரனுக்கு எட்டாமிடத்திலும் பன்னிரெண்டாமிடத்திலுமிருந்தால் குடும்பத்திலும், வெளியிலும் கலகத்தையும் வீண்செலவையும் ஓயாத கவலையையும் கொடுப்பான் என்பதாம்.

சுடபுத்தி;-19 மாதம்; புத்திநாதனாகிய சனி பகவான் ஆக்ஷி, உச்சம், நட்பு வாக்குஸ்தானத்திலிருந்து சுபக்கிரகங்களின் பார்வை பெற்றால் வியாபார விருத்தியும், உத்தியோக நன்மையும் புகழ்ச்சியும் தனலாபமும் உண்டு ஆனால் புத்தி நாதனாகிய சனிபகவான் திசா நாதனாகிய சந்திரனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் அனேக வியாதிகளை அடைவான். வேண்டிய நண்பர்களுக்கு விரோதமும் குடும்பத்தின் சஞ்சலமும், மனக்கவலையும் கொடுப்பான் என்பதாம்.

புதன் புத்தி:—17 மாதம் புத்திநாதனாகிய புதபகவான் வாக்கு ஸ்தானத்திலிருந்து ஆக்ஷிபெற்றால் சங்கீத வித்தையில் நல்ல ஞானமும் சரீர சுகத்தையுப் தனலாபத்தையும் ஆபரணம் முதலிய சகல சம்பத்துக்களையும் நற்குணத்தையும் ஆயுள் விருத்தியையும் கொடுப்பான்.

கேது புத்தி:-7-மாதம் புத்தி தானாகிய கேது பகவான் திசா நாதனாகிய சந்திரனுக்கு ஆறுபதினொன்றாம் ஸ்தானத்திலிருந்தால் சுபக்கிரகங்களின் பார்வையினால் தெய்வ பக்தியும் மனமகிழ்ச்சியுமுண்டாகும் ஆனால் புத்தி நாதனான கேது திசா நாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்து நீச்சம் பகை பெற்றிருந்தால் தனநாதம் இடம் விட்டு இடம் மாறுதல் ஜலத்தினால் கெண்டம் தமது ஊழியர்களுக்கு குடும்ப நாசம் இவைகளைக் கொடுப்பான் என்பதாம்.

சுக்கிர புத்தி:-20-மாதல் புத்திநாதனாகிய சுக்கிரன் ஆக்ஷி உச்சத்திலிருந்து சுபக்கிரகங்களின் சம்மந்தமானால் கிணறு குளம் முதலிய நீர் நிலைகள் வெட்டுவான் வண்டி முதலிய வாகனாதிகள் உண்டு பிதுர் ராச்சியத்தின் பூஸ்திதிகளை அடைவான் பசு கன்று காலி முதலியவைகள் விருத்தி அடையும் புத்திநாதனான சுக்கிரன் திசா நாதனாகிய சந்திரனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் மனக்கவலையும் வறுமையும் கொடுப்பான் என்பதாம்.

சூரியபுத்தி:-6-மாதம் புத்தி நாதனாகிய சூரியன் திசா நாதனாகிய சந்திரனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்து திரிகோண ஸ்தானத்திலிருத்து பகை நீச்சம் ஸ்தானத்திலிருந்தால் வறுமையும் மனச்சஞ்சலத்தையும் கொடுப்பான். ஆனால் புத்திநாதன் சுபக்கிரகங்களினால் பார்வை பெற்றாலுப் சம்மந்தப்பட்டாலுப் சுகசௌக்கிய தேகமுடையவனாயும் தனக்கும் பகைவர்கள் இல்லாதவனாயும் கன தனவான்களின் சகாயம் பெற்றவனாகவும் வாழ்வான் பெற்றவனாகவும் வாழ்வான் என்பதாம்.

## அங்காராக திசை 7 வூ

அங்காரக புத்தி புத்தி;-1-மாதம் 27-நாள் புத்திநாதனாகிய செவ்வாய் பகவான் தன்னுடைய சொந்த வீட்டிலிருந்து ஆக்ஷிபெற்றால் சகலவிதமான நன்மைகளையும் பூமி மனை முதலிய சம்பத்துக்களையும் நட்பு ஸ்தானத்திலிருந்தால் நல்ல லாபத்தையும் கொடுப்பான் ஆனால் புத்தி நாதன் நீச்சஸ்தானத்திலிருந்து இராகு கேது இவர்களின்

பார்வை பெற்றால் அக்கினி' அரசர் கள்வர் இவர்களால் பயமும் விரோதமுமுண்டாகும் என்பதாம்.

இராகு புத்தி: 1 வருஷம் 18 நாள்; புத்திரநாதனாகிய இராகு திசாநாதனாகிய செவ்வாய் திரிகோண கேந்திர ஸ்தானத்திலிருந்தால் சுபக்கிரகங்களும் பார்த்தால் திடகாத்திரத்தையும் பொருள் சேர்க்கையையும் கொடுப்பான் புத்திநாதன் ஜெனன லக்கினத்திற்கு மறைந்து விரையமுண்டு தன்னுடைய குரு பந்துக்கள் இவர்களுக்கு நஷ்டத்தைக் கொடுப்பான் என்பதாம்.

குருபுத்தி:-11 மாதம் 6-நாள்: இப்புத்தியில் பிராமணர்களையும் வித்துவான்களையும் போற்றுவான் புண்ணிய தீர்த்தயாத்திரை செய்தான் மக்கட்பேரையும், நண்பர்களையும் அடைவான் எப்போதும் தெய்வபக்தியாய் இருந்து வருவான் என்பதாம்

சனிபுத்தி:-13 மாதம் 9 நாள்: புத்திர நாதனாகிய செவ்வாய் திசாநாதனாகிய செவ்வாய்க்கு மறைவு நீச்சஸ்தானத்திலிருந்தால் பலவிதமான கஷ்டங்களையும்! ரோகங்களையும் அடைவான் ஆனால் புத்திநாதன் சுபக்கிரகங்களுடன் சம்பந்தப்பட்டால் மனோதைர்யத்தையும் தனலாபத்தையும் கொடுப்பான்.

புதன்புத்தி:-11 மாதம் 27 நாள் புத்திரநாதனாகிய புதன் கேந்திர திரிகோண ஸ்தானத்தில் ஆஷி நட்புப் பெற்றுத் திசாநாதனாகிய செவ்வாய் ஜெனன லக்கினத்தில் உச்சம் பெற்றிருந்தால் தனலாபம், வியாபாரத் தொழில் விருத்தியும் கொடுப்பான் புத்திநாதன் மறைவு ஸ்தனத்திலிருந்தால் வறுமை சரீரத்தில் பிணி மனக்கஷ்டத்தை தனநாசத்தையும் கன்று பசு முதலியவைகளின் நஷ்டத்தையும் சகோதர பீடையும் கொடுப்பான் என்பதாம்.

கேதுபுத்தி:-4மாதம் 27 நாள் புத்திரநாதனாகிய கேது பகவான் பகைமை ஸ்தானத்திலிருந்து நீச்சம் பெற்று ஜெனன லக்கினத்திற்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் இடி அக்கினி விஷம் இவற்றாகும் பீதியையும் தன நாசத்தையும் ஊரைவிட்டு ஊர் போகுதலும் குடும்பத்தில் மனைவியின்

விரோதத்தையும் கொடுப்பான் புத்திநாதன் தன் சொந்த வீட்டிலிருந்து ஆளப்பெற்றால் கொஞ்சம் கஷ்டம் நீங்கும் என்பதாம்.

சுக்கிரபுத்தி:-14 மாதம் திசா நாதனாகிய சுக்கிர பகவான் தன் சொந்த வீட்டில் இருந்து நம்பப்பெற்றாலும் சுபக்கிரகங்களின் பார்வை பெற்றாலும் தனது சொந்தத் தொழிலில் கொஞ்சம் விருத்தி செய்வான் ஆனால் பத்திநாதன் பகைவம் ஸ்தானத்திலிருந்து சனி. இராகு கேது இவர்களின் பார்வை பெற்றாலும் சம்மந்தப்பட்டாலும் சேகம் வீட்டுத் தேசமவசிப்பான் கள்வரால் கஷ்டம் அடைவான் பந்துமித்திரர்களுக்கு ஆனியுண்டு என்பதாம்.

சூரிய புத்தி:-4 மாதம் 6-நாள் புத்திநாதனாகிய சூரியன் சுபக்கிரகங்ளால் சம்மந்தப்பட்டு திசா நாதனாகிய செவ்வாய்க்கும் ஜெனன லக்கினத்திற்கும் உச்சம் ஆக்ஷி பெற்று வாக்கு ஸ்தானத்திலிருந்தால் அரசனுக்குச் சமான மான மதிப்பைப் பெறுவான் எந்த விஷயத்தில் தலையிட்டாலும் ஜெயம் அடைவான் தன்சொந்த பந்து ஜனங்களுக்கு தன தானியவிருத்தி யுண்டுபண்ணுவான் ஆனால் திசா நாதன் பகைமை ஸ்தானமானது விரயஸ்தானமாவது பெற்றிருந்தால் திசா நாதனால் சொற்பத்தன நாசமுண்டு என்பதாம்.

சந்திரபுத்தி:-7 மாதம் புத்திநாதனாகிய சந்திரன் ஆக்ஷி பெற்று ஜெனன லக்கினத்திற்கு 6,8,12-ம் இயத்திலிருந்தால் பலவிதமான தனபிராப்தியுண்டு பத்திரர்களைப் பெற்று வாழ்வான் வஸ்திரம் ஆபரணம் புதுமனை முதலிய சம்பத்துக்களையும் கொடுப்பான் ஆனால் புத்திநாதன் பகை நீச்சம் விரைய ஸ்தானத்திலிருந்து திசா நாதனாகிய அங்காரகனைப் பார்த்தால் மனக்கலவரம் வறுமை குடும்பத்தில் மனக்கஷ்டம் முதலியவைகளைக் கொடுப்பான் என்பதாம்.

## இராகு மகா திசை 18-வருஷம்

இராகு புத்தி:-32 மாதம் 12-நாள் புத்திநாதனாகிய இராகு பகவான் தன்னுடைய சுயபுத்தியில் நல்ல பலன்களையும் நல்ல வார்த்தைகளையும் கொடுப்பதுடன் தனது குடும்பத்தில் சுபகாரியங்களையும் நடத்துவான் ஆனால் சுக்கிரன் விரயஸ்தானத்திலிருந்தாலும் சுபக்கிரகங்களின் பார்வை பெறாவிடினும் தன்னுடைய மனை பூமி தன்னை விட்டு நீங்கிதேசம் விட்டு தேசம் ஓடும்படி செய்தாலும் துஷ்

டர்களால் உபத்திரவமும் கெட்ட பெயரும் விஷத்தினால் பயமும் கொடுப்பான் என்பதாம்.

குருபுத்தி; 28-மாதம் 24-நாள் புத்திநாதனாகிய குரு பகவான் ஆக்ஷிபெற்று வாக்கு ஸ்தானத்திலிருந்தாலும் கேந்திர திரிகோணத்திலிருந்தாலும் சுகஜீவியாய் வாழ் வான். தெய்வ பூஜை செய்வான் பிணி முதலிய நோயில்லா மல் ஜீவிப்பான். உயர் சம்பத்தை அடைவான் ஆனால் ஜெனன லக்கினத்திற்கு 8, 12-ம் இடத்திலிருந்து நீச்சம் அடைந்து விரயஸ்தானத்தில் இருந்தால் மனக்கிலேசம் நஷ்டம் வறுமை முதலிய கஷ்டங்களைக் கொடுப்பான் என்பதாம்.

சனிபுத்தி;-34-மாதம் 6-நாள் புத்திநாதனாகிய சனி பகவான் பகை நீச்சஸ்தானத்திலிருந்து திசாநாதனான சந்திரனின் பார்வை பெறாவிடில் வாதபித்த ரோகங்களும், கண் மார்பு வலியும் உண்டாகும் குடும்பத்தில் சச்சரவுண் டாகும் சகோதர சகோதரிகளிடம் வெறுப்பும் கலகமும் உண்டாகும் ஆனால் சுபகிரகங்களின் பார்வை பெற்றால் நன்மை உண்டாகும் என்பதாம்.

புதன் புத்தி:-30-மாதம் 18- நாள் புத்திநாதனாகிய புதன் திசாநாதனாகிய இராகுவிடம் சம்மந்தப்பட்டாலும் பகை விரயஸ்தானத்திலிருந்தாலும் பலவிதமான கலகமும் கஷ்டமும் பிணியும் கொடுப்பான் புத்திநாதன் சொந்த வீட்டிலிருந்து ஆசிபெற்று ஜெனன லக்கினத்திற்கு 3, ,8,12-ம் இடங்களிலிருந்தால் புத்திரப்பேறும் மன மகிழ்ச்சியும் எடுத்த காரியமெல்லாம் இடையூறின்றி இனி தாகவே முடியும் என்பதாம்.

கேது புத்தி;-12 மாதம் 18-நாள்புத்திநாதனாகியகேது பகவான் சுபக்கிரகங்களின் பார்வைபெற்றாலும் சம்மந் தப்பட்டாலும் ஜெனன லக்கினத்திற்கு 1 2,4,5,6, இவ்வீடு களிலிருந்து குருபகவானின் பார்வை பெற்றாலும், நட்புப் பெற்றாலும்உத்தியோகம்செய்யும்தொழில்விருத்தியடையும் புத்திநாதன் நீச்சம் அடைந்து திசாநாதனுக்கு மறைவு

ஸ்தானத்திலிருந்தால் சத்ரு அக்கினி இவைகளால் பயமும், பந்து ஜன கலகத்தையும் சரீரத்தில் ஓர் வித நடுக்கத்தையும் கொடுப்பான் என்பதாம்.

சுக்கிரபுத்தி:- 3-வருஷம் புத்திநாதனாகிய சுக்கிரன் ஜெனன லக்கினத்திற்கு 6, 8, 11-ம் இடத்திலிருந்து கன்னியா ராசியில் இருந்தால் பெண்களினால் மனசுகிலேசத்தையும் கலகத்தையும் கொடுப்பான் ஆனால் புத்திநாதன் லாபஸ்தானத்திலிருந்து திசாநாதனின் பார்வை பெற்றால் சகலவிதமான நன்மையுங் கொடுப்பான் என்பதாம்.

சூரியபுத்தி:- 10 மாதம் 24-நாள் புத்திநாதனாகிய சூரியபகவான் கன்னி, துலாம், விருச்சிகம், மகரம், இந்த ராசியிலிருந்து திசாநாதனாகிய இராகு பகவானின் பார்வை சென்றாலும் சம்மந்தம் பெற்றாலும் சத்துருக்களால் திரவிய நாசமும் ஆயுதம் விஷம் அக்கினி இவற்றால் ஆபத்தும், களத்திர புத்திரர்களுக்குத் துன்பத்தையும் கொடுப்பான். ஆனால் சூரியன் ஆக்ஷி நட்பு உச்சம் ஸ்தானத்திலிருந்தால் நற்பலன்களையும் உத்தியோக உயர்வையும் கொடுப்பான் என்பதாம்.

சந்திர புத்தி:—18 மாதம் புத்திநாதனாகிய சந்திரன் கேந்திர திரிகோணம் பெற்றுத் திசாநாதனாகிய இராகு பகவானை மறைமுகமாகப் பார்த்தால். வியாபார விருத்தி பந்து ஜனசேர்க்கை தனலாபமுண்டு ஆனால் புத்திநாதன் பகைமை ஸ்தானத்திலிருந்தாலும் ராகு சம்மந்தப்பட்டாலும் கௌரவம் குறைவு விரோதம் செய்யும் தொழில் நஷ்டம் முதலிய கஷ்டத்தைக் கொடுப்பான் என்பதாம்.

செவ்வாய் புத்தி:- 1 வருஷம் 18 நாள் புத்திநாதனாகிய செவ்வாய் பகவான் லக்கினாதிபதியுடன் சேர்ந்து லாபஸ்தானத்தில் இருந்தால் பூமிலாபம், புத்திரலாபம், உத்தியோக விருத்தி உண்டாகும் ஆனால் செவ்வாய் நீச்சமடைந்து திசாநாதனாகிய இராகுவுடன் சம்மந்தப்

பட்டு சனி, கேது முதலிய கிரகங்கள் பார்வை பெற்றால் அரசர்களால் பயம், ஆநயபயம், திருடர்கள் பயம், மனோ வியாதி, கண்ணோய் முதலிய பிணிகளைக் கொடுப்பான் என்பதாம்.

குரு மகாதிரை 16-வருஷம்

குருபுத்தி:—1 மாதம் 18 நாள் புத்திரநாதனாகிய குரு பகவான் தனது சுயபுத்தியில் சௌபாக்கியம் பிரகாசம் நற்கீர்த்தி நற்குண விருத்திநற்குணமுள்ளபுத்திரப்பேறு இராஜ பூஜிதம் குரு கடாக்ஷம் சாதுஜனப் பழக்கம் முதலியவை உண்டாகும். ஆனால் குருபகவான் லக்கினாதிபதிக்கு மறைவு ஸ்தானத்திலிருந்து சனி, இராகு கேது இவர்களின் சம்மந்தம் பெற்றாலும், பார்வை பெற்றாலும் பலவிதமான கஷ்ட நஷ்டங்களைக் கொடுப்பான் என்பதாம்.

சனி புத்தி:—30 மாதம் 12 நாள் புத்தினானாகிய சனி பகவான் நீச்சம் பகைமை ஸ்தானத்திலிருந்து திசாநாதனுக்கு மறை ஸ்தானத்திலிருந்தாலும் ஜெனன லக்கினத்திற்கு விரயஸ்தானத்திலிருந்தால் நாசிவேசிகளின் நட்பு அதனால் ரோகம் உண்டு பண்ணும் புத்திர நஷ்டத்தைக் கொடுக்கும் ஆடு மாடுகளுக்கு பீடையுண்டு பண்ணும், ஆனால் சனிபகவான் துலாம் ராசியில் இருந்து குரு, புதன் சுக்கிரன் பார்வை பெற்றிருந்தால் தைரியத்தையும் தன வருத்தியையும் உத்தியோக நன்மையும் கொடுப்பான் என்பதாம்.

புதன் புத்தி:—27 மாதம் 6-நாள் புத்திநாதனாகிய புத் பகவான் லாபஸ்தானத்தில் ஆக்ஷி, நட்பு ஸ்தானம் பெற்று திசாநாதனாகிய குரு பகவானுக்கு கேந்திர திரிகோண ஸ்தானத்திலிருந்தால் பூமி சொந்த மனைவாங்குதல், கல்வி புது இடம் இவைகள் ஏற்படும் புத்திநாதன் சனி இராகு கேது இவர்களுடன் சம்மந்தப்பட்டால் மாதாபிதா துக்கமும் பந்து நண்பர்களுடைய பகையும் உண்டாகும் என்பதாம்.

கேது புத்தி:—11 மாதம் 6 நாள் புத்திநாதனாகிய கேது பகவான் ஜெனன லக்கினத்திற்கு 1, 2, 3, 5, 8 இந்தஸ்தானங்களிலிருந்து சுபகிரகங்களின் பார்வை பெற்றால்தெய்வ

பக்தியும் பெரியோர்களின் அநுக்கிரகமும் சாஸ்திர ஆராய்ச்சியும் உண்டாகும் ஆனால் கேது பகவான் லக்கினாதிபதியுடனும், இராகு சனி இவர்களுடன் சம்மந்தப்பட்டால் பலவிதமான நோயையும், வறுமையும் மனச் சஞ்சலத்தையும் கொடுப்பான் என்பதாம்.

சுக்கிர புத்தி:-32 மாதம் புத்திநாதனாகிய சுக்கிரன் திசாநாதனாகிய குரு பகவானுக்கு ஆசி வாக்குஸ்தானத்திலும், லாபஸ்தானத்திலும் கூடியிருந்து சுபக்கிரகங்களின் பார்வை பெற்றால சுகவாழ்வையும் பொன் பொருள், பூஷணாதிகளையும் வண்டி வாகனங்களையும், விவசாயம் செய்யும் பூமியையும் கொடுப்பான். ஆனால் புத்திநாதனாகிய சுக்கிரன், அங்காரகன் சனி இராகு கேது இவர்களின் பார்வை பெற்றால், அன்னபானக் கஷ்டத்தையும், வீண் விவசாரத்தையும் அனாவசியமான செலவுகளையும் கொடுப்பான்.

சூரியபுத்தி:-9-மாதம் 18 நாள் புத்தி நாதனாகியசூரிய பகவான் சுபக்கிரகங்களுடன் சம்பந்தப்பட்டாலும் பார்வை பெற்றாலும் சத்துருவு நாசம் அரசன்மானம் பெருங்கீர்த்தி தனலாபம், தைரியம் இவைகள் உண்டு ஆனால் சூரியன் லக்கினாதிபதியுடன் சம்மந்தப்பட்டு விருச்சிக ராசியிலிருந்து பகைமை ஸ்தானத்திலிருப்பானாகில் எக்காரியத்தையும் பின் வாங்காமல் தைரியமாய்ச் செய்யலாம் என்பதாம்.

சந்திரபுத்தி: 16 மாதம் புத்திநாதனாகிய சந்திரன் ஜெனன காலத்தில் 6 8 12-ம் இடங்களிலிருந்து சனி செவ்வாய் கேது இவர்கள் விரயஸ்தானத்திலிருந்து பார்த்தல் தனக்காவது தன்னுடைய மனைவிக்காவது மரணம் நேரிடும் ஆனால் சுபக்கிரகங்கள் பார்த்தால் நன்மை உண்டாகும் நஷ்டத்தைக் கொடுக்க மாட்டான் என்பதாம்.

செவ்வாய் புத்தி; 11 மாதம் 9நாள் புத்திநாதனாகிய செவ்வாய் பகவான் தன் சொந்த வீட்டிலிருந்து ஆசி பெற்றால் நற்பலன் உண்டு ஆனால் நீச்சஸ்நானத்திலிருந்தாலும் இராகு கேது இவர்களுடன் சம்மந்தப்பட்டாலும் பலகீனத்தையும் ஜாதகனுக்கு ஜலத்தினால் கண்டமும் இடமாடும் வாழ்க்கையும் உறவினர்களுடைய பகையும் உண்டாகுமென்பதாம்.

இராகு புத்தி;-28 மாதம் 24-நாள் புத்திநாதனாகிய இராகு பகவான் ஜெனன லக்கினத்திற்கு 1248—ம் இடத்திருலிந்து திசா நாதனுடன் சம்மந்தப்பட்டிருந்தால் குடும்பத்தில் சுகவாழ்வையும் ஞானிகளின் நேசத்தையும் பந்துக்களின் சேர்க்கையும் கொடுப்பான் ஆனால் இராகு ஆகாரம் வஸ்திரம் இவைகளுக்குத் தரித்திரத்தையும் குடும்பத்தில் கஷ்டநஷ்டங்களைக் கொடுப்பான் என்பதாம்.

சனி மகாதிசை 19 வரு

சனிபுத்தி: 3 வருஷம் 8 நாள் புத்திரனாகிய சனி பகவான் சுபக்கிரங்களினால் பார்வை பெற்று ஆஷி நட்புஸ்தானத்திலிருந்தால் மனமகிழ்ச்சி வியாபார விருத்தியையும் விவசாய விருத்தியையும் கொடுப்பான் ஆனால் சனி பகவான் விரயஸ்தானத்திலிருந்தாலும் கேந்திர திரிகோணம் பெற்றாலும் பலவிதமான கஷ்ட நஷ்டங்களைக் கொடுப்பதுடன் சூதகச் சம்மந்தமான காரியங்களையும் கொடுப்பான் என்பதாம்.

புதன் புத்த்;-32 மாதம் 9 நாள் புத்திரநாதனாகிய புத பகவான் சுபக்கிரகங்களின் பார்வை பெற்று வாக்கு ஸ்தானத்தில் குரு, சுக்கிரன் இவர்களுடன் கூடியிருந்தால் பாக்கியம் ஸ்திரீ சுகம், இராஜமரியாதை இவைகளுக்குண்டு ஆனால் புத்திநாதன் திசாநாதனுக்கு மறைவில் இருந்து லக்கினாதிபதியுடன் சம்மதப்பட்டு இராகு கேது பார்வை உண்டானால் சகோதர பீடை புத்தர் பீடை, சரீரபீடையும் உண்டாக்கு மென்பதாகும்.

கேதுடத்தி; 13 மாதம் 9 நாள் புத்திநாதனாகிய கேது பகவான் ஜென்ம லக்கினத்தில் இருந்தால் மன அமைதி இல்லாதவனாகவும், நோயாளியாகவும், லோபியுமாயும்மகர கும்பத்தில் கேது இருப்பானாகில்தன்னிடத்தில் நிலையான திரவியமும் புத்திர பாக்கியமுடையவனாகவு மிருப்பானென்பதாகும்.

சுக்கிரபுத்தி 38 மாதம் புத்திரநாதனாகிய சுக்கிர கவான் ஜென்ம லக்கினத்திலிருந்தாலும் திசாநாதனுடன்

சம்பந்தப்பட்டிருந்தாலும் ஜாதகன் தீர்க்காயுள் உடையவனாகவும் தன் மனைவி மக்களிடத்தில் அதிகப்பிரியமுள்ளவனாகவும் கணித சாஸ்திரத்தில் அறிவுள்ளவனாகவும் பெண்களால் கொண்டாடக் கூடியனவாகவும இளம் பருவத்திலேயே விவாக முடையவனாகவுமிருப்பான் வண்டி வாகனாதிகள் உடையவனாகவும் இருப்பான் என்பதாம்.

சூரியபுத்தி:- 11 மாதம் 12நாள் புத்திநாதனாகிய சூரியபகவான் ஜென்ம லக்கினத்தில் இருந்து நட்பு, ஆசி ஸ்தானத்திலிருந்து திசாநாதனுக்கு மறைவு ஸ்தானத்திலிருந்தால் ஜாதகன் அந்தஸ்து பெருந்தன்மை திடகாத்திரமுள்ள சரீரம் எப்பொழுதும் முகமலர்ச்சி யுடையவனாகவும் இருப்பான்' ஆனால் புத்திநாதன் சனி இராகு கேது இவர்களுடன் சம்மந்தப்பட்டிருந்தாலும் பார்வை பெற்றாலும் மரணமுண்டு சத்ருபயமுண்டு அநேக பீடையையும் கொடுப்பான் என்பதாம்.

சந்திரபுத்தி:-19 மாதம் புத்திநாதனாகிய சந்திரன் மேஷம் ரிஷபம் கடகம் இந்த ராசிகளிலிருந்தால் சாஸ்திர ஆராய்ச்சியும் சுகவாழ்வும் உடையவன் சந்திரன் தேய்பிறைச் சந்திரனாகஇருந்தால் செவிடு, அங்கவீனம் பலவிதமான வாதநோய்களையும்கொடுப்பான். பூரணசந்திரனாக இருப்பின் தீர்க்காயுள் உடையவனாகவும் தனசம்பத்துடையவனாகவும் இருந்து வாழ்வான் என்பதாம்.

செவ்வாய் புத்தி:-13 மாதம் 9 நாள் புத்திநாதனாகிய செவ்வாய் பகவான் சுபக்கிரங்களின் பார்வை பெற்றாலும் சம்பந்தப் பட்டிருந்தாலும ஜென்ம லக்கினத்தில் செவ்வாய் இருந்தாலும் தீர்க்காயுள் தனம் கல்வி தைரியம், பயிர்த்தொழில் விருத்தியுமுண்டாகும், ஆனால் செவ்வாய் பாபிகள் சேர்க்கையாயிருந்தாலும் பகைமை ஸ்தானத்தி

விருந்தாலும் இடமாறி வாழ்வான் உறவினர்க்கு விரோதி யுமாவான் செவ்வாயபகவான் உச்சத்திலிருந்தால் இராஜ சன்மானத்தால் கீர்த்தியும் செல்வாக்குச் சாதுர்யமுடைய வனாகவும் இருப்பன் என்பதாம்.

இராகுபுத்தி:–34 மாதம் 6 நாள் புத்திநாதனாகிய கேது பகவான் ஜென்ம லக்கிநத்திலும் சுபக்கிரகங்களுடன் கூடி யிருந்து ஆக்ஷி பெற்றாலும் சொற்ப தனமுடையவன் சொற்ப பூகம்பத்துடையவன் ஆனால் ராகுபகவான் திசா நாதனுடன் சம்மந்தப்பட்டால், அற்ப ஆயுள் உடைய வன் என்றும் ஜாதகனுக்கு மரண காலம் இன்ன நேரத்தி லும் உண்டாகும் என்பதாம்.

குருபுத்தி: 30 மாதம் 12-நாள் புத்திநாதனாகிய குரு பகவான், ஜென்மலக்கினத்தில் வாக்கு ஸ்தானத்திலிருந்து லும் ஆஷி பெற்றாலும் பண்டிதனாகவும் பூர்ணாயும் உடையவனாகவும் குடும்பத்தில் மனமகிழ்ச்சி யுடையவனா கவும் இருப்பான் ஆனால் குருபகவான் இருக்கும் வீடு பாபிகளால் பார்க்கப்பட்டால் ஜாதகன் மத்திவ ஆயுளும் சஞ்சத மனமும், புத்திரப்பேறு அற்றவனாகவும் இருப்பான் என்பதாம்.

## புதன் திசை வரு 17

புதன் புத்தி:–28 மாதம் 27 நாள் புத்திநானாகிய புதபகவான் திசாநாதனாக இருப்பதாலும் தன் சுயபுத்தி யில் சுபாசுப பலன்களையே கொடுப்பான் ஆனாலும் ஆஷிஸ்தானத்திலிருந்தாலும் லக்கினாதிபதியுடன் சம்மந் தப்பட்டாலும் தருமவழியில் செல்லுவான் கல்விமான்களின் சேர்க்கை உண்டாகும் சங்கீத ஞானம் கீர்த்தியுமுண்டா ஆனால் பாபிகளுடன் சம்மந்தப்பட்டால் கொஞ்ச சஞ்ச லத்தையும் கொடுப்பான் என்பதாம்.

5

கேதுபுத்தி:-11 மாதம் 27 நாள் திசாநாதனாகிய கேது பகவான் ஜென்ம லக்கினத்திலும் தன் சொந்த வீட்டில் ஆட்சி பெற்றிருந்தால், குடும்பத்தில் சுகவாழ்வும் உத்தி யோகம் தொழில் வியாபாரம் விவசாயம் விருத்தியுமுண்டு ஆனால் புத்திநாதனான கேதுபகவான் சனி இவர்களுடன் கூடி நீச்சம் பெற்று விரயஸ்தானத்தில் இருந்தால் துக்கம், சரீர நடுக்கம் துஷ்டர்கள் சேர்க்கை பொருள் விரையம் முதலியன உண்டாகும் என்பதாம்,

சுக்கிரபுத்தி:-34 மாதம் புத்திநாதனகிய சுக்கிரன் தன் சொந்த வீட்டிலிருந்து நட்புப் பெற்று லாபஸ்தானத்திருந் தால் சகல சம்பத்து உடையவனாகவும் தருமகுணமுடைய வனாகவும் அன்னதானம் தருமமும் செய்வான் புத்திநாதன் சனி இராகு கேது இவர்களின் பார்வை பெற்றாலும் சம்பந் தப்பட்டாலும் னக்கிலேசம் பொருள் விரையம் விலை மாதர்களின் நேசம் மாதாபிதாக்களின் விரோதமும் உண்டு பண்ணுவான் என்பதாம்

சூபயபுத்தி:-10 மாதம் 6 நாள் புத்திநாதனாகிய சூரிய பகவான் ஜென்மலக்கினத்தில் கேந்திர திரிகோண ஸ்தா னம்பெற்று சப்தமாதிபதியுடன் திசாநாதனுடனும் சம்மந் தப்பட்டு லாபஸ்தானத்தை அடைந்தால் சுவர்ணம் பவளம் குதிரை யானை இவைகளின் சம்பத்து உண்டாகும் தனக்கு சொந்த மனை ஏற்படும், இராஜ சன்மானம் ஏற்படும் புத்தி நாதனான சூரியபகவான் பகை நீச்சம் ஸ்தானத்திலிருந் தால் மனவியாகூலம் பத்து மித்திரர்களின் விரோதம் நண் பர்களின் பகை உண்டாகும் என்பதாம்

சந்திரபுத்தி:-17 மாதம்புத்திநாதனாகிய சந்திரன் அஷ் டமாதிபதியுடன் கூடி ஜென்ம லக்கினத்திற்கு 1,3,6,8-ம் இடங்களிலிருந்துசுபக்கிரகங்களின் பார்வை பெற்றிருந்தால்

விவசாய விருத்தி வியாபார லாபம் மனமகிழ்ச்சியும் குடும் பத்தில் பலவிதமான நன்மையான காரிங்களையும் செய் வான் ஆனால் புத்திநாதனான சந்திரன் பகை நீச்சஸ் தானத்திலிருந்து பாபிகளுடன் சேர்க்கையானால் சரீர பீடையுகு குஷ்ட நோயையும் இன்னும் கலவிதமான மனக் கிலேசத்தையும் கொடுப்பான் என்பதாம்.

செவ்வாய்புத்தி:- 11 மாதம 27 நாள் புத்திநாதனாகிய செவ்வாய்ப்பகவான் ஆஷி, உச்சம் நட்பு ஸ்தானத்தி லிருந்டு திசாநாதனாகிய புதனுடன் கூடி தன் வீட்டில் இருந்து ஆஷி பெற்றமல் தனலாபம் பூபாலம் குடும்பத்தில் நன்மை தனக்குப்பெருமை திரேக சௌக்கியம் இவை களைக் கொடுப்பான். ஆனால் புத்திநாதனான செவ்வாய் சப்தமாதிபதியுடன் சம்மந்தப்பட்டு சனி இராகு கேது இவர் களின் பார்வை பெற்றாலும் சம்மந்தப்பட்டாலும் குடும்பத் தில் அநேக விதமான கஷ்ட நஷ்டகைளையும் கன்று காலி களின் சேதத்தையும் கொடுப்பான் என்பதாம்.

இராகுபுத்தி:—30 மாதம் 18 நாள் புத்திநானாய இராகுபகவான் தன் விட்டிலிருந்து பகை நீத்சஸ்தானத்தி விருந்தும் திசாநாதனாகிய புதனுக்கு மறைவு ஸ்தானத்தி லிருந்தால் வீண் கலகமும் கோர்ட்டு மூலமான வியாஜ்ஜி யத்தையும் மனக்கவலையிம் ஆகாரமின்றி அலைச்சலையும் கொடுப்பான். ஆனால் சுபக்கிரத்ங்களின் பார்வை பெற் றால் நன்மையான காரியத்தையும்கொடுப்பான் என்பதாம்

குருபுத்தி:-27 மாதம் 6 நாள் திசாநாதனாகிய குருபக வான் ஆக்ஷி உச்சம் நட்புப்பெற்று ஜென்ம லக்கினத்திற்கு 1 3 6 8 12ம் வீட்டிலிருந்து அஷ்டமாதிபதியுடன் சம்மந்தப் பட்டிருந்தால் ஜாதகனுக்ஆரோக்கியமும் நன்மையை உண் டாகும் குடும்பத்தில் மங்களகரமான காரியங்கள் உண்டு

பண்ணுவான் திரவியலாபமுண்டு ஆனால் புத்திநாதனான குருபகவான் விரையஸ்தானத்திலிருந்து 'சனி இராகு கேது பார்வை பெற்றால் குடும்பத்தில் மனக் கஷ்டங்களை கொடுப்பான் என்பாதாம்.

சனிபுத்தி;-32 மாதம் 9-நாள் புத்திநாதனாகிய சனி பகவான் இராகு கேது இவர்களுடன் சம்மந்தப்பட்டு ஜன்மலக்கினத்திற்கு 10, 11, 12-ம் இடத்திலிருந்து பாபிகளுடன் சம்மந்தப்பட்டுருந்தால் ஜாதகனுக்கு சரீர பீடையும் எக்காரியமும் முடிவு பெறாமல் தேங்குதலும் பொருள் நஷ்டம் குடும்ப கஷ்டம் முதலியவைகளைக் கொடுப்பான் ஆனால் சனிபகவான் சுபகிரகங்களினால் பார்வை பெற்று தன சொந்த வீட்டிலிருந்தால் தனக்கும் பிறக்கும் ஜாதகன் நல்லவன் எனறும் பொறுமை உடையவன் என்றும் பெயர் வழங்கும் என்பதாம்.

## கேதுமகா திசை 7 வருஷம்

கேதுபுத்தி:-6 மாதம் 27 நாள் புத்திநாதனாகிய கேது பகவான் மூன்றாவது பாவத்தில் இருந்தாலும் பத்தாவது பாவத்திலிருந்தாலும் விதவை சம்போகமுடையவன். தாசி வேசிகளின் சேர்றகை உடையவன் ஆனால் கேதுபகவான் திசாநாதனுடன் சம்மந்தப்பட்டு ஜென்ம லக்கினத்திற்கு 6, 7, 8, இந்த ஸ்நானங்களில் கேது பகவான் இருந்தால் மனைவி மக்களை விட்டு பிரிந்து ஊர் ஊராக அலையும் நிலைமைக்கு வந்து சேருவான் என்பதாம்.

சுக்கிரபுத்தி:-14 மாதம் புத்தினாதலாகிய சுக்கிர குரு அங்காரகன், பார்வை பெற்றால் நற்பலன்களை கொடுப்பான் ஆனால் நீச்சம் பகை ஸ்தானத்திலிருந்தால் களத்திர பத்து ஜன விரோதம் உண்டாகும் புத்திநாதன் சுபக்கிரகங்

களுடன் சம்மந்தம் பெற்றாலும் பார்வை பெற்றாலும் சரீர சௌக்கியம், திரவிய லாபம், தெய்வபக்தி தருமகுணம் உற வினருடன் நட்புமுண்டாகும் என்பதாம்.

சூரிய புத்தி:-4 மாதம் 6 நாள் புத்திநாதனாகிய சூரியன் ஏழாவது பாவத்திலிருந்து லக்கினாதிபதியுடன் கூடி, சுபக்கிரங்களின் பார்வை பெற்றால் இரண்டு தார முடையவன் தைரியசாலி இராஜபூஜிதன் தனவான் கௌர வமுடையவன் சூரியன் திசா நாதனுக்கு மறைவு ஸ்தானத்தி லிருந்து பாபிகளுடன் சம்மந்தமுடையவனா யிருந்தால் அனேக கஷ்டங்களைக் கொடுப்பான் என்பதாம்.

சந்திரபத்தி: 7 மாதம், புத்திநாதனாகிய சந்திரன் ஆசி உச்சம் நட்புப்பெற்று சுபகிரகங்களின் பார்வை பெற்றால் சுலபமான வழியில் தனம் சேகரிப்பான் பூமி களில் நவதானியங்கள் நன்றாக வரும்படி கிடைக்கும் வியாபாரம், செய்யும் தொழிலில் விருத்தியுண்டாகும். ஆனால் சந்திரன் திசா நாதனுக்கு விரயஸ்தானத்திலிருந் தால் அநேக விதமான நஷ்டத்தையும் கொடுப்பான் என்பதாம்.

செவ்வாய், புத்தி-4மாதம் 27-நாள் புத்திநாதனாகிய செவ்வாய், சனி இராகு கேது இவர்களுடன் பார்வை பெற்று பகைமை ஸ்தானத்திலிருந்தால் குடும்பத்தில் கலகம் வீண் வழக்குவாத சம்பந்தமான நோய் மனவியா கூலம் முதலியவைகளுமுண்டாகும் ஆனால் செவ்வாய் தன் சொந்த வீட்டிருந்தும் ஆசி பெற்றாலும் மூலதிரிகோணம் பெற்று சுபக்கிரகங்களின் பார்வையும் நட்பும் பெற்றால் எல்லா வகையிலும் சொற்ப நன்மையும் லாபமும் உண்டா கும் என்பதாம்.

இராகுபுத்தி-1 வருஷம் 18-நாள் திசா நாதனாகிய இராகு பகவான் ஜென்ம லக்கினத்திற்கு 1,2,3,4,5,68,

இந்த இராசியில் இருந்தசலும் சனி, கேது சம்பந்தமானா லும் கஷ்டமும் நஷ்டமும் சமமாகவே வரும் ஆனால் இராகு குரு சுக்கிரன் இவர்களின் பார்வை பெற்றால் நஷ்டம், கஷ்டம் நேரிடாது சொற்ப நன்மை உண்டாகும் என்ப தாம்.

குருபுத்தி:-11மாதம் 6 நாள்; புத்திநாதனாகிய குரு பகவான் ஜென்மலக்கினத்திற்கு 9, 10. 12ம், இடத்தில் கேது, சனி இருந்து அங்காரகன் பார்வை பெற்றால் குடும் பத்தில் கஷ்டம், மனக்கஷ்டம் அகால போஜனம், கௌர வக்குறைவு மைந்தருக்கு பிணி முதலியவை உண்டாகும். ஆனால் புத்திநாதனான குருபகவான் சுபக்கிரகங்களின் பார்வைபெற்று. ஆசி, நட்பு பெற்றிருந்தால் நற்பலனைக் கொடுப்பான் என்பதாம்.

சனிபுத்தி:-18 மாதம் 27-நாள் புத்திநாதனான சனி பகவான் தன் சொந்த வீட்டிலிருந்து ஆசி. பெற்றாலும் மகா சனியாக இருந்தாலும் திசாநாதனாகிய கேதுருக்கு நேர்விரய ஸ்தானத்திலிருந்து பர்பிகளுடன் கூடினால்ஜாத கனுடைய மாதாபிதா வர்க்கத்தில் சிசுமரணம் ஏற்படும்தன் குடும்பத்தில் பிணியைக் கொடுப்பான் இத்துடன் விண் விவ காரத்தையும் கொடுப்பான் என்பதாம்.

புதன்புத்தி-11 மாதம் 27-நாள் புதபகவான் லக்கி னத்திற்கு 6, 8, 9, 12-ம் இடத்திலிருந்து குரு சுக்கிரன் வளர்பிறைச் சத்திரனின் பார்வை பெற்றால் பூமியிலிருந்து திரவியமும், வேளாண்மை அபிவிருத்தியும் உயர்ந்த சம்பத் தும் குடும்ப மகிழ்ச்சியும் ஏற்படும் ஆனால் புதன் நீச்சம் மடைந்து பாவிகளுடன் சம்மந்தப்பட்டு கேந்திர ஸ்தானத் தில் இருந்தால் சொற்ப கஷ்டத்தைக் கொடுப்பான் என்ப தாம்.

## சுக்கிரன் திசை 20 வருஷம்

சுக்கிரபுத்தி:- 40 மாதம்:-சுக்கிரன் தன் சுய புத்தியில் லக்கினாதிபதியுடன் சம்மந்தப்பட்டு லாபஸ்தானத்திலிருந்து சுபக்கிரங்களின் பார்வை பெற்றால் இராஜசன்மானமும் உயர் கௌரவமும், வஸ்திரபூஷணாதிகளும் வண்டிவாகனங்களும், குபேர சம்பத்தும் உண்டாகும் ஆனால் பாபிகளுடன் கூடினால், கொஞ்சம் மனக்கஷ்டத்தையும் சொற்ப நஷ்டத்தையும் கொடுப்பான் என்பதாம்.

சூரியபுத்தி:-12 மாதம் திசாநாதனாகியசூரியபகவான் சனி, இராகு, கேது இவர்களின் பார்வை பெற்றால் கண் காது வயிறு இப்பாகங்களில் நோய் உண்டு பண்ணுவான் ஆனால் சூரியன் ஆட்சி நட்புப்பெற்று லாபஸ்தானத்திலிருந்து அஷ்டமாதிபதியுடன் கூடி ஆக்ஷி நடத்தினால் பலவிதமான நன்மையைக் கொடுப்பான்.

சந்திரபுத்தி :20 மாதம்; புத்திநாதனாகிய சந்திரபகவான் வளர்பிறைச் சந்திரனாக இருந்து திசாநாதனாகிய சுக்கிரனுக்கு நேர் ஆக்ஷியானால் சுகவாழ்வையும் பந்து மித்திரர்களின் சேர்க்கையும் தனலாபத்தையும்குடும்பத்தில் சுபகாரியங்களையும் நடத்துவான் ஆனால் சந்திரன் தேய்பிறைச் சந்திரனாக இருந்து நிச்சமடைந்து பகைமை ஸ்தானத்திலிருந்தால் சரீரத்தில் வெண்ணிறமான தடிப்பு அரிப்பு வயிற்று நோய் முதலிய பிணியைக் கொடுப்பான் என்பதாம்.

செவ்வாய் புத்தி:-14 மாதம்; புத்திநாதனாகிய செவ்வாய் ஜென்மலக்கினத்திற்கு 123457 இடங்களிலிருந்து குரு சுக்கிரன் பார்வைபெற்றால் நற்பலன்களையும் பலவிதமான சம்பத்துகளையும் கொடுப்பான் ஆனால் செவ்வாய் ம்றைவு ஸ்தானத்திலிருந்து பாபிகளுடன் கூடினாலும்பகை

கலகம் தன நரசம் முதலிய பலவிதமான கஷ்ட நஷ்டங்க ளைக் கொடுப்பான் என்பதாம்

இராகுபுத்தி:-3-வருஷம் புத்திநாதனாகிய இராகுபக வான் நட்பு ஆக்ஷி உச்சம் ஸ்தானத்திலிருந்து குரு சுக்கிரன் செவ்வாய் பார்வை பெற்றாலும் சம்மந்தப்பட்டாலும் ஜென்ம லக்கினத்திற்கு 3,6,11, 2, இடங்களில் ஷ கிரகங் களின் பார்வை பெற்று வாக்குஸ்தானத்தில் இருந்தால் தனப்பிராப்தி பூமி கன்று காலிகள் வாகனாதிகள் உடைய வனாக இருப்பான் இராகுதிசா நாதனுக்கு மறைவு ஸ்தானத் திலிருந்தால் பலவிதமான கஷ்டங்களைக் கொடுப்பான்.

குருபுத்தி;—32-மாதம் புத்திநாதனாகிய குருபகவான் சப்தமாதிபதியுடன் கூடி, ஆக்ஷிபெற்று ஜென்ம லக்கினத் திற்கு 4,6,7 இடங்களில், அங்காரகன், சுக்கிரன் பார்வை பெற்று லாபஸ்தானத்திலிருந்தால் தருமம் செய்யும் விழிக ளில் ஈடுபடுபவன், மனைவி, மக்கள், பந்துக்கள் மனமகிழ்ச் சியுண்டுருல் னும் காரியங்களும் உண்டாகும் ஆனால் குரு பகவான் திசாநாதனாகிய சுக்கிரனுக்கு மறைவு ஸ்தானத்தி லிருந்தலே் பலவிதமான கஷ்டங்கள் உண்டாகும் என்ப தாம்.

சனுபுத்தி:-38 மாதம் புத்திநாதனாகிய சனி பகவான் நட்பு. ஆக்ஷ, உச்சம் பெற்று சரராசியில் சுபக்கிரகங்களின் பார்வை பெற்றால் நற்பலனைக் கொடுப்பான் ஆனால் சனிபகவான் இராகு, கேது இவர்க்ளுடன் சம்மந்தம் பெற் றாலும், பார்வை பெற்றாலும் சத்துருபயம் வியாதி தின நாசம் முதலிச கஷ்டங்களைக் கொடுப்பான்.

புதன்புத்தி;—34 மாதம் புத்தினாதனாகிய புதபகவான் சுபக்கிரகங்களின் பார்வை பெற்றால் பலவிதமான நன்மை களைக்கொடுப்பான், ஆனால் புதன் திசானாதனாகிய சுக்கிரனுக்கும் மறைவு ஸ்தானத்திலிருந்தால் வாதபித்தம்

முதலிய உஷ்ண சம்மந்தமான பிணியைக் கொடுப்பான் என்பதாம்.

கேதுபுத்தி:-14 மாதம்: புத்திநாதனாகிய கேதுபகவான் ஜென்ம லக்கினத்திற்கு 3,6,8,9,11 இடத்திலிருந்து திசா நாதனாகிய சுக்கிரனோடு சேர்க்கையோ அல்லது பார்வையோ பெற்றிருந்தால் ஜாதகன் நல்ல யோக முள்ளவனாகவும்: பூஸ்தியுடையவனாகவும் இருப்பான் ஆனால் புத்தி நாதன் விரயஸ்தானத்திலுருந்தால் அக்கினி திருடர்களால் பய மனாவியாதி முதலிய பிணிகளால் வருந்துவான் என்பதாம்.

......()......

## ஜாதகம் எழுதும் விபரம்

—()—

குறிப்பு:—

ஒரு ஜாதகம் எழுதவேண்டுமானால் சில விஷயங்களை முதலில் நாம் தெரிந்து கொண்டபிறகு ஜாதகம் எழுத ஆரம்பிக்க வேண்டும் அவை அடியில் குறிக்கப்பட்டிருக்கின்றன.

(1) குழந்தை ஜெனித்த காலம், வருஷம் மாதம் தேதி கிழமை மணி நிமிஷம் அல்லது நாழிகை வினாடி இவைகள் வேண்டும் (காலம் என்பது இரவு ..ல்லது பகல்)

(2) ஜாதகன் ஜெனித்த இடம் பட்டணமா அல்லது கிராமமா இவற்றின் பெயர்.

(3) ஷ இடத்தில் சூரியன் உதயம் அஸ்தமனமாகும் காலம் தேவை.

(4) குழந்தை ஜெனித்த திதி, நட்சத்திரம் யோகம் காணம் அன்றைய கிரகக்கலை அறிய வேண்டும்.

(5) ஜெனித்த குழந்தை ஆணா: பெண்ணா என்பதை அறிந்து முன் பக்கத்தில் கூடிய படி ஜெனன லக்கினம் நிச்சயிக்கவேண்டும் என்பதாம்.

## நவாம்ச சுக்கிரன் போடும் வழி

மூன்று நட்சத்திரங்களுக்கு ஒரு தரம் நவாம்சம் மேஷம் முதல் மீனம் வரையிலும்பன்னிரெண்டு ராசிகளும் திருபதம் ரும்பவரும் மூன்று நட்சத்திரங்களுக்கு உரிய 12-பாதங் களுருகும் பன்னிரெண்டு நவாம்சங்கள் ஏற்படும் ஆகையி னால் அசுவணி முதல் மும்மூன்று தள்ளிவிட்டு மிகுதியான தற்கு மொத்தப்பாதங்கள் கண்டு மேஷம் முதல் எண்ணி னால் நவாம்சம் ஒருராசியை ஒன்பது சமபாகமாகப் பங்கிட வரும் ஒவ்வொரு பாகத்திற்கும் நவாம்சம் என்று பெயர் நவாம்சத்தைக் காட்டும் சக்கிரத்திற்கு நவாம்சம் சக்கிரம் என்று பெயர் இராசிகளைக்காட்டும் சக்கிரத்திற்கு இராசிச் சக்கரம் என்று பெயர்.



உதாரண சக்கரம்

| | | | |
|---|---|---|---|
| | | சந் | ரா |
| சனி | இராசி | சக்கரம் | குரு |
| அங் | | | |
| கே ல | புத | சூ சுக் | |

| | | | |
|---|---|---|---|
| சுக் | | சந் ராகு | சனி |
| | அம்ஸ | சக்கரம் | புத |
| அங் | | | |
| குரு சூ ல | கே | | |

ஜெனனி ஜென்ம சௌக்கியானாம் வர்த்தனி குல சம்ப தாம் பதவி பூர்வ புண்ணியானாம் லிக்கியதே ஜென்ம பத்திரிகா.

சுவஸ்தி ஸ்ரீ விஜயார்ப்பு சாலிவாகன சகாப்தம் 1830 கலியுகாதி 5008 இங்கிலீஷ் 1907 அக்டோபர் மீ" 4வ-க்குச் சரியான தமிழ் பிலவங்ஞு ஐப்பசி மீ" 8வ- குருவாரம் அமரபக்ஷம் திருதிகைதிதி நா 21 கிருத்திகை நட்சத்திரம் நா 6—51 விநாடி வியாக்கரதநாமயோகம் நா 6-34வி புத்திர வாகர்ணம் நா 1 இரவு தியாஜ்ஜியம் நா 20-15 வி புத்திர 20-21க்கு மறுதினம் ரோகணிநட்சத்திரம் நா 10-51 வி இப்படிக்கூடிய சுபயோக சுபதினத்தில் சூரிய உதயாதி நாழிகை பதினாலேகால்க்கு தற்கால இந்திய ஸ்டாண்டாடு மணிப்படி காலை 1.-42 நிமிஷத்திற்கு தனுசு லக்கினத்தில் கெற்பத்தில் செல் நாழிகை 5-10 வினாடி போக செல்லவேண்டிய நாழிகை 20 வினாடிக்குச் சந்திரனோரையில் சரத்மீக வேளையில் ஸ்ரீ......... அவர்களுக்கு ஆண் குழந்தை ஜெனன சிசு, மாதா, பிதா தீர்க்காயுள் சுபம் சுபம், சுபம்.

ஜெனன லக்கினம்-தனுசு
ஜெனன நட்சத்திரம்-ரோகினி
அம்ஸ்ச லக்கி - ம்-தனுசு
இடம்...சென்னை

சந்திரன் இருக்கும் நிலையைக் கிரகபாதசாரம் என்ற இடத்தில் பஞ்சாங்கத்தைப் பார்த்துக் குறித்துக் கொள்ள வேண்டும்.

———

## தற்கால கிரக நிலை

| நட்சத்திரங்கள் | பாதங்கள் | காரர்கள் | கிரகங்கள் |
|---|---|---|---|
| சுவாதி | 1-ல் | பிதுர்காரர்கள் | சூரியன் |
| ரோகினி | 1-ல் | மாதுர்காரர்கள் | சந்திரன் |
| திருவோணம் | 2-ல் | கோதகான் | அங்காரன் |
| விசாகம் | 4-ல் | வித்தியாகாரகன் | புதன் |
| ஆயில்யம் | 1-ல் | புத்திரகாரன் | குரு |
| சுவாதி | 4-ல் | களத்திரகாரகன் | சுக்கிரன் |
| பூரட்டாதி | 2-ல் | ஆயுள்காரகன் | சனி |
| புனர்பூசம் | 2-ல் | பிதாமர்துர்யராகன் | இராகு |
| பூராடம் | 4-ல் | மாதாரகன் | கேது |

குறிப்பு:- ஜாதகம் எழுதும் மாதிரிமேலே குறிப்பிட்டிருக்கிறது மேலே குறிப்பிட்டிருக்கும் நாழிகை, திதி, யோகம் நட்சத்திரம் முதலிய விஷயங்கள் அந்த வருஷப்பஞ்சாங்கத்தைப் பார்த்துத் தெரிந்து எழுதவேண்டும். ஒரு குழந்தை ஜெனனமானவுடன் குழந்தையின் ஆயுள் பாகம் கவனித்துப்பின் ஜாதகம் எழுதத்துடங்குவது உத்தமமாகும். ஒரு ஜாதகனுக்கு லக்கினம் தான் உயிர். நன்மை தீமை ஆராய்வது லக்கினத்திற்கு இரண்டாவது வீடு குடும்பஸ்தானம் வாக்கு ஸ்தானம். வித்தியாஸ்தானம் மூன்றாவது வீடு தைரியஸ்தானம், சகோதரஸ்தானம், நான்காவது வீடு, சுகஸ்தானம், ஒன்பதாவது வீடு பிதுர்ஸ்தானம், பாக்கியஸ்தானம் தர்மஸ்தானம், பத்தாவது வீடு ஜீவனஸ்தானம் தருமஸ்தானம், பதினாராவது வீடு மூத்த சகோதரஸ்தானம் இலாபஸ்தானம், பன்னிரண்டாவது வீடு பயனஸ்தானம், விரயஸ்தானம்.

## நவக்கிரகங்களின் நட்பு, பகை, சமம்

| கிரகங்கள் | நட்பு கிரகங்கள் | நட்புகிரகங்கள் | சம கிரகங்கள் |
|---|---|---|---|
| சூரியனுக்கு | சந், செவ். குரு | சுக், சனி, ரா, கேது | புதன், |
| சந்திரனுக்கு | சூரி, புதன் | ராகு, கேது | செவ், குரு, சுக், சனி |
| செவ்வாய்க்கு | குரு, சூரி, சந் | புதன் | சுக், சனி, ராகு, கே |
| புதனுக்கு | சூரி, சுக், ரா கேது | சந்திரன் | செவ், குரு, சனி |
| வியாழனுக்கு | சூரி சந் செவ் | புதன், சுக், ராகு கேது | சனி |
| சுக்கிரனுக்கு | புதன், சனி, ராகேது | சூரி, சந் | செவ், குரு |
| சனிக்கு | புதன், சுக், ரா கே | சூரி, சந், செவ் | குரு |
| இராகுவுக்கு | குரு சுக், சனி | சூரி, சந், செவ் புதகுரு | செவ்வாய் |
| கேதுவுக்கு | குரு சுக். சனி | சூரி, சந், செவ், புதகுரு | செவ்வாய் |

(1) சூரியனுக்குச் சிம்மமும் (2) சந்திரனுக்கு ரிஷபமும் (3) அங்காரனுக்கு மேஷமும் (4) புதனுக்கு கன்னியும் (5) குருவுக்குதனுசும் (6) சுக்கிரனுக்குத் துலாமும் (7) சனிக்கும்பமும் (8) இராகுவுக்குக் கும்பமும் (9 கேதுவுக்குக் கும்பமும் மூலத்திரிகோணங்களாகும் கிரகங்கள் மூலத்திரிகோண இராசிபலன் கிரகங்களின் ஆஷி நட்பு பலத்தைக் காட்டிலும் அதிகமானது. அதன் விபரம் கீழேதறிதிருக்கும் சக்கரத்தின் மூலம் அறிந்து கொள்ளவும்.

| மீனம் | மேஷம் | ரிஷபம் | மிதுனம் |
|---|---|---|---|
| குரு ஆட்<br>சுக்-உச்<br>புத-நீச்ச | சுக்-ஆட்<br>சூரி-உச்<br>சனி-நீச் | சுக்-ஆட்<br>சனி-உச்<br>ரா, கே-நீச்<br>சந்-நீச் | புத-ஆட் |
| கும்பம் | | | கடகம் |
| சனி-ஆட்<br>சனி-மூல்<br>ரா, கே, மூல | | | சந்-ஆட்<br>குரு-உச்<br>செ-நீச் |
| மகரம் | | | சிம்மம் |
| சனி-ஆட்<br>குரு-ஆட் | | | சூரி-மூல<br>சூரி-மூல |
| தனுசு | விருச்சிகம் | துலாம் | கன்னி |
| குரு-ஆட்<br>குரு-மூல | செ-ஆட்<br>ரா-உச்<br>கே-உச் | சுக்-ஆட்<br>சனி-உச்<br>சுக்-மூல | புத-ஆ உச்<br>சுக்-நீச்<br>புத-மூல |

குறிப்பு: ஆ—ஆசி
உ—உச்சம்
நீ—நீச்சம்
மூல—மூலத்திரிகோணம்

## ஜெனன கால திசை இருப்பு கணிதம்

ஒரு ஜாதகத்திற்குத் திசையும் அதன் இருப்பும் கணிக்க வேண்டுமானால் ஜெனன காலத்திலுள்ள நட்சத்

திரத்தையும் அதனுடைய இருப்பையும் கணுக்கவேண்டும். ஜெனனகாலம் சூரிய உதயாதி நாழிகை, விநாடி காலத்தின் எந்த நட்சத்திரம் இருக்கின்றது என்றும் அதில் அக்காலம் வரையில் எத்தனை நாழிகை விநாடி செல்லாகிறது எனறும் அறிய வேண்டும் இவ்விஷயம் பஞ்சாங்கத்தைப் பார்த்துக் குறிக்கவேண்டும்.

## நவக்கிரகங்களின் கேந்திர திரிகோண ஸ்தாங்களில் இருக்கும் பலன்

குறிப்பு:-கேந்திர ஸ்தானங்களில் கிரமங்கள் இருக்குமாயின் அவைகளை வலியுள்ளதாகவே எண்ணவேண்டும். திரிகோண ஸ்தானங்களில் கிரகங்கள் இருப்பின் அவைகள் கேந்திர ஸ்தானங்களில் இருப்பதைவிட மிகவும் வலியுடையது என்று கருதவேண்டும்

கிரங்களின் பார்வை:-கிரகங்கள் ஒருவீட்டில் இருந்து கொண்டே மற்ற வீடுகளிலுள்ள கிரகங்கள் சிலவற்றைப் பார்க்கக்கூடும் அந்த பார்வைக்குத்தான் ' கிரம திருஷ்டிப் பார்வை என்று பெயர் அவ்வாறு பார்ப்பது சுபக்கிரகங்களாகிய குரு சுக்கிரன், வளர்பிறைச் சந்திரன் இவர்கள் சுபக்கிரகங்களுடன் கூடி புதன் இவர்களின் பார்வைக்குச் சம்மந்தப்பட்டால் சுபபார்வை யாகும்.

பாபிகளாகிய சனி சூரியன் அங்காரகன், இராகு, கேது தேய்பிறைச் சந்திரன். பாபக்கிரகங்களுடன் சம்மந்தப்பட்ட புதன் இவர்களுடைய பார்வையாயின் அது கெட்ட பார்வையாகும். கிரகங்கள் எவைகளாயினும் 6,8,12- வீட்டுக்குடையவர்களாயின் அக்கிரகங்களின்

பார்வை கெட்ட பார்வையாகும். எல்லா கிரகங்களும் தாங்கள் இருக்கும் வீட்டிலிருந்து 1 2,6,11,12, இந்த வீடு களைப் பார்ப்பது கிடையாது ஏழாவது வீட்டை முழுப் பார்வையுடன் பார்க்கும் நான்கு எட்டு இந்த வீட்டை அங் காரகன் தவிர மற்ற எல்லா கிரகங்களும் முக்கால் பார்வை யுடன் பார்க்கும் ஐந்து ஒன்பதாவது வீட்டைக் குரு தவிர மற்ற எல்லாக் கிரகங்களும் அரைப்பார்வை பார்க்கும் மூன்று, பத்தாவது வீட்டை சனித்தவிர மற்ற எல்லா கிரகங்களும் பார்க்கும் ஆனால் அங்காரகன் நான்கு, எட்டு ஸ்தானத்தையும் வியாழன் ஐந்து ஒன்பதாவது ஸ்தானத் தையும் சனி மூன்று பத்தாவது ஸ்தானத்தையும் முழுப் பார்வையுடன் பார்க்கும்.

……(—)……

# நவக்கிரகங்கள் இராசிகளில் இருக்கும் பலா பலன்கள்

## சூரியன் இருக்கும் ராசி

(1) மேஷமானால் சொற்ப தனசம்பத்து உடையவன் கீர்த்தியும் தைரியமும் உள்ள மனதுடையவன் வியாபாரம் செய்யும் சாமர்த்தியமுள்ளவன்.

(2) ரிஷபமானால் உயர்தரமான கல்வியும், உத்தி யோகமும் உடையவன், ஆடல் பாடல்களான சங்கீதத் தைக் கேட்கப் பிரீதியுடையவன், நறுமணப்பிரிய முடைய வன் சத்துரு உண்டு சரீரத்தில் மச்சம் முதலிய அடையா ளங்கள் காணப்படும்.

(3) மிதுனமானால் தனதான்ய சம்பத்துடையவன், புத்திரபாக்கியமுடையவன், கவலையுண்டுதயாளகுணமும், பந்துஜன சேர்க்கையுடையவன்.

( ) கடகமானால் வறுமையும், கவலையும் சதா சிந்திக்கும் குணமும் உடையவன் விவசாய விருத்தியுடைய வன் குடும்பத்தில் அடிக்கடி கடன் ஏற்படும்.

(5) சிம்மமானால் மனக்கபடுடையவன் தந்திரமுள்ள வன், புகழும் சிறப்புமுடையவன், இருதாரமுடையவன் தன் பாக்கியமுள்ளவன் பகைவர் இல்லை.

(6) கன்னியானால் பணம் சம்பாதிக்கும் பிரியமுள்ள வன் சரீர அழகுடையவன். சொந்தமனை பூமி உடையவன் அடிக்கடி கவலையும், மனமகிழ்ச்சியுமுடையவன்,

(7) துலாமானால், பராக்கிரமசாலி, அஞ்சா நெஞ்சு படைத்தவன் ஆனால் சுபக்கிரகங்கள் பார்வை பெற்றால் பலவிதமான நன்மைகள் உண்டு. ராகு கேது சம்மந்தமா னால் அடிக்கடி ஜாதகனுக்குப் பலவிதமான கஷ்டநஷ்டங் கள் வரும்,

(8) விருச்சிக ராசியானால் பொது ஜனங்களான போற்றும் தன்மையுடையவன், சில கிரகங்களின் பார்வை யினால், வறுமையும் கஷ்டத்தையும் கொடுப்பான்.

(9) தனுசு ஆனால் சிறிய வியாபாரியாவான் சுபக்கிர கங்களின் பார்வை பெற்றாலும் சம்மந்தமானாலும், கீர்த்தி யுடனும் பெருந்தன்மையுடனும் வாழ்ந்திருப்பான். பலவிழி களிலும் தனம் தேடும் குணமுடையவன்.

(10) மகரமானால் சாமர்த்தியமாய்ப் பேசும் குண முடையவன், சில கிரகங்களின் கெட்ட பார்வையினால் பலவிதமான துன்பங்கள் நேரிடும்.

(11) கும்பமானால் குடும்பத்தில் மனக்கவலையும் சரீர பீடையும் கொடுப்பான் சனி, இராகு கேது சூரியனுக் குப் பகையாய் இருப்பதனால் பார்வை பார்த்தாலும். ஜாத கனுக்குப் பல விதமான கஷ்டங்கள் உண்டாகும் சுபக்கிர கங்கள் பார்த்தால் நன்மை உண்டு.

(12) மீனமானால் ஜாதகன் சொற்ப பூமி உடைய வன் விவசாய விருத்தியுடையவன். சொற்ப தன சம்பத்து உடையவன்.

குறிப்பு: 12 இராசிகளில் கிரகங்கள் நிற்கும் நிலை கண் கண்டும். பார்வை கண்டும் இன்னும் மற்ற விஷயங் களை ஆராய்ந்து பார்த்துப் பலன் சொல்ல வேண்டும்.

## 2. சந்திரன் இருக்கும் ராசி

1. மேஷமானால் பயங்கரமான குணமுடையவன் பெண்களின் இச்சையுடையவன் ஏழ்மையான வாழ்க்கையுடையவன் குரு புதன் முதலிய சுபக்கிரகங்களின் பார்வை பெற்றாலும் சம்மந்தமானாலும் நல்ல பலன்களைக்கொடுப்பான்.

2. ரிஷபமானால் ஜாதகனுக்கு உத்தியோகத்தினால் பெருமை உண்டு திடகாத்திரமான வாழ்க்கையும் மனைவி மக்களின் சுகம் இஷ்டர்கள் பந்துக்கள் இவர்களின் சேர்க்கையும் நட்பும் உண்டு பெண் குழந்தைகள் அதிகமுடையவன்.

3. மிறுனமானால் சங்கீதப்பிரியவ் ஆடல் பாடல்களிலும் வேத சாஸ்திரங்களிலும் திறமையுடையவன் வியாபாரத்தில் தன விருத்தியுண்டு அதிகக் காமி.

4. கடகமானல் ஜோதிட சாஸ்திரங்களில் வல்லவன் எப்போதும் பெண்களுக்கு அடங்கியே நடக்கும் குணமுள்ளவன் அன்னிய நாட்டில் வியாபாரமுண்டு.

5. சிம்மமானபல் எவருக்கும் அடங்கி நடக்க மாட்டான் அதிக கர்வ குணமுண்டு துஷ்ட செயல்களுக்கு உட்படுவான். சதா காலமும் வீண் வழக்கும், வம்பும் உண்டாகும்; அகால பேவஜனத் அலைச்சல் உண்டு.

6. கன்னியானால் இதில் சந்திரன் வளர்பிரைச் சந்திரனால் வியாரத்திலும் விவசாயத்திலும், திரவிய லாபமுண்டு. சில கெட்ட கிரகங்களின் பார்வையினால் துற்பலனையும் மனக்கவலையும் கொடுப்பான்.

7. துல்மானால் அங்க ஊனமுடையவன். தனவான் தெய்வபக்தி சஸ்திரயுணர்ச்சி குடும்பத்தை ரட்சிக்கும் தன்மையுள்ளவன், அடிக்கடி நோயினால் பீடிக்கப்படுவான்.

8. விருச்சிகமானால் சூதுவாது உடையவன். கபட குணமுள்ளவன் தேசசஞ்சாரம் செய்வான் மாதா பிதாவை விட்டுப் பிரிந்து வாழ்பவன், சிறு வயதில் நோயினால் பீடிக்கப் படுவான்.

9. தனுசு ஆனால் ஜாதகன் பிதுராஜ்ய சம்பத்துடையவன், பலவிதமான பாஷைகள் அறிந்தவன் கலைகளிலும், சங்கீ தத்திலும் சொற்ப ஞானமுடையவன்.

10. மகரமானால் கோபகுணகும், மிகுந்த ஆசையுமுடையவன் சுயநலப்பிரியன, சதாகாலமும் கவலையும் திரவியம் சம்பாதிக்கும் குணமுடையவன்.

11, கும்பமானால் செவி கேளாதவன் சதாகாலமும் அலைந்து நடக்கும் குணமுள்ளவன் பல சுபக்கிரகங்களின் பார்வையினால் பலவிதமான நன்மையுண்டு சாஸ்திரங்களில் சொற்ப ஞான முடையவன்.

12. மீனமானால் தனவான் கல்வி அறிவுடையவன் கப்பல் மூலம் வியாபாரம் மேல் அதிகாரிகளின் நட்பு முதலிய சேர்க்கையுண்டு சுபக்கிரகங்களின் பார்வையினாலும் உச்சம் நட்பினாலும் இன்னும் விசேஷ நன்மைகளுண்டு.

......(...)......

## 8. அங்காரகன் இருக்கும் இராசி

1. மேஷமானால் பூமி உடையவன் உத்தியோகப் பெருமை யுடையவன் பொது ஜனங்களின் புகழ்ச்சியுடையவன் ராஜங்கத்தின் மூலம் பொருள் வரவு உடையவன்.

2. ரிஷபமானால் ஜாதகனுக்குச் சுபக்கிரகங்களின் பார்வையினால் விசேஷமான நன்மைகள் உண்டு மெலிந்த சரீரமும் ஓசையுமுள்ளவன் சனி, ராகு, கேது இவர்களின் பார்வை பெற்றாலும் சம்மந்தமானாலும் பலவிதமான கஷ்ட நஷ்டங்களைக் கொடுப்பான்.

3. மிதுனமானமல் சுபக்கிரங்களின் பார்வை பெற்றலும் ஜாதகனுக்கு வியாபார விருத்தியும் தரவிய லாபமும் உண்டு கல்வி தேர்ச்சி உண்டு சில கிரகங்களின் பார்வையினால், வறுமை பிணி விரோதம் குடும்பக் கஷ்டமுண்டாகும்.

4. கடபமானல் தனவந்தன் இராஜர்களால் போற்றும் தன்மையுடையவன் உத்தியோக தொழிலில் மேன்மை உண்டு,

5. சிம்மமானால் கீர்த்தி நூல்ந்த செல்வமுடையவன்,

6. கன்னியானால் ஜாதகன் கைத்தொழில் முறைகளில் முன்னானற்றமயையான் சில சமயங்களில் அசுப கிரகங்களின் பார்வையாலும் சம்பந்தத்தினாலும் பலவிதமான துன்பங்களைக் கொடுப்பான்.

7. துலாமானால் ஜாதகன் காம விகாரமுடையவன் கீர்த்தியுடையவன் வண்டி வாகன முடையவன் சொற்பக், கல்வி அறிவுடையவன் இருதாரமுடையவன்.

8. விருச்சிகமானால் சிறுவயதில் மாதா பிதாவை இழந்தவன் விவசாய விருத்தியுடையவன் பூமி பூஷணாதிகள் உடையவன் சனி ராகு கேது பார்வையுண்டானால் எப்பொழுதும் மனக்கவலை யுடையவனாக இருப்பான்.

9. தனுசு ஆனால் தன தான்ய சம்பத்துடையவன் வரவுக்கு மிஞ்சிய செலவுடையவன் எதிரிகளை ஜெயிப்பவன் புத்திரபாக்கியம் நிறைந்தவன் எவ்வளவு வருமானம் வந்தாலும் கத்தியமான நிலையுள்ளனாகவே யிருப்பான்:

10. மகரம் ஆனால் ஜாதகன் துஷ்டப்பிர விருத்தியும் அன்னியமாதரின் இச்சையுடையவனாகவும் இருப்பான் கோர்ட்டு வழக்குகளின் வல்லவன் ஈகை குணமில்லாதவர் அன்னியர் பொருளில் இச்சையுள்ளவன்.

11. கும்பமானால் ராஜர்களுக்கிச் சமானமானவன் சகாஜசம்பத்துடையவன் இப்படிபட்டவர்களுக்கு ஜாதகன் ஜெனன காலததில் இந்த ராசியில் அங்காரகன் இருந்து குரு தத்தி பார்வையானால் இன்னும் பிரபலமான யோக முண்டாகும்.

12. மீனமானால் ஜாதகன் வித்தியாச விஷயங்களில சமார்த்தியமாய்ப் பேசும் குணமுடையவன் கைத்தொழிலில் வல்லவன் சுகவாழ்வுடையவன்.

## 4. புதன் இருக்கும்ராசி



1 மேஷமானால் வறுமையுடையவன் சாஸ்திர ஆராய்ச்சி ஞானமுடையவன் கல்வி அறிவிகளில் தேர்ச்சி உள்ளவன், அதலால் சொற்ப வருமான முடையவன்.

2 ரிஷபமானால் ஜனங்களால் போற்றும் தமிழ் வித்துவான் சதாகாலமும் நூல்களில் ஆராய்ச்சி செய்யும் குணமுள்ளவன் வருவாயும் செலவும் ஒரே தன்மையுடையவன்.

3 மிதுனமானால் சதாகாலமும் சுகவாழ்வுடையவன் பந்துமித்திரர்கள் சேர்க்கையுடைவன்.

4. கடகமானால் ஜாதகன் சொற்ப சம்பத்துடையவன் அதிகச் செலவு செய்யும் குணமுள்ளவன் உத்தியோக ஜிவனம் பிடிவாத குணமுடையவன்.

5. சிம்மமானால் தன் மனைவிக்கு அடங்கி நடக்கும் குணமும் இருவரும் குடும்பத்தில் ஒற்றுமையும் எக்காரியங்களையும் சாதிக்கும் குணமுடையவர்கள் சுபக்கிரகங்களின் பார்வை பெற்றால் நலன்கள் உண்டு.

6. கன்னியானால் தயாள குணமுள்ளவன் நற்குணமுடையவன் பூமி மனை ஆஸ்தியுடையவன் சில வேலைகளில் குடும்பத்தில் பிணியுண்டாகும்.

7. துலாமானால் பலவித பாஷைகள் கற்றவன் வித்வான் தான் துலாம் ராசியிலிருந்தாலும் சுபக்கிரகங்களின் ஆஷி நட்பு உச்சம் பெற்றாலும் பலவகைகளிலும் வியாபாரம் செய்து தான் வந்தானவன்.

8. விருச்சிகமானால் வறுமை உடையவன் கப்பல்மாய் வியாபாரம் செய்வான் இன்னும் சுபக்கிரகங்கள் பார்வையினாலும் சம்மந்தத்தினாலும் வீடு பூமி கால் நடைகள் வாகன சம்பத்துடையவனாவான்.

9, தனுசு ஆனால் தீர்க்காயுள் உடையவன் சுபக்கிரகங்களின் பார்வை பெற்றால் நவரத்தின வியாபாரியாவான் ஏகலக்ஷாதிபதியாவான் பெரிய குடும்ப வாழ்க்கை சில சமயங்களில் மாறகத்திற்கொப்பான கெண்டமதைக் கொடுப்பான் ஆனால் கொல்லமாட்டான்

10. மகரம் ஆனால் நாள்தோறும் வருமானமுள்ள கூலிவேலை செய்து பிழைப்பவன் கைதொழிலும் செய்வான் செலவு அதிகமாகும் சொல் தவறி நடப்பான் சுபக்கிரகங்கள் பார்த்தால் நன்மையுண்டு.

11. கும்பமானால் இரும்பு பொன் வெள்ளி பித்தளை முதலிய உலோகத்தினால் கைத்தொழில் செய்பவன் சுபக்கிரகங்கள் ஆக்ஷியானாலும் உச்சமானாலும் ஜோதிட நூல் ஆராய்ச்சி செய்து சாஸ்திரத்தில் வல்லவர்களாவார்கள்.

12. மீனமானால் வேதசாஸ்திர முணர்ந்தேன வான சாஸ்திரத்தில் வல்லவன் மேமையான கல்வி அறிவுடையவன் மாதர் பிதாக்களிடத்திலும் சகோதரர்களிடத்திலும் அன்புடையவன்.

## 5. குரு இருக்கும் ராசி

..........

1. மேஷமானால் தரும குணமுடையவன் சுபக்கிரகங்கள் பார்வை ஆக்ஷி நட்பு உச்சமாக இருந்தரல் ஜாதகன் வியாபாரம் செயது சகல சம்பத்துடையவனாக இருப்பான், புத்திரபாக்கியமுடையவன்.

2. ரிஷபமானால் பலம் பொருந்தியவன் வீடு பூமி கால் நடைகள் வாகனங்கள் உடையவன் சில கிரசங்களின் பார்வையினால் கஷ்டநஷ்டங்களும், துக்கமும் உண்டாகும்.

3. மிதுனமானால் எல்லோரும் புகழும் படியான கீர்த்தி வாய்ந்தவன் அதிகமான கல்வி அறிவுள்ளவன் நான்கு விதமான பாஷைகள் உணர்ந்தவன் நண்பர்களின் பற்று உடையவன் தனவான் ஆபரணாதிகள் உடையவன்

4. கடகமானால் புத்திரபாக்கியம் மிகுதியுடையவன். சிறந்த அறிவாளி சுபக்கிரகங்களினால் நற்பலனும் சில கிரகங்களினால் வறுமையும், கவலையும் உண்டாகும்.

5. சிம்மமானால் தங்கம், பொன், வெள்ளி முதலய நாணயங்களின் மூலம் ஜீவனம் தன்னுடைய நடு வயதில் தாரமிழப்பான், மறுதாரம் கொள்பவன் வர்த்தக விருத்தி

யுண்டு. பந்துக்களினால் நன்மை, கதிப்பு, செல்வாக்கு உண்டு.

6. கன்னியானால் ஜாதகன் ஜெனன காலத்தில் புத பகவான் ஆக்ஷி உச்சத்லிதிருந்தால் பெரியபுலவர் ஆவான் இலக்கண இலக்கிய சாஸ்திரங்களின் வல்லமைபொருந்திய வன், ஆயுள் பீடையுண்டு சுபகிரகங்கள் பார்த்தால் ஆயுள் விருத்தியுண்டு புத்திர பாக்கியம் குறைவு.

7 துலாமானால் ஜாதகன் பலம் பொருந்தியவன் அஞ்சா நெஞ்சு படைத்தவன் சகல சாஸ்திரங்களையும் ஆராய்ந்தவன் இந்த ராசியில் உள்ள குருவை சனி இராகு கேது பகை வீட்டிலிருந்து பார்த்தால் சில துற்பலன்களைக் கொடுப்பார்கள்.

8. விருச்சிகம் ஆனால் ஞானிகளின் சேர்க்கை பிரசா ரம் செய்வதில் தேர்ச்சி உடையவன் யாருடனும் தர்க்கித் துப் பேசிதான் ஜெயமடைவான் பெரியோர்களால் தனம் பொருள், மனை, வரவு உண்டு.

9. தனுசு ஆனால் ராஜாக்களைப்போல் வாழ்வான், வபருந்தனமுள்ளவன், இருதாரமுடையவன், புதல்விகளின் அங்க ஊனமுடையவன்.

10. மகரமானால் அன்னிய நாடுகளில் சஞ்சாரம் செய்வோன். மனத்தைரியம், கீர்த்தி, உத்தியோகம் பெருமை உள்ளவன், பாபகிரகங்கள் பார்வையினாலும் சேர்க்கையாலும், மனக்கவலையைக் கொடுப்பான்.

11. டும்பமானல் ஜாதகன் ஜெனன காலத்தில் இந்த ராசியில் குரு, சனி, புதன் இவர்கள் ஆக்ஷி பெற்றிருந்தால் பூலோகத்தோர் புகழும் கீர்த்தி வாய்ந்தவனாவான். ராகு, கேது சூரியன் இவர்களின் பார்வையோ அல்லது சேர்க் கையோ பெற்றாலும் ஜாதகன் சற்று வறுமையுள்ளவனாக வும் கவலையுள்ளவனாகவும் இருப்பான்.

12. மீனமானால் ராஜர்களுக்குச் சமானமான நிலைமையில் வாழ்வான் சுபக்கிரகங்கள் இந்த ராசியில் ஆக்ஷி நட்பு உச்சமான ஸ்தானத்திலிருந்தால் சொந்த மனை பூமி வாகனங்கள் வந்துசேரும் ஏராளமான தனசம்பத்துமுண்டு.

## 6. சுக்கிரன் இருக்கும் ராசி

1. மேஷமானால் சுபக்கிரகங்களின் பார்வைபெற்றால் ஜாதகன் நீடித்து ஆயுளும், ஆயுள்பரியந்தம் திரவியலாபம் புத்திரபாக்கியம் மனையில் சந்தோஷமான வாழ்க்கையுமுண்டாகும்.

2. ரிஷபமானால் சுக்கிரபகவான் சுபக்கிரகங்களில் பார்வையோ அல்லது சேர்க்கையோ உண்டானால் சுகமான வாழ்க்கையில் வாழ்வான், சதாகாலமும் மனமகிழ்ச்சி உடையவன்.

3. மிதுனமானால் வித்துவான் தனயேசுமுயையவன் சாஸ்திரங்களில் ஞானமுடையவன். அசுபக் கிரகங்களின் பார்வையினால் கலகம் எக்காரியமும் முடிவு பெறாமல் இருப்பது மனக்கவலை, அகாவ போஜனம் வீண் அலைச்சல், இன்னும் பலவித கஷ்வங்களுண்டாகும்.

4. கடகம்ஆனால் எக்காரியம் செய்யத் தொடங்கினாலும் தடங்கலும் பயிவிதமான இடஞ்சல்களும் உண்டாகி அக்காரியமும் முடிவடையாது ஜாதகனுக்குப் பலவிதமாக மனவருத்தங்களுண்டாகும் இதனோடு குரு, புதன் வளர்பிறைச் சந்திரன் சம்மந்தப்பட்டால் வியாபாரத்தினாலோ அல்லது வேறு வழியிலாவது பொருள் வந்து சேர்ந்து சுகமாக வாழ்ந்திருப்பான்.

5. சிம்மராசியில் சுக்கிரனிருந்தால் அதனோடு குரு புதன் சந்திரன் சேர்ந்திருந்தாலும் பார்வை பெற்றுருந்தாலும் ஜாதகன் நல்ல பொருள்தேடி வேசியர்களைக்கூடி வாழ்ந்திருப்பான் ஆனால் செவ்வாய் இராகு கேது கூடியிருந்து தன்னிடத்தை விட்டு மறைவாக இருந்தால் ஜாதகன் பலவிதம் துன்பத்திற்குள்ளாகி இருப்பதுடன் சதாகாலமும் மனககவலை யுள்ளவனாகவே இருப்பான்.

6. கன்னியாராசியில் சுக்கிரன் இருந்து சுபக்கிரகங்கள் பார்வை பெற்றால் பந்துஜன சேர்க்கையுடையவன் புத்திர பௌத்திர சம்பத்துடையவன் அசுபக்கிரகங்களின் பார்வை பெற்றிருந்தால் ஜாதகன் சுகவானாக இருந்த போதிலும் ரோக முடையவன் என்றே சொல்லவேண்டும்.

7. துலாராசியில் சுக்கிரனிருந்தால் இதனுடன் குரு புதள் சேர்ந்து உச்சம் பெற்றிருந்தால் ஜ்தாகன் தனவான் பூமியுடையவன் சனி, இராகு கேது சும்மந்தமுண்டானால் வறுமையில் வாடிவான் மனக்கிலேசமுடையனாகவும் இருப்பான்.

8. விருச்சிகராசியில் சுக்கிரனிருந்தால் நல்ல பலன் கொடுப்பதுடன் அங்காரகள் குரு சம்மந்தப்பட்டால் பூமி லாபம் தனசம்பத்து உடையவனாகவும் கௌரவம் பொருந்தியுமிருப்பான்.

9. தனுசு இராசியில் சுக்கிரனிருந்தால் புகழும் நன்மையும் புத்திரபாக்கியமும், பந்துக்களின் சேர்க்கையும் உண்டாகும் ஆனால் சனி, இராகு கேது சம்பந்தமானால் மனக் கஷ்டம் கலகம் உண்டு பண்ணுவான்.

10. மகரத்தில் சுக்கிரனிருந்தால் இதனுடன் சுபக்கிரகங்கள் பார்வையானாலும், சம்மந்தவான்ாலும் சொநத

டனை கன்று. கானிகள், வாகனங்கள் உண்டாகும். அழியாத சம்பத்துண்டாகும் மற்ற கிரகங்கள் எந்த ராசியில் இருக்கிறதோ அதைக்கண்டும் பலன் சொல்லவேணடும்.

11. குடும்பத்தில் சுக்கிரனிருந்தால் குரு, புதன், சனி தன்னிடத்தில் உச்சம் பெற்று கேந்திர ஸ்தானத்திலிருந்தால் சகல ஐஸ்வரியங்களும் பொருந்தியிருப்பான் எக்காலமும் சுகஜீவியாகவே வாழ்வான்.

12. மீனராசியில் சுக்கிரபகவான் ஆட்சி, உச்சம் பெற்று சுபக்கிரகங்களின் பார்வை பெற்றால் சொந்த மனை, பூமி, தோட்டம் போக்குவரத்தினால் பணவரவுடன் வாழ்வான்' ஆனால் சனி, தேய்பிறைச் சந்திரன் பார்வையானால் வரவு குறையும் என்பதாம்.

## 7. சனி சஞ்சாரம் செய்யும் பலன்

1. மேஷத்தில் சனி பகவான் இருந்தால் ஜாதிப்பிரஷ்டம் மனைவி இல்லாதவன், பித்த சரீரன் அதிக கோபி தனவான் பந்துக்களின் சேர்க்கை உடையறன் நீசச அன்னிய மாதர்களின் சேர்க்கை உடையவன்.

2. சனிபகவான் ரிஷபத்தில் சுபக்கிரகங்கள் பார்வை பெற்று குரு புதன் சந்திரன் பார்வையாவது சேர்க்கையாவது உண்டானால் ஜாதகன் கல்வியும் பலவிதமான வித்தைகளும் கற்று சகல சம்பத்துடன் வாழ்வான்.

4. மிதுன ராசியில் சனிபகவான் சுபக்கிரகங்களின் பார்வைபெற்று மூலதிரிகோணஸ்தானத்தில் உச்சமடைந்து

லக்கினாதிபதியுடன் சம்மந்தப்பட்டிருந்தால் ஜாதகன் கோடீஸ்வரன் என்று சொல்லப்படும் உலகம் போற்றும் உத்தமன் ஆவான்.

4. கடகராசியில் சனி பகவான் சஞ்சாரம் செய்யும் பொழுது அங்காரகன், சூரியன், இராகு கேது பார்வை பெற்றிருந்தால் ஜாதகன் செல்வம் இழந்து, கடனால் வருந்தி தன்னிடம் விட்டு வேறு இடம் போகக்கூடும் ஆனால் சுபகிரகங்களின் பார்வை பெற்றால் கஷ்டம் சற்று விலகும்.

5. சிம்மராசியில் சனிவருங்காலத்தில் அசுபக்கிரகங் களின் பார்வையினால் மனக்கசப்பு விரோதம், வறுமை அடிக்கடி மனவியாகூலம் ஏற்படும். பொருள் சேதமாகும் ஆனால் குரு புதன் வளர்பிறைச் சந்திரன் பார்வை பெற் றால் மனதைரியமாயும் திரவிய லாபத்துடன் சுகஜீவியாக வாழ்வான்.

6. சனிபகவான் தன் சொந்த இடத்தில் இல்லாமல் கன்னியா ராசியில் வரும்பொழுது அங்காரகன் பார்வையி னால் கஷ்டமும் சூரியன், சுக்கிரன் புதன் இவர்கள் பார் வையினால் நன்மையும் உண்டாகும்.

7. துலாராசியில் சனிபகவான் வருங்காலத்தில் உச்ச மடைந்து ஆஷி பெற்றிருந்தால்ஜாதகனுக்கும் பலவிதமான நன்மையும் பொருள் சேர்க்கையும் உண்டாகும். ஆனால் சனிபகவானை இராகு கேது பார்த்தால் நாளுக்கு நாள் செல்வம் குறையும்.

8. விருச்சிக ராசியிம் சனிவரும் காலத்தில் குரு, புதன் அங்காரகன் பார்வை பெற்றால் பொன் ஆபரணம் பூமி தனலாபம் உண்டாகும் ராகு, கேது, சூரியன் இவர்களின் பார்வை பெற்றாலும் சரி சம்மந்தமானாலும் சரி சத்துரு பயம் மனவியாகூலம் கஷ்டம் உண்டாகும்.

9. தனுசு ராசியில் சனி சஞ்சாரம் செய்யுங்காலத்தில் சுபக்கிரகங்களின் பார்வை பெற்றிருந்தால் ஜாதகன் வர்த்தகத் தொழில் மூலம் பொருள் சம்பாத்தியம் செய்வான்.

10. மகரத்தில் சனி வரும் காலத்தில் இலக்கினாபதியுடன் அங்காரகன் குரு சந்திரன் பார்வையினால் பெரிய உத்தியோகஸ்தனாம் எல்லா சாஸ்திரங்களிலும் தேர்ச்சி பெற்றவனுமாக விளங்குவான்.

11. சனிபகவான் கும்பத்தில் ஆக்ஷி பெற்று புதன் சந்திரன் 'குரு சம்பந்தப்பட்டு உச்சம் அடைந்திருந்தால் ஜாதகன் தனவான் யோகக்கரன் பூமி, மனை, வாகனாதிகளை உடையவன் ஆனால் லக்கினாதிபதிபதியுடன் இராகு கேது சூரியன் சம்மந்தமானால் வறுமையும் மனக் கஷ்டமும் ஏற்பட்டுக் கொண்டே இருக்கும்.

12. மீனத்தின் சனிபகவான் வருங்காலத்தில் ஆயுள் காரகனான சனி நீச்சமடைவதனாலும் அசுபக்கிரகங்கள் சம்மந்தப்படுவதனாலும் ஜாதகன் அற்ப ஆயுள் உடையவன் ஆவான்.

## ஒவ்வொரு ராசியிலும் இராகு பகவான் சஞ்சரிக்கும் பலன்

1. மேஷராசியில் இராகு வருங்காலத்தில் ஜாதகன் பந்துமித்திரர்களுடன் கூடி வாழ்வான் அரசாங்கத்தாரால் பணவரவு உண்டு தேவாலயத்தில் பற்றுதல் உடையவன் தெய்வ பக்தியுண்டு,

2. ரிஷபத்தில் இராகு இருந்தால் சுப கிரகங்களின் பார்வையினால் ஜாதகன் புகழும் பெருமையும் உடையவன் ஆவான் சனி, புதன் பார்வையினால் இராஜாக்கள் போற்றும் யோகமுடையவனாகவும் பூர்ண ஆயுள் உடையவனாகவும் இருப்பான்.

3. மிதுனத்தில் இராகுபகவான் வருங்காலத்தில் ஜாதகன் வாதரோகமுடையவன் பெரிய ஞானிகளுக்குப் பகையா இருப்பான், ஆனால் சுபக்கிரகங்களின் பார்வையில் நல்ல பலனையும் நற்குணத்தையும் கொடுப்பான்.

4. கடகத்தில் இராகுபகவான் குரு, சந்திரன், புதன் இவர்களுடன் சேர்ந்து ஆக்ஷி பெற்று இருந்தால் தனவந்தனாகவும் மனைவி மக்களுடனும் கவலையின்றி சுகமாக வாழ்வான்.

5. சிம்மராசியில் இராகுபகவான் சஞ்சாரம் செய்யும் காலத்தில் குரு, சுக்கிரன் புதன் இவர்களுடைய சேர்க்கையினால் சிலாகாலம் நல்வாழ்வும், சிலகாலம் கஷ்டத்தையும் வறுமையும் கொடுப்பான்.

6. கன்னியில் இராகுபகவான் வருங்காலத்தில் வளர்பிறைச்சந்திரன் புதன் ஆக்ஷி பெற்றிருந்தால் ஜாதகனுக்குப் பல வகையிலும் தனவரவும் பிதுர் ராஜ்ய சம்பாத்தியமும் கிடைக்கும் சுக்கிரன் நீச்சடைந்து லக்னாதிபதியுடன் சேர்ந்திருந்தால் ஜாதகன் கஷ்ட நஷ்டங்களுக்கு ஆளாவான்.

7. துலாத்தில் இராகு வருங்காலத்தில் ஜாதகன் சதாகாலமும் அலைச்சலும் அகால போஜனம் செய்யுந்தொழில் முற்றுப் பெரும்பாதும் மனக்சஷ்டத்திலிருந்து தப்பித்து வாழ்வான்.

8. விருச்சிகராசியில் இராகுபகவான் உச்சம் அல்லது ஆக்ஷிபெற்றிருந்தால் ஜாதகன் உண்மை உடையவன் நிலையுள்ள செல்வமுடையவன் பலவிதக் கல்வியும் நான்குவித பாஷைகளும் கற்றிருப்பான்.

9. தனுசு ராசியில் இராகு பகவான் சந்திரன் சனி குரு இவர்களின் சம்பந்தமுடையவனாகயிருந்தால் ஜாதகன் சதாகாலமும் துன்பமும் துக்கமும் உடைய மனமுடையவனாக இருப்பான் புதன் பார்வையானல் கல்வியறிவுள்ளவனாகவும் ஞான வானாகவும் சிறந்த சம்பத்துடையவனாவும் வாழ்வான்.

10. மகரராசியில் இராகு வருங்காலத்தில் அங்கார கன் உச்சமடைந்து மூலதிரிகோண ஸ்தானத்தில் லக்கி னந்திற்கு 4,8,11 குரு சுக்கிரன் சேர்க்கையானால் ஜாத கன் இளமையிலேயே கல்விக்கேள்விகளில் சிறந்து விளங்குவான்.

11. கும்பத்தில் இராகு வருங்காலத்தில் சனி, புதன் இவர்கள் லக்கினத்திற்கு 5,8,6-ம்இடத்தில் இருந்து சப்த மாதிபதியுடன் கூடியிருந்தால் ஜாதகன் கையில் தன பாக்கியம் இருந்தும் கையில் பொருள் இல்லாதவன் போல் கவலையுடன் வாழ்வான்.

12. மீனத்தில் இராகு வருங்காலத்தில் சுக்கிரனும் குரு வும் சனியும் ஆக்ஷிபெற்று தன் சொந்த இடத்தில் இருந் தால் ஜாதகன் பிரபல யோக முடையவனாகவும் புத்திர ரில்லா பெண்கள் அதிகமாகவும் வாழ்வதுடன் லக்கினத் திற்கு 3 ᵉ 9 . 2-ம் இடத்தில் அங்காரகன் இருந்து மூல திரி கொண ஸ்தானத்தில் இருந்து முக்கால் பார்வை பெற்றால் ஜாதகன் அடிக்கடி பிணியால் வாடுவான்.

ஒவ்வொரு ராசியிலும் கேது பகவான்
சஞ்சாரம் செய்யும் பலன்

1. மேஷத்தில் கேது வருங்காலத்தில் அசுபக் கிரகங் களின் பார்வையினால் ஜாதகனுக்கு ஜுரம், பேதி, உஷ்ண சம்பப்தமான வியாதிகல் சம்பவிக்கும்.

2 கேது பகவான் ரிஷபத்தில் இருந்தால் பாபக்கிர கங்கள் சம்மந்தமானாலும் பார்வை பெற்றாலுய் ஜாதகனுக் குத் தன விரயம் மனக்கஷ்டம் கடன்காரர்களால் தொந்தரவு அகால போஜனம் வீண் அலைச்சல் உண்டா கும்.

3. மிதுனத்தில் கேது பகவான் குரு சுக்கிரன் புத னோடு சம்மந்தப்பட்டு ஆக்ஷி பெற்றிருந்தால் ஜாதகன் தனத்துடன் சகோதரர்களின் ஒற்றுமையுடனும் சுக ஜீவி யாக வாழ்வான்.

4. கடகத்தின் கேது வருங்காலத்தில் சனி, சந்திரன், குரு. இவர்கள் லக்கினத்திற்கு 3,4,6,7-ம் இடத்திலிருந்து முழுப்பார்வையுடன் பார்த்தால் ஜாதகனுக்குப் பலவித நன்மைகளும் வண்டிவகானாதிகளும் கால் நடைகளும் சொந்த மனையும் பூமியும் உண்டாவதுடன் எத்தொழில்செய்தாலும் லாபமுண்டாகும்.

5. சிம்ம ராசியில் கேது பகவான் சனி, புதன் குரு இவர்களுடன் சேர்ந்து இச்சம் பெற்று லக்கினாதிபதியைத் தன்னிருப்பிடத்திலிருந்து அரைப்பார்வை பார்த்தால் ஜாதகன் சுக வாழ்வுடன் வாழ்வான்.

௬. கன்னியர் ராசியில் கேதுபகவான் லக்கினாதிபதியுடனும் தெசாநாதனுடன் சம்மந்தப்பட்டு புதன் அங்காரகன் பார்வை பெற்றால் ஜாதகனுக்கு மாரகத்திற்கு ஒப்பான ஓர் கண்டத்தைக்கொடுப்பான். ஆனால் கொல்லமாட்டான்

7. துலா ராசியில் கேது பகவான் சஞ்சாரம் செய்யும் காலத்தில் சந்திரன் சனி இவர்கள் லக்கினத்திற்கு 2,6,7,9 இடத்தில் இருந்தால் ஜாதகனுக்கு குழந்தைகள் ஜெனித்து இறக்கும் ஆனால் சுபக்கிரகங்கள் பார்வை பெற்றால் புத்திரர்கள் நிலைக்கும்.

8. விருச்சிக ராசியில் கேதுபகவான் குரு, புதன், சுக்கிரன் இவர்களுடன் சம்மந்தப்பட்டாலும் பார்வை பெற்றாலும் ஜாதகனுக்குப் பயம் பகை தான் எடுத்த காரியங்கள் எல்லாம் தடை மாதாபிதா பான்டான் இவர்களுக்குமரணம் தன விரயம் முதலிய தீமைகளைக் கொடுப்பான்.

9. தனுசு ராசியில் கேது வருங்காலத்தில் பிதுர்களுக்கும் தாய் தகப்பன் இவர்களுக்கு மரணத்தையும் கொடுப்பான். ஆனால் கேது பகவான் லக்கினத்திற்கு 5 6,7,8 இடங்களில் இருந்து சுபக்கிரங்களில் பார்வை பெற்றால் நற்பலனைக் கொடுப்பான்.

10 மகர ராசியில் கேதுபகவான் சனி, இராகு இவர்களுடைய பார்வை பெற்றால் ஜாதகனுக்கு அடிக்கடி மனக்

கஷ்டத்தையும், வறுமையும் கொடுப்பான். ஆனால் கேது பகவான் லக்கினாதிபதியுடன் சம்மந்தப்பட்டு. குரு பார்வை பெற்றால் கஷ்டம் நீங்கி சுகஜீவியாக வாழ்வான்.

11, கும்ப ராசியில் கேதுபகவான் சஞ்சாரம் செய்யும் காலத்தில் சுபக்கிரகங்களின் பார்வையினால் பலவித நன்மையும் பாபக்கிரகங்களின் பார்வையினால் மனக்கஷ்டமும் வறுமையும் தீராப்பிணியையும் கொடுப்பான்;

12. மீன ராசியில் கேது வருங்காலத்தில் ஜாதகனுக்கே மாரகத்தைக் கொடுப்பான். குடும்பத்தில் பலவிதமான கஷ்டங்களையும் கடன் தொல்லையும் கொடுப்பான் ஆனால் லக்கினாதிபதியுடன் சுபக்கிரகங்கள் சேர்க்கையாயிருந்தால் ஆயுள்காரனாகிய சனி மாரகத்திற்குச் சமமான கெண்டத்தைக்கொடுப்பான், கொல்லமாட்டான்.

குறிப்பு: தெசா புத்திகளிலோ அல்லது ஒவ்வொரு ராசியிலும் கிரகங்கள் சஞ்சாரம் செய்யும் காலத்திலோ ஜாதகனுடைய ஜெனன காலத்திலும், தெசைகள் நடக்கும் காலத்திலும் ந்த பாதத்தில் பஞ்சாங்கத்தைப்பார்த்து கிரகங்கள் இருக்கும் நிலைமைக் கண்டறிந்தும் யோசித்து பலன் சொல்ல வேண்டும் தவிர இப்புத்தகத்திலுள்ளபடியே பலன் சொல்லிடக்கூடாது என்பதை அறிய வேண்டும்

## நவக்கிரகங்களின் அம்சங்கள்

1. சூரியன்:- ஆண்கிரகம் பாபக்கிரகமாகும் தந்தை கண், தலை, தேகம், தைரியம், சுகம், தொழில் அதிர்ஷ்டம் விவசாயம், கடன் கொடுக்கல் வாங்கல் அதிகாரம் முதலியவைகளைக் காட்டும்.

2 சந்திரன்:-வளர்பிறையில் சுபனாகவும் தேய்பிறையில் பாபியாகவும் இருப்பாள். ஆனால் இது பெண் கிரகமாகும் குலம் வைசியகுலம் நவரத்தினங்கள், நவதானியங்கள முதலியவற்றைக் காட்டும்.

3. அங்காரகன்.-இது ஆண் கிரகம் பாபக்கிரகமாகும். சகோதரர்கள். மனை, பூமி, பகைவர் தந்தையின் கால வழியைச் சேர்ந்த பந்துக்கள் திடீரென்று ஏற்படும்

மரணத்தால் உள்ளதை வைத்துக்கொள்ளவும் இந்தப்படி ஏழு கிரகங்களுக்கும் வந்த வயதைக் கூட்டிக்கண்டது சுத்த ஆயுள். இது பலபத்திரர் மந்திரேஸ்பரர் கணிதசாஸ்திரப் படி ஏற்படுத்தப்பட்ட பலன் ஆகும்.

அங்காரக தோஷ விபரம்

1. அங்காரகன் ஸ்திரீ ஜாதகங்களில் 2 4 7 8 12 ஆகிய இந்தயிடங்களிருப்பின் கணவனுக்காகாது இது போலவே புருஷருடைய ஜாதகங்களிருந்தால் பெண்ணுக்கு ஆகாது.

2, புருஷர்களுக்கு 2-லும் 47 12லும் இவர்களுக்கும் 5-ல் அங்காரகன் இருந்தால் தோஷமுண்டு.

3. இரு திறத்தாருக்டிம் மிதுனம் கன்னி இவைகள் இரண்டாமிடமாகி அதில் அங்காரகனிருந்தால் தோஷ மில்லை.

4. விருச்சிகம் துலாம் ஆகிய இவற்றுள் ஒன்று பன்னி ரெண்டாமிடமாகி அதில் அங்காரகனிருந்தால் தோஷ மில்லை.

5. மேஷம், விருச்சிகம் ஆகிய இவற்றுள் ஒன்று நான் காமிடமாகி அதில் அங்காரக னிருந்தால் தோஷமில்லை.

6. மகரம்-கடகம் ஆகிய இவற்றுள் ஒன்று ஏழாமிட மாகிய அதில் அங்காரனிருந்தால் தோஷமில்லை.

7. தனுசு மீனம் ஆகிய இவற்றுள் ஒன்று எட்டாமிட மாகில் அதில் அங்காரகனிருந்தால் தோஷமில்லை.

8. கும்பத்திலாவது சிம்மத்திலாவது அங்காரனிருந் தால் தோஷமில்லை.

9. அங்காரகன் சந்திரனுடன் சேர்ந்தாலும் அல்லது குருவுடன் சேர்ந்தாலும் தோஷமில்லை.

10. அங்காரகன் சுயக்ஷேத்திரத்திலாவது சுயநவாம் சத்திலாவது இருப்பினும் புதன் சந்திரன் சுக்கிரன் குரு ஆகிய இவர்களுள் ஒருவரோடு கூடியாவது அல்லது அவர் கள் பார்வை பெற்றாவது இருப்பினும் ஜாதகனுக்கு அங்கா ரக தோஷங்களையும் பெற்று வாழ்வான்.

ஆயுளை அற்பாயுள் என்றும் இடை மத்திகால ஆயுள் என்று தீர்காயுள் என்றும் சித்தாதி ஆயுள் என்றும் பிரித்துக்கணக்கிடுரார்கள். அற்ப ஆயுள் என்பது 26 முதல் 37 வயது வரை இடை மத்தியகால ஆயுள் என்பது 37 முதல் 60 வயது வரையிலும் தீர்க்காயுள் என்பது 60 முதல் 85 வயது வரையிலும் கூறலாம் சித்தாயுள் என்பது பெரிய மகரிஷிகளுக்கும் தன்னை அறிந்த ஞானிகளுக்குமே உரியது. இவர்கள் தன்னுடைய ஆயுள் உயர்த்தவுப் குறைக்கவும் முடியும் இவர்களே சித்தர்கள் எனப்படும்.

ஒரு ஜாதகத்தின் ஆயுளைச் சோதனைச் செய்யும் காலத்தில் ஜாதகரீதியாக 1-வது பாவம் 8-வதுபாவம்3வது பாவம் 10வது பாவம் இவைகளைக் கொண்டும் மூன்றாவது பாவமாகிய ஆயுள் காரணமான் சனிபகவானில் நிலைமை கண்டும் சொல்லவேண்டும்.

மேற்கூறிய நான்கு கிரகங்களும் நட்பு ஆஷி உச்சம் கேந்திரம் பெற்று திரிகோண ஸ்தானங்கலிருந்தால் ஆயுள் விருத்தியுண்டு இந்த நான்கு கிரகங்களையும் சுபக்கிரகங்கள் பார்த்தாலும் சம்மத்தப்பட்டிருந்தாலும் ஆயுள் விருத்தி உண்டு. ஆனால் மேற்கூறிய நான்கு கிரகங்களும் நீச்சம் பகை அடைத்து 6,8 12-ம் ஸ்தானங்களிலிருந்தால் ஜாதகனுக்கு ஆயுள் குறைவு என்று கூறலாம். ஆனால் ஆயுள் காரகனான சனிபகவான் பலவானாக இருந்தால் கொல்ல மாட்டான் என்பதாம்.

ஜெனன லக்கினமும் லக்கினாதிபதியும் திசாநாதனும் வலிவடைந்திருந்தால் ஆயுள் விருத்தி உண்டு என்பதாம்.

### இரண்டாவது ஆயுள் சோதனை விபரம்

சுத்த பிண்டத்தை 30-ஆல் வகுத்த வந்த ஈவு வருடம் மாதத்தை 12, 30, 60 முறையே பெருக்கி 30-ஆல் வகுத்து வந்தது மாதம் நாள் நாழி.

30-ஆல் வகுத்து வந்த ஈவு வருஷம் 12க்குள்ளிருந்தால் உள்ளபடி வைத்துக் கொள்ளவும் 1-க்கு மேற்பட்டால்

எத்தனை தடவை 12-எடுபடுகிறதோ அதை எடுத்து விட்டு மீதியை வைத்துக் கொள்ளவும் உச்ச கிரகத்துக்கு வந்த வயதை இரட்டித்துக்கொள்ளவும் மூலதிரிகோணம் பெற்ற கிரகத்துக்கு வந்த வயதை ஒன்னரை பங்காகவும் ஆட்சிக்கு ஒன்னேகால்பங்காகவும் நட்புக்கு ஒரு பங்காகவும் பகைக்கு முக்கால் பங்காகவும் நீச்சத்துக்கு அரை பங்காகவும் செவ்வாய் வக்கிரகமாய் இருந்தால் உச்சத்தைப்போல இரட்டித்துக் கொள்ளவும் கண்ட வயதை இந்தப்படி ஏழு கிரகங்களுக்கும் ஆயுள் கூட்டுவதுன் ஆயுள் தாயம் செய்து கொள்ளவும்.

இலக்கின ஆயுள் தர்யம் எப்படியென்றால் ஏழு கிரகங்களுக்கும் செல்லியிருக்கிற அஷ்டவர்க்கத்தில் வருகிற லக்கின பரல்களை எடுத்து வேறு சக்கரம் போட்டு இலக்கின முதலாக ஏழு அஷ்டவர்க்க இலக்கின பரல்களைப்போட்டு 12-ராசியிலும் வந்த பரல்களை திரிகோண ஏகாதிபத்தியம் செய்து ராசி குணாகரம் செய்து கிரககுணாகரம் செய்து இரண்டையும் கூட்டி வந்த துகையை மேலே கண்டபடி 30-ஆல் வகுத்து வருஷம் மாதம் நாள் நாழிகையைக்கூட்டி வந்தது சுத்த ஆயுள் என்றும் அறியவும் மேற்கண்ட ஏழு கிரகத்தின் லக்கின பரதோடு மறுபடி லக்கின பரப்பால் பிரத்தியோகமாக 3 6 10 11-என்ற துகைகளையும் லக்கின முதல் எண்ணிப்போடவும் அப்படிப்போட்டால் எட்டு வர்க்கங்கள் ஏற்படுகிறது இது ஜாதகப் பாரிஜாதகம் ஏற்படுத்திய கிரந்தகர்த்தா வைத்திய நாத சாஸ்திரிகள் கணிதப்படி ஏற்பட்டது.

மூன்றாவது ஆயுள் சோதனை விபரம்

சுத்த பிண்டத்தை 7-ல் பெருக்கி 27 ஆல் வகுத்து வந்த ஈவு வருஷம் மாதத்தை 1230-ஆல் முறையே பெருக்கி 2 க்குக் கொடுக்க வந்தது மாதம் நாள் நாழிகை வினாடி தற்பரையில் ஏற்படுத்திக் கொள்ளவும்.

27-ஆல் வகுத்துவந்த வருஷம் 27க்கு மேற்பட்டால் எத்தனை தடவை 27 எடுபடுகிறதோ அத்தனை தடவையும் எடுத்து விட்டு நின்றது வருஷம் 27-க்கு குறைவாக

இருந்து வந்த விரர்கள் க்ஷத்திரிய சூலம்அமங்கிலி அக்கினி பயம் இவைகளைக் காட்டும்.

4. புதன்—நல்ல வாக்கு நண்பர்கள். இலக்கண இலக்கியமறிந்த புலவர்கள் நாட்டியம் பெய்வோர் கவிவாணர், கலைக்கானம், வியாபாரம் முதலியவைகளைக் காட்டும்.

5. குரு;—ஆண் கிரகம் சுபக்கிரமாகும் ஜீவனம் இராஜமரியாதை தேவ ஆரோக்கியம் ராஜாங்க விஷயங்கள் வியாபாரம் முதலியவைகளைக் காட்டும்.

6. சுக்கிரன்;—பெண் சிரகமாகும் ஆடை ஆபரணங்கள் சொந்தமனை மாமன், மணமகள், வெள்ளி, தங்கம், வியாபாரம் விவசாயம் வண்டி வாகனங்கள் முதலியவைகளைக் காட்டும்.

7. சனி—இது பாபக்கிரகமாகும், ஆயுள் தொழில் தேகத்தில் உண்டாகும் மேக சம்பந்தமான பிணி, விதவை வேடுவர் மலடி இராஜ தண்டணை நாற்கால் பிராணிகள் இவைகளைக் காட்டும்

8. இராகு இது பாபக்கிரகமாகும் ஆண் கிரகமாகும் தொத்து நோய், லஞ்சம் தோட்டம் துறவு மலைகளில் வசித்தல், யுத்தம், செய்தல், இராஜ தண்டனை ஜலத்தினால் கெடுதி முதலியவைகளைக் காட்டும்.

9. கேது பாபக்கிரகமாகும் மாதா வழியில், நன்மை தீமை பிதுர்க்களின் நன்மை தீமை, வறுமை க்ஷயநோய். தொழில் முதயற்சி அயல்நாடு செல்லுதல் முதலியவைக் காட்டும்.

முதல் ஆயுள் சோதனை விபரம்;

குறிப்பு:— ஜாதகத்தை எழுதத் தொடங்கு முன் ஜாதகனுடைய வஜனன காலமறிந்து ஆயுள் பலனறிந்து நிச்சயித்துக்கொண்ட பிறகே ஜாதகம் எழுதுவது நலம். ஆயுளைக் கவனிக்காமல் பலன்களை எழுதுவது அவ்வளவு உசிதமன்று என்பது அபிப்பிராயம்.

11. அங்காரகன் ஜெனனலக்கினத்திற்கு 1 2 8 7 4 2 முதலிய இடங்களிலிருந்தால் தோஷம் இதுபோல் ஸ்திரீ ஜாதகத்தையும் பார்க்க வேண்டும் இருவருக்கும் இருந்தால் தோஷமில்லை இவ்வாறு புருஷனுக்கு இருந்து ஸ்திரீக்கு இல்லாவிட்டால் ஸ்திரீக்குத் தோஷம் ஸ்திரீக்கு இருந்து புருஷனுக்கு இல்லாவிட்டால் புருஷனுக்கு தோஷம் இரு வருக்கும் இருந்தால் உத்தமமாகும் என்பதாம்.

விருஷ தெசாபலன் விவரம்

ஜெனன நட்சத்திரம் முதல் வருஷப் பிரவேச நட்சத்திரம் வரைக்கும் எண்ணின கணக்கின் தொகையை 9-ஆல் வகுத்த மிச்சம் 1-க்கு சூரியதெசை 2-க்குக் குஜன்தெசை 3-க்குக் குருதெசை 4-க்குப் புதன் தெசை 5-க்குக் கேது தெசை 6-க்கு சுக்கிரதெசை 7-க்கு சனிதெசை 8-க்கு சந்திர தெசை 9-க்கு இராகுதெசை இராகுதெசை இவ்வாறு 360 நாட்களுக்கும்.

1. தெசைகள் அறியவும், சூரியனுக்கு நாள் 18 குஜனுக்கு நாள் 21, குருவுக்கு நாள் 48. கேதுவுக்கு நாள் 21 புதனுக்கு நாள் 51; சுக்கிரனுக்கு நாள் 60, சனிக்கு நாள் 57 சந்திரனுக்குநாள் 30, இராகுவுக்கு நாள் 54 ஆக நாள் 360க்கும், பலன் சூரியதொகையின் பலன் சஞ்சாரம் ஜுர தோஷம் முகரோகம் விரோதம் அவஸ்தை சொற்பலாபம் கலகம் பித்தரோகம் இவைகள் உண்டாகும்.

2. செவ்வாய் தெசைப்பலன் நாள் 21-க்கு விக்கின துக்கம் நஷ்டம் பந்துக்கஇ கலகம் அபவாதம் உண்டாகும்.

3. வியாழன் தெசைப்பலன் 48-க்கு ஆரோக்கியம் போஜன சௌக்கியம் தனலாபம் வாகன லாபம் பூமி லாபம் இவைகள் உண்டாகும்.

4. புதன் தெசைப்பலன் 51க்கு பத்து தெரிசனம் வித்தியாப் பிரசங்கம் நூதன வஸ்திரலாபம் யாத்திரை முதலியவைகள் உண்டாகும்.

5. கேது தெசைப்பலன் 21-க்கு சத்துரு விரோதம் ராஜாக்கினிபயம் சோற உபத்திரவம் ஐந்துக்கள் பயம் ஜுரம் துக்கம் இவைகள் உண்டாகும்

6. சுக்கிர தேசைப்பலன் நாள் 60-க்கு பிரிய சங்கமம் வாகன லாபம் தேசாத்திரம் போகுதல், தனலாபம் இவைகள் உண்டாகும்.

7. சனிதெசையின் நாள் 57க்கு அலக்ஷியம். மனத்துக்கம். அபவாதம் பர்வதா ரோகம் இவைகள் உண்டாகும்

8. சந்திர தெசை நாள் 30-க்குப் பலன் வஸ்திரம் பால் தயிர். தனம் இவைகள் உண்டாகும்.

9. இராகு தெசைப்பலன நாள் 54-க்கு விரோதம் பீடை, குடும்பத்தில் கலகம், ஜுரம் ராஜாக்கினை இவைகள் உண்டாகும்.

## தினப்பலன் விரவம்

ஜெனன நட்சத்திரம் முதல் அன்றைய நக்ஷத்திரம் வரையிலும் ஞாயிர்முதல் அன்றை வாரம் வரையிலும் பிரதமை முதல் அன்றைய திதி வரையிலும் எண்ணிகொண்ட துகை மூன்நறவுங்கூட்டி 9-ஆல் வகுத்துவந்த மிச்சம் 1-க்கு வியாகூலம் 2-கககு சுபம் 3-க்கு துர்வார்த்வை 4-க்கு பந்து தெரிசனம், 5,6-க்கு சுகம் 7-க்கு கலகம், 8-க்கு ரோகம், 9-க்கு ஞான வார்த்தைகள் கேள்வி முதலியவை உண்டாகும்.

## நாள் ஒன்றுக்கு நாழிகை 60-க்கும் பலன்

நவக்கிரகங்களைக் கொண்டு செல்லுதல், அவர்க்கள் ஜென்ம நட்சத்திரத்தைக் கொண்டு அது முதல் நாள் தோறும் சூரிய உதயமாகும் சமயத்தில் உள்ள நட்சத்திரம் வரை எண்ணி கிடைத்த துகையை 4-ல் பெருக்கிப் பிரமை முதல் சூரிய உதயத்திலுள்ள திதிவரை எண்ணி மூன் பெருக்கின துகையுடன் கூட்டி சேர்த்து ஞாயிறுமுதல் அன்றைய வாரம்வரை எண்ணிச்சேர்த்து அதை 9-ஆல் வகுத்த மிச்சம் ஆனால் உதயம் முதல் 3 நாழிகை சூரிய தெசையும் 6 நாழிகை ஆனால் புதன்தெசையும் 3 நாழிகை ஆனால் இராகு தெசையும் 9 நாழிகை ஆனால் குருதெசையும் 9-நாழிகை ஆனால் சந்திரதெசையும் 7 ஆனால் 3 நாழிகை

8ஆனால் 3 நாழிகை சுக்கிரதெசையும் 9 ஆனால் 12-நாழி கை செவ்வாய் திசையும் இது போலவே 60-நாழிகையும் தெசை களையும் அறிய வேண்டியது.

சூரிய திசை செவ்வாய்தசையில் நன்மை செய்யமாட் டார்கள் மற்ற ஏழு தெசைகளிலும் தெசா நாதனாக வரும் காலத்தில் நன்மை செய்வார்கள் என்பதாம்.

### பாதப் பலன் விபரம்

ஜென்ம நட்சத்திரம் முதல் மாதப்பிரவேச நட்சத்திரம் வரை எண்ணி 7-ஆல் பெருக்கி 2-ஆல் வகுத்த மிச்சம்-1க்கு ரோகம் 2-க்கு லாபம் 3க்கு அலைச்சல் 4-க்கு சந்தனம்-க் குத் தம்ம் 6-க்கு ஐஸ்வரியம் 7-க்குப் பொருள் செலவு 8-க்கு அவகேடு இது போல் பலன் அறிய வேண்டும்

### மாசா திசாப்பலன் திசை என்னும் கோட்சார பலன்

ஜென்ம நட்சத்திரமாவது, நாம நட்சத்திரமாவது முதல் கொண்டு எண்ணின கணக்கை 7 ஆல் பெருக்கி 9 ஆல் வகுத்த மிச்சம் ஒன்றுக்கு சூரியதெசை 2 க்குப் புதன் தெசை 3க்கு இராகு செசை, 4க்கு குரி தெசை 5க்கு கேது தெசை 9க்கு சந்திர தெசை 7க்கு சனி தெசை, 8-க்கு சுக்கிர தெசை, 9க்கு அங்காரக தெசை என்றும் தெரிந்துகொள்ள வேண்டியது.

சூரிய திசை நாள் ஒன்னரைக்கு அலைச்சல் ரோகம், விரோதம் புதன் திசை நாலரைக்கு பந்துக்கள் வருகை, லாபம், சௌக்கியம் அற்சவதரிசனம், இராகு திசை நாள் ‹ ஆரைக்கு நீசர் சிநேகிதம் அமங்கலை விரோதம் குரு தேச 4க்கு போஜன சௌக்கியம், தானிய லாபம், வாகன லாபம் கேது தெசா நாள் ஒன்னேமுக்காலுக்கு சரீர சாஸ்டி யம் பரிசய நாமம் சந்திர தெசை இரண்டரைக்கு பூர்வபட்ச சந்திரனானால் திரவிய நஷ்டம், சனி தெசை நாள் நாலேமுக்காலுக்கு குடும்பவிரோதம் சண்டை சக்கிர

தெசை நாள் 5க்கு ரத்தின லாபம் செவ்வாய் தெசை நாள் 1-க்கு அற்பபோஜனம் கலகம் இந்தத் தெசா பலனைக் கோசார பலத்துடன் அனுசரித்துப் பார்த்துக்கொள்ள

விமாக முகூர்த்தங்களுக்கு

நவாம்ச லக்கிபலன்

1. மேஷம்: இந்தி லக்கினத்தில் விவாமானாய் கன்னிகை விதவையாவாள்
2. ரிஷபம்: இந்த லக்கினத்தில் விவாகமான- தன விரதியென்றும்
3. மிதுன லக்கினத்தில் ஆனால் தனபதி என்றும்
4. கடகத்தில் ஆனால் விபசாரி என்றும்
5. சிம்மத்தில் விதவை என்றும்
6. கண்ணியில் குணவதி என்றும்
7. துலாத்தில் ஆனால் நல்ல புத்திரவதி என்றும்
8. விருச்சிகத்தில் ஆனால் வறுமையுடையவள் என்றும்.
9. தனுசில் ஆனால் பூர்வ என்றும்
10. மகரத்தில் ஆனால் விதவை என்றும்
11. கும்பமானால் ரோசவதி என்றும்

12. மீனத்தில் ஆனால் விதவை என்றும் வறுமையுடையவளென்றும், சுபபுத்திரவாதி யென்றும் பலம் அறியுவும்.

குறிப்பு: – இலக்கினத்தைப் பார்க்கிலும் நவாம்சம் பலத்திருக்கவேண்டும் ஆனால் மற்ற கிரகங்கள் எந்தெந்த ராசிகளில் எப்படியிருக்கிறது என்பதை யறிந்துதான் பலன் கூறவேண்டும்.

மனைவி கணவனின் அமஸம்,

ஜெனன லக்கினத்திற்கு சம்தமாதி பதியோடு சம்மந்தப்பட்ட கிரகம் அல்லது சந்திரா லக்கினத்திற்கு சப்தமாகி பதியின் சம்மந்தம் பெற்ற கிரகம் அல்லது சப்தமாதிபதி பார்வை பெற்றதுமான கிரகங்களின் சொக்ஷக்ஷேத்திர லக்கினமாகப் பிறந்தவனுக்கு மனைவி மிகவும் தனபதியாயம்

கணவனிடம் பிரியமுள்ளவளாயும் இருப்பாள் பெண்களின் ஜாதகத்திற்கும் மேலே சொன்ன விதமாக இருந்தால் அவளுக்கு மிகவும் அழகும் பிரியமும் தனபதியுமான கணவன் கிடைப்பான்

## குழந்தை ஜெனன காலத்தில் கெண்டம் கொடுக்கும் நட்சத்திரங்கள்

பரணி, கார்த்திகை, திருவாதிரை, பூரம், விசாகம் இவைகளின் முதல் பாதத்தில் முதல் எட்டு நாழிகை வரையில் தாய்க்குக் கெண்டம்

பூசம், பூரட்டாதி இவைகளின் முதல் பாகம் தகப்பனுக்கும் இரண்டாம் பாதம் தாய்க்கும், 3-ம் பாதம் அம்மானுக்கும் 4-ம் பாதம் சிசுவிற்குங் கெண்டமாம்.

ஆயில்யம் முதல் பாதம் சுபம், இரண்டாம் பாதம் தனநாசம் மூன்றாம் பாதம் தாய்க்கும் 4-ம் பாதம் தகப்பனுக்குங் கெண்டம்

கேட்டையின் ஆதியந்த நாழிகையைப்பத்துபாகமாகப் பிரித்துப் பார்க்க 1 மாதா 2-ம் மாதா மகன் 3 அம்மான் (4) தாய் (5) சிசு (6) தன்வம்மிசம் (7) இரண்டு வம்மிசம் (8] தமையன் (௯) மாமனார் (10) வம்சத்தார் இவர்களுக்குக் கெண்டமாம்.

மூல நட்சத்திரத்தின் ஆதியந்த நாழிகையை 12-பாகமாகப் பிரித்துப்பார்க்க.

(1) தகப்பன் (2) தாய் (3) தமையன் (4) தமக்கை (5) மாமன் (6) தகப்பனுடன் பிறந்தவர் (7) தாயுடன் பிறந்த பெண்கள் (8) சம்மந்தி (9) சிசு இவர்களுக்கு கெண்டமாய் (10) தரித்திரம் (11) இராஜ்ய லாபம் (12) செல்வமுண்டாகும் என்பதாம்.

## ஜெனன சாந்தி

உத்திரம் முதல் பாதம் பூசம் 1,3-ம் பாதங்கள் பூராடம் 3-ம் பாதம் சித்திரை 1,2-வது பாதங்கள் ஆயில்யம் 4-ம் பாதம் மகம் 1ம் பாதம்கேட்டை 4 ம்பாதம்மூலம் 1-ம்பாதம்

ரேவதி 23-வது பாதங்கள் அசுவனி 23-வது பாதங்கள் இந்த நட்சத்திரங்களில் ஜெனித்த குழந்தைகளுக்கு அவசியம் சாந்தி செய்ய வேண்டும்.

## தசாங்கிஷ மறியும் குறிப்பு

கிரகங்கள் உச்சம் மூலத்திரிகோணம் ஆக்ஷி நட்பு ஸ்தானங்களில் வர்க்கோத்தமம் பெற்றிருந்தால் அதிக உயர்த்த ஜாதகம். தசவர்க்கங்களினாலே சூரியன் முதலான கிரகங்கள் ஒவ்வொன்றுக்கும் சுபவர்க்கம் எவ்வளவென்றும் பாலவர்க்கம் எவ்வளவென்றும் கண்டு.

1. சுபவர்க்கம் ஏறினால்: நிஷபலன்,
2. பாரிசாதங்கிஷம்; சுசீகரம்
3. உத்தமாங்கிஷம்; ரோகம்
4. கோபுராங்கிஷம்: வாகனபலிதம்
5. சிங்காசனாங்கிஷம்; செல்வம்
6. பராவதாங்கிஷம்: வித்தை செல்வம் கீர்த்தியுண்டு
7. சுபவர்க்கம் தேவலோகாங்கிஷம்! சைன்னிய அதிபதி
8. வைசேடியாங்கிஷம்: லோகாதிபதி
9. ஐராவதாங்கிஷம்: அஷ்ட ஐஸ்வரியம்
10. தெய்வேந்திராங்கிஷம்: இந்திரபோகி செல்வச் சிறப்புடையவன்,

குறிப்பு:-உச்சத்திலிருக்கும் கிரகம் முழுச்சுபம், மூலத்திரிகோணத்திலிருக்கும் கிரகம் முக்கால் சுகம் ஆக்ஷியிலிருக்குங் கிரகம் அரை சுகம்.

நட்பு வீட்டிலிருக்கும் கிரகம் கால் சுகம்

பகை வீட்டிலிருக்கும் கிரகங்களுக்குப் பாலவர்க்கம்

என்க.

நவாம்சத்துக்குப் பெலம் அரை

| | |
|---|---|
| தசாம் சத்துக்கு பெலம் | கால் |
| துவாம் சத்துக்கு பெலம் | அரை |
| சோடாசாம் சத்துக்கு பெலம் | அரை |
| ஈஸ்டியாம் சத்துக்கு பெலம் | கால் |

இது போலவே பத்து வர்க்கங்களிலும் அதற்குச் சொல்லிய கணிதப்படிக்குள்ள கணக்கில் கிரகமிருந்த ராசிபடியே உச்சம் பெற்றால் அதில் சொல்லிய முழுப்பங்கும் மூலத்திரிகோணம் பெற்றால் அதில் சொல்லிய கணக்கில் முக்கால் பங்கும் ஆட்சி பெற்றால் அதில் சொல்லிய கணக்கில் அரைப்பங்கும் மகை நீச்சம் பெற்றால் அதில் சொல்லிய கணக்கில் வீசம் பங்கும் ஆக மொத்தம் வந்த கணக்கு எல்லாவற்றையும் சேர்த்துக் கூட்டி வைத்துக்கொண்டு அதில் பாவவர்க்கம் எத்தனை என்று அறிந்தும் சுபவர்க்கத்திற்குச் சொல்லிய பெலவாம்சங்களை அறியவும்.

### அஸ்தமனம் அல்லது மூலம்

சூரியனுடைய பாகை 17-க்குள் செவ்வாயும் சூரியனுடைய பாகை 13-க்குள் புதனும் சூரியனுடைய பாகை 11-க்குள் வியாழனென்றும் சூரியனுடைய பாகை-க்குள் சுக்கிரனும் சூரியனுடைய பாகை 5-க்குள் சனியும் வரில் செவ்வாய் முதல் சனிவரை அஸ்தமனமம்ம். சூரியனுக்கு முன்னும் பின்னும் 12 பாகைக்குள் சந்திரவரின் சத்திராஸ்தமனம் இந்த அஸ்தமனத்துக்கு மூடமென்றும் பெயர்.

### பிரச்சனம் செய்யும் விபரம் அல்லது விவாக நிச்சயம்

(பிரச்சன லக்கினத்துக்கு 3 5 7 1 10 11-ல் சந்திரனிருப்பதை வியாழன் பார்த்தால் அந்த ஸ்திரீ புருஷர்களுக்கு விவாகம் நடக்கும் விவாகத்திற்குப் பெண் கிடைக்

குமா என்று ஜோதிடர்களிடம் பிரச்சனம் செய்யும் சமயத்தில் ரிஷபம் கடகம் துலாம் இவைகள் இலக்கினமாகயிருந்து அதிலே சுக்கிரனும் சந்திரனுமிருந்தாலும் அல்லது அதை அவர் பார்த்தாலும் பெண் கிடைக்கும் கிருஷ்ண பட்சத்திற்கு பிரச்சனம் செய்யும் லக்கினத்திற்கு இரட்டையான ராசியில் சந்திரனிருந்தாலும் அல்லது சந்திரன் 8 ஆல் இருப்பதை பாவங்கள் பார்த்தாலும்விவாகம் நடக்காது.

ஒரு விவாகத்தை மனதில் நினைத்து பிரசனம் செய்யும் இலக்கினத்திற்கு 5,6,8-ல் சந்திரனிருந்தால் இவ் விவாகம் நடந்தால் அந்த ஸ்திரீ புருஷர்களுக்கு எட்டு வருஷத்திற்திற்குள் மரணமுண்டாகுமென்று சொல்ல வேண்டும்.

பிரசன லக்கினத்தில் செவ்வாயும் எழில் சுபக்கிரகமுமிருந்தால் அவ்விவாகம் நடக்குமானல் அந்த ஸ்திரீ கெட்ட நடத்தையோடு கூடுவாள் அல்லது அவர்களுக்குப் பிறக்குங் குழந்தைகள் இறந்து போகும் தன் கணவனும் எட்டு வருஷத்தில் இறந்து போவான்,

பிரசன இலக்கினத்தில் சந்திரனும் 7-ல் செவ்வாயும் இருந்தால் விவாகமான பிறகு எட்டு வருஷத்திற்கு மேல் புருஷன் ஜீவிக்கமாட்டான்.

பிரசன்ன இலக்கினத்திற்கு ஐந்தாமிடத்தில் பாபி நீச்சனாயிருப்பதைச் சத்துருக்கள் பார்த்தால் அவ்விவாகப் பெண்ணுக்குப் பிறக்கின்ற புத்திரர் இறப்பார்கள். அல்லது அவள் கெட்ட நடத்தையோடு கூடுவாள் என்பதாம்.

## கிரக வக்கிரகம்

செவ்வாய் விழயான் சனி இவர்களுக்கு 5-ல் சூரியன் வந்தால் வக்கிரம் இவர்களுக்கு 7-ல் சூரியன் வந்தால் அதி வக்கிரம் இவர்களுக்கு 9-ல் சூரியன் வந்தால் வக்கிர நிவர்த்தியாகும் என்பதாம்,

## முகூர்த்த பொருத்தம்
## அல்லது தாரா பலன்

ஆண் பெண் நட்சத்திர முதல் முகூர்த்தம் நடக்கும் நட்சத்திரம் வரை எண்ணி வந்த தொகையை 9-ஆல் வகுத்த மிச்சம் ஒன்றுக்கு ஜென்மம் மத்திபம் 2-க்கு சம்பத்து

நன்மை 3-க்கு விபத்து மத்திபம் 4-க்கு மேஷம். நன்மை 5-க்கு பிரத்தியம் மத்திபம் 6-க்கு ஜாதகம் நன்மை 7-க்கு வலது மத்திபம் 8-க்கு பைத்திரம் நன்மை 9-க்கு பரம பைத்திரம் நன்மை என்பதாம்.

## கிரகசமய விபரம்

குறிப்பு: மேஷம் முதல் ஜெனன லக்கினம் வரை எண்ணின தொகைக்கும் மேஷம் முதல் கிரகம் இருக்கிற ராசி வரை எண்ணின தொகைக்கு மாறி 27-ல் கழித்து வந்த மிச்சத்தை அந்தந்தக் கிரகதெசையில் பெருக்கி 27-க்கிக் கொடுத்த மிச்சம் சமையம்.

உ — என்பது - உத்தமம் ம - என்பது மத்திபம். ச - என்பது சமம்.

1. ஸ்நானம் (ம)
2. அதங்காரம் (உ)
3. விபூதி சந்தனம் (உ)
4. ஜெபம் (உ)
5. சிவபூஜை (ம)
6. அவுபாசனம் (ச)
7. விஷ்ணு பூஜை (ச)
8. பிராமண பூஜை (ம)
9. நமஸ்காரம் (ச)
10. பிரதட்சணம் (உ)
11. வைசுவதேயம் (உ)
12. அதி பூஜை (ச)
13. போஜனம் (உ)
14. புராண பிரசங்கம் (உ)
15. கோபம் (ச)
16. தாம்பூலம் (உ)
17. இராசாங்கம் (உ)
18. கிரீடம் பூனல் (உ)
19. ஜலபானம் (ம)
20. ஆலிங்கனம் (உ)
21. சயனம் (ம)
22. அமுதபானம் (ம)
23. மதனாலங்காரம் (உ)
24. லீலை (ம)
25. போகம் (உ)
26. நித்திரை (ம)
27. ரத்தின பரிட்சை (ம)

## சிநேந்திர கலை

ஆருடம் துடங்கி உதயம் வரை எண்ணினது தொகையை இரட்டித்து அதனுடனே உதயத்திற்கு இரண்டாம் ராசி துடங்கி மேஷம் ரிஷபம் வரையிலும் துடங்கி ஆருடத்திற்கு 12-ம் ராசி வரையிலும் எண்ணின தொகையையுஞ் சேர்த்து 27-ல் கழித்து சேஷத்தை அசுவனி முதலாக எண்ணிக் கண்ட நாள் பிறந்த நாள் நட்ட ஜாதகமாவது ஜெனன கால ஆருடத்தினால் கண்டு செல்லுவதாம்.

## யோகங்கள்

இலக்கினாதிபதி, சூரியன், சந்திரன் ஆகிய இவர்கள் கேந்திர திரிகோணங்களில் உச்சம் ஆட்சி நட்பாக இருந்தால் சீகண்ட யோகமாம் இதன் பலனாவது உருத்திராக்க காரணம் வெண்ணிற்றொளியாம் இவை கூடிய தேகம் மகாத்மாவென்று திருநாமம் அனவரதமுஞ் சிவதியானம் சைவ விரதானு அனுஷ்டானம் சாதுசம் ரக்ஷணம் பரமசமய வெறுப்பு ஸ்ரீ சிவ சுப்பிர மணியர் தொழுகை பெற்று உயர்வதே சீகண்ட யோக பலனாம்.

சுக்கிரன் பாக்கியாதிபதி புதன் இவர்கள் முன் சொன்னபடி கேந்திர திரிகோணங்களில் ஆட்சி உச்சம் நட்பாக இருந்தால் ஸ்ரீநாதயோகமாம் இதன் பலனாவது இலக்ஷ்மி கடாட்சம் ரசமக்குந்த சமயோசித சம்பாஷனை ஸ்ரீமந்த் நாராயண மூர்த்தியின் திருச்சின்னங்களாகிய சங்கு சக்கரம் சதைவாள் கோதண்டன் மாய, பஞ்சாயு தங்களின் நாமத்தாலும் ஸ்ரீரிய பதியின் பத்தியாதி சுலோக பாராயணத்தாலும் காலபோக்குச் சற்குண புத்தி நிர்மல மூலம் நற்புத்திரபேறு பாக்கியம் பல ஜனப்பிரியன் ஆகிய இவைகளையே காட்டுவது ஸ்ரீநாமயோகமாம்.

குரு இலக்கினாதிபதி, சனி இவர்கள் கேந்திர திரிகோண ஆட்சி, உச்சம் நட்பாயிருந்தால் விரிஞ்ச யோகமாம் இதன் பலனாவது பிர்மஞானத்திற்குத் தகுந்த புத்தியும் அதில் தேறிய தீவிர புத்தியும் வேதப்பிரதானமும், நற்குணமும், சந்தோஷமும் [வைதிகக்கர்மம் பிசகின்மையும் கீர்த்தி வாய்ந்த சீஷ்யரும் நல்ல வார்த்தை திரவியம் தாரம் புத்திர பேறு ஜொலிக்கின்ற பிரம்ம தேஜஸும்தீர்க்காயுளும் தவம் ஆகிய இவைகள் பெறுவதேவிரிஞ்ச யோகமாம்.

## [அம்சங்கள்

சஷ்ட்டி அம்சுத்தின் ஓச ராசியில் 1,2,8,9,10,12,55, 16, 30, 31, 32, 33, 34, 35, 39, 40, 42, 43, 11, 52, 59 ஆகிய இவைகள் குரூர அம்சங்களாகும்.

ஓச ராசியில் 2, 4, 5, 6, 7, 13, 14, 17, 18, 19, 20, 21, 22,23,24,25,26,27,28,29,36,37,38,41,45,46,47,49, 50,53,54,55,56,57,58,60 ஆகிய இவை நல்ல அம்சங்க.

| நெ மாதம் | மாத ஜா | ஜா | இராசி கலை | பாகை | கலை | இராசி |
|---|---|---|---|---|---|---|
| 1 சித்திரை | 403 | 6 8 | 4 | 28 | | மேஷம் |
| 2 வைகாசி | 353 | 302 | 5 | 2 | | ரிஷபம் |
| 3 ஆனி | 329 | 325 | 5 | 28 | | மிதுனம் |
| 4 ஆடி | 332 | 3*5 | 5 | 25 | | கடகம் |
| 5 ஆவணி | 353 | 306 | 5 | 6 | | சிம்மம் |
| 6 புரட்டாசி | 362 | 335 | 4 | 53 | | கன்னி |
| 7 ஐப்பசி | 348 | 310 | 5 | 10 | | துலா |
| 8 கார்த்திகை | 3 29 | 328 | 5 | 28 | | விருச்சிகம் |
| 9 மார்கழி | 332 | 325 | 5 | 25 | | தனுசு |
| 10தை | 366 | 295 | 4 | 55 | | |
| 11மாசி | 411 | 263 | 4 | 23 | | கும்பம் |
| 12பங்குனி | 429 | 252 | 4 | 12 | | மீனம் |

ளாகும் இந்த நல்ல அம்சங்கள் சமராசிக்குக் குரூர அம்சங் களாகும் என்பதை அறிந்திருக்க ஒஜராசிக்கு குரூர அம்சம் உத்தமம், அல்லது சம ராசிக்கு நல்ல அம்சங்களாம்.

## அசு சுக கணித விதி

சூரிய புடத்தின் பாகை கலைகளை வைத்து பாகையை அறுபதில் பெருக்கிக் கலைரிடன் கூட்டி அம்மாத ஜாவுக் கரித்த ஈவு பாகை மீதத்தை அறுபதில் பெருக்கி ஜாவுக் கரித்த ஈவுகளை இது உதய பூர்வம் இதை அம்மாத ராசி ஜாவில் களைந்த மீதம் உதையப்பரம் பின்னுக்குச் சூரிய புடத்துப்பாகையை அறுபதில் பெருக்கிக்கலையுடன் கூட்டி அம்மாகத்திற்கு ஏழாவது மாதம் ஜாவின் தொகையைக் கழிக்கவும் பாகை மீதியை அறுபதிலே பெருக்கி ஜாவுக் கழித்த ஈவுகளை அது அஸ்த மனப்பூர்வம் இதை உதயத் திற்கு ஏழாவது ராசி ஜாவில் களைந்து நின்ற மீதி அஸ்த மான பரம்மனப்பூர்வமும்.உதையாதிபரமுங் கூட்டிஉதைய ராசி போகப் பாக்கி ஐந்து ராசி ஜாவைக் கூட்டி கண்டது அரசு, அல்லது பகல் நாழிகை உதயபூர்வமும் அஸ்தமனப் பூர்வமும் கூட்டி அஸ்தமன ராசி போகப்பாக்கி ஐந்து ராசி ஜாவைக்கூட்டிக் கண்டது ராத்திரி நாழிகை மேல்வருமன மகுடு மூன்னிலை

## புதன் குறிப்பு

கும்பம், மீனம், மேஷம், ரிஷபம் இந்த நான்கு ராசிகளிலும் புதன் ரவியுடன் கூடி நடப்பான். மிதுனம், கடகம், சிம்மம் கன்னி இந்த நான்கு ராசிகளிலும், புதன் ரவிக்கு முன் நடப்பபான். துலாம், விருச்சிகம் தனுசு மகரம் இந்த நான்கு ராசிகளிலும் புதன் ரவிக்குப் பின் நடப்பான்.

## கலி சுத்ததினம் எடுக்க வேண்டிய விபரம்

வருடம் அறுபது வைத்து 24-ல் பெருக்கி அதில் 349 கூட்டிப் பிரபவ முதல் சென்ற வருஷத்தையும் கூட்டினால் சாலிவாகன சகாப்தம் இதனுடன் 3179 சேர்த்தால் கலியுக சகாப்தம் இதனை மூன்று பிரிவாக வைத்து முதற் பிரிவை 365 கொண்டு பெருக்கி வந்த தொகையைத்தினமாக வைத்துக்கொள்க இரண்டாவது பிரிவை 4-ல் வைத்த ஈவை மேல் குறித்த தினத்துடன் கூட்டி இதில் வந்த மீதியை ஒன்றுக்குப் பதினைந்து வீதம் நாழிகையாகக் கொள்க மூன்றாம் பிரிவை ஐந்தாற் பெருக்கி இதில் 1237ஐ கழித்து மீதியை 576 கொண்டு வகுத்த ஈவு முன்வைத்த தினத்துடன் கூட்டி மீதியான தொகையை 60 கொண்டு பெருக்கி 576ல் வகுத்த ஈவு நாழிகை மீதியை அதுபோலவே பெருக்கி வகுத்து தற்பறை வரையிலும் சேகரித்துக்கொள்க, இத்துடன் மீதியன்றி கழியும் தொகைப்படுத்திய தினம் நாழிகை விநாடியே சித்திரைமாதப் பிறப்பாகும், இத்துடன் மாத வாக்கிய முன் தேதியும் கூட்டியது கலிசுத்தத் தினம் கூட்டி வந்த நாழிகை, நாடி அந்த மாதப்பிறப்பின் சங்கரம நாழி நாழிகை என்றறிந்து இந்த நாழிகை மட்டும் அர்த்தாதிகமானால் தினத்தில் ஒன்று கூட்டி 7ல் வகுத்த மீதியை சுக்கிரவாரத்தொட்டு எண்ணுவதனால் வாரம் வரும் என்பதாம்.

## லக்கினம் ஸ்புடம் செய்யும் விவரம்

சூரிய புடத்தை வைத்து இராசியைப் போக்கி பாகை கலையை 30 பாகையில் வாங்கி மீதி நின்ற பாகையைக் கலை செய்து கலையுடன் கூட்டி அந்த மாதம் ராசிப் பெருமானத்தில் பெருக்கி இராசி, பாகை கலையாக எரிட்டு இராசி மண்டலங் களையாமல் பாகை யாதிகளை அர்த்

தாதி கரங்கூட்டி நின்ற இராசி எத்தனையோ அத்தனை யும் விநாடி என்றும் இதை உதயபரமென்றும் இதை இராசிப் பெருமானத்தில் கழித்து நின்றது உதைய பூர்வம்.

ஜெனன சமய நாழிகையை வைத்து உதயநாழிகையை வாங்கி எத்தனை ராசி எடுபடுகிறதோ அதை எடுத்துவிட்டு எடுபடாத ராசியில் சென்ற விநாடியை முறையே 30, 60, 60ல் பெருக்கி அந்த இரர்சிப் பிரமாணத்தால் வகுத்துவந்த பாகை கலை விகலையாக வைத்துக் கொள்ளவும்.

ஜெனன சமைய நாழிகை உதைய பரநாழிகைக்குக் குறைந்திருந்தால் உதையபூர்வ நாழிகையும் ஜெனன சமைய நாழிகையும் கூட்டி முன் போல் இலக்கின ஸ்புடம்

நவக்கிரக தோஷ பரிகாரம்

1. சூரியன்:-சூரிய திசையோ புத்தியோ கெடுதலாக இருந்தால் அதற்குச் சாந்தி கொஞ்சம் கோதுமையைத் தலையின் கீழ் வைத்துப் படுத்துக்கொண்டு மறுநாள்காகத் திற்குப் போட்டு சிவனுக்கு அபிஷேகம், அர்ச்சனை செய்யவும்.

2. சந்திரன்:- சந்திர திசையோ புத்தியோ கெடுத லாக இருந்தால் அதற்குச் சாந்தி கொஞ்சம் பச்சரியைந் தலையின் கீழ் வைத்துப் படுத்துக்கொண்டு மறுநாள் அவ் வரிசியைச் சமைத்துத் தன்னைச் சுற்றி நிலவில் மூன்று பக் கங்களிலும் எடுத்து எரிந்து பிறகு அம்மன் ஆலயத்திற்கு அபிஷேக அர்ச்சனை செய்யக்கெடுதி நீங்கும்.

3. அங்காரகன்:-திசையோ புத்தியோ கெடுத லாக இருந்தால் அதற்குச் சாந்தி கொஞ்சம் துவரையை தலையில் கீழ் வைத்துப் படுத்துக்கொள்ள வேண்டும் இதைச் சேர்த்து வைத்திருந்து கார்த்திகைத்தினம் அதைச்

சுண்டலாகச் செய்து தன்னைச் சுற்றிக் காகத்திற்குப் போட்டுவிட்டு முருகனுக்கு அர்ச்சனை செய்ய நிவர்த்தி யாகும்.

4. புதன் :-ஷ தெசையோ புத்தியோ கெடுதலாக இருந்தால் அதற்குச் சாந்தி கொஞ்சம் பச்சைப்பயிரை தலையின் கீழ் வைத்துப் படுத்துக்கொள்ள வேண்டும்; இவ் வாறு வைத்த பயிரை அம்மாவாசையன்று பொங்கல்செய்து காகத்திற்குப் போடக் கெடுதல் தீங்கும். பிறகு பெருமாள் கோவிலுக்கு அபிஷேகம் செய்யக் கெடுதல் நீங்கும்,

5. குரு:- குருதெசையோ புத்தியோ கெடுதலாக இருந்தால் கொஞ்சம் பச்சைக் கடலையைத் தலையின்கீழ் வைத்து படுத்துக்கொண்டு, சேர்ந்த கடலையை தான் பிறந்த நட்சத்திரத்தன்று பிரரமணர்களுக்கு தானம் கொடுத்து ஒரு ஏழைக்கு அன்னதானம் செய்யக் கெடுதல் நீங்கும்.

6, சுக்கிரன்:-சுக்கிர தெசையோ பத்தியோ கெடுத லாக இருந்தால் கொஞ்சம் மொச்சக்கொட்டையை தலை யின் கீழ் வைத்துப் படுத்துக்கொண்டு மறுநாள் காகத்திற்கு போடக் கெடுதல் குறையும்.

7. சனி:-சனி, தெசையோ புத்தியோ கெடுதலாக இருந்தால் கொஞ்சம் என்னைத் தலையின் கீழ்வைத்துப் படுத்துக் கொண்டு மறுநாள் சாதம் வடித்தவுடன் கொஞ்சம் சாதத்தில் எள்ளைக் கலந்து காகித்திற்கு வைத்து வந்தால் தோஷம் நீங்டிம் சனிவிரம் இருக்கலாம் மூன்று எண் ணெய் சேர்த்து நவதாஅயம் மூட்டை போட்டுத் தீபப் ஏற்றிவரக் கெடுதல் குறையும்.

8. ராகு, கேது:-இவைகள் திசையோ புத்தியோ கெடுதலாக நடந்தால் நாகப்பிரதிஷ்டை செய்து வைத்திருக்கும் இடத்தில் ஒன்பது நாள் அல்லவ 4 -நாள் சுற்றிவர வேண்டும் சுற்ற ஆரம்பிக்கும் தினம் நல்ல நக்ஷத்திர பார்த்து ஆரம்பிக்க வேண்டும் (உ-ம) அசுவனி மகம், சுவாதி சதயம் திருவாதிரை இருந்தால் உத்தமம்.

## சூரியன் அஷ்டகவர்கம்

| | | | |
|---|---|---|---|
| 3 | 4 | | 4 |
| 1 | 48 | | 6 |
| 6 | | | 6 |
| 3 | 3 | 4 | 5 |

| | | | |
|---|---|---|---|
| 3 | 3 | 3 | 1 |
| 1 | திரி கோ | | 3 |
| 4 | ணம்-30 | | 3 |
| 3 | 3 | 1 | 3 |

| | | | |
|---|---|---|---|
| | | 3 | 1 |
| | ஏகாதிபத் | | 3 |
| 3 | தியம் 18 | | 3 |
| | 3 | 1 | 1 |

## சூரியன் அஷ்டவர்க்கம் பரல் 48-க்கு விபரம்

1; சூரியன்:-1.2,4,7,8,9,10,11, ...8
2. சந்திரன்:-3,6,10,11, ...4
3. அங்காரகன்:-1,2.4,7,8,9,10,11 ...3
4. புதன்;-3,5,6,9,10,11,12, ...7
5. குரு;-5,6,9,11, ...4
6. சுக்கிரன்:-6,7,12 ...3
7. சனி:-1,2,4,8,9,10, ...3
8; லக்கினம்;-3,4,6,10,11,12, ...6

| | |
|---|---|
| ராசி குணிதம் பரல் | 131 |
| கிரக குணிதம் பரல் | 109 |
| சுத்த பிண்டம் | 240 |
| ஏக சமூகம் | 318 |
| குண சமூகம் | 30 |

## சந்திரன் அஷ்டவர்க்கம்

| | | | |
|---|---|---|---|
| 6 | 3 | 5 | 4 |
| 4 | 48 | | 3 |
| 3 | | | 7 |
| 4 | 5 | 1 | 4 |

| | | | |
|---|---|---|---|
| 3 | 3 | 3 | 1 |
| 1 | திரிகோணம்-30 | | 3 |
| 8 | | | 3 |
| 3 | 3 | 1 | 3 |

| | | | |
|---|---|---|---|
| | | | 1 |
| | ஏகாதி பத்தியம் 18 | | 3 |
| 3 | | | 3 |
| | 3 | 1 | |

| | | |
|---|---|---|
| 1 | சூரியன்:-3 6 7 8 10 11 | 6 |
| 2 | சந்திரன்:-1 3 7 10 11 12 | 6 |
| 3 | குஜன்:-2 3 5 9 10 11 | 6 |
| 4 | புதன்:-1 3 4 5 7 8 10 11 | 8 |
| 5 | குரு:-2 3 4 7 8 10 11 | 7 |
| 6 | சுக்கிரன்:-34 5 7 9 10 11 | 7 |
| 7 | சனி:-3 5 6 11 | 4 |
| 8 | லக்கினம்:-3 6 10 11 12 | 5 |
| | | 49 |

| | |
|---|---|
| ராசி குணிதம் பரல் | 131 |
| கிரக குணிதம் பரல் | 131 |
| சுத்த பிண்டம் | 240 |
| குண சமூகம் | 31 |
| ஏக சமூகம் | 320 |

## செவ்வாய் அஷ்டவர்க்கம்

| | | | |
|---|---|---|---|
| 4 | 6 | 2 | 2 |
| 1 | 39 | | 3 |
| 5 | | | 5 |
| 2 | 2 | 4 | 3 |

| | | | |
|---|---|---|---|
| 2 | 2 | 2 | 1 |
| 1 | திரிகோணம் 21 | | 2 |
| 2 | | | 2 |
| 2 | 2 | 1 | 2 |

| | | | |
|---|---|---|---|
| | | | 1 |
| | ஏகாதி பத்தியம் | | 2 |
| 2 | | | 2 |
| | 2 | 1 | 1 |

## செவ்வாய் அஷ்டவர்க்கப் பரல் 39-க்கு விபரம்

| | | |
|---|---|---|
| 1 | சூரியன்:-3,5,6,10,11, | 5 |
| 2 | சந்திரன்:-3,6,11, | 3 |
| 3 | குஜன்:-1,2,4,7.8,10,10,11 | 7 |
| 4 | புதன்:-2,5,6,11 | 4 |
| 5 | குரு:-6,10,11,12 | 4 |
| 6 | சுக்கிரன்:-6,8,11,12 | 4 |
| 7 | சனி,-1,4,7,8,9,10,11 | 7 |
| 8 | லக்கினம்;-1,3,6,10,11 | 5 |
| | | 39 |

| | |
|---|---|
| ராசி குணிதம்பரல் | 94 |
| கிரக குணிதம்பரல் | 71 |
| சுத்த பிண்டம் | 71 |
| ஏக சமூகம் | 276 |

## செவ்வாய் அஷ்டவர்க்கப் பரல்
## 54-க்கு விபரம்

| | | | |
|---|---|---|---|
| 5 | 7 | 4 | 3 |
| 2 | 54 | | 3 |
| 5 | | | 6 |
| 2 | 5 | 6 | 4 |

| | | | |
|---|---|---|---|
| | 2 | 4 | 2 |
| 2 | திரி கோ | ணம்- 4 | |
| 4 | | | 2 |
| 2 | | 2 | 4 |

| | | | |
|---|---|---|---|
| | 2 | 4 | |
| | ஏகாதி | பத்தியம் 20 | |
| 4 | | | 2 |
| 2 | | 2 | 2 |

| | | |
|---|---|---|
| 1. | சூரியன்:- 5 6 9 7 11 12 | ...5 |
| 2. | சந்திரன்:-2 4 6 8 10 11 | ...6 |
| 3. | குஜன்:-1 2 4, 7 8 9 10 11 | ...8 |
| 4. | புதன்;-1 3 5 6 9 10 11 | ...8 |
| 5. | குரு;-6 8 11 12 | ...4 |
| 6. | சுக்கிரன்:-1 2 3 4 5 8 9 11 | ...8 |
| 7. | சனி:-1 2 4 7 8 9 10 11 | ...8 |
| 8. | லக்கினம்;-1 2 4 6 8 10 11 | ...7 |
| | | 54 |

| | |
|---|---|
| ராசி குணிதம் பால் | 152 |
| கிரக குணிதம் பால் | 77 |
| சுத்த பிண்டம் | 229 |
| குணசமுகம் | 617 |
| ஏக க்மூகம் | 84 |

## வியாழன் அஷ்டவர்க்கம் பரல் 56-க்கு விபரம்

| | | | |
|---|---|---|---|
| 5 | 3 | 5 | 4 |
| 6 | 56 | | 6 |
| 3 | | | 5 |
| 5 | 6 | 3 | 5 |

| | | | |
|---|---|---|---|
| 5 | 3 | 3 | 3 |
| 3 | திரிகோ | | 5 |
| 3 | ணம்-42 | | 3 |
| 3 | 5 | 3 | 3 |

| | | | |
|---|---|---|---|
| 3 | | 3 | |
| | | | 5 |
| 3 | ஏகாதி பத்தியம் 28 | | 3 |
| 3 | 5 | 3 | |

1 சூரியன்:—1 2 3 4 7 8 9 10 11 ,, 9
2 சந்திரன்:—2 3 7 9 11 ,, 5
3 குஜன்:—1 2 4 7 8 10 11 ,, 7
4 புதன்:— 1 2 4 5 6 9 10 11 ,, 8
5 குரு:—1 2 3 4 7 8 10 11 ,, 8
6 சுக்கிரன்:—2 5 6 9 11 1 ,, 6
7 சனி:—3 5 6 12 ,, 4
8 லக்கினம்:—1 2 4 5 6 7 8 10 11 ,, 9

ஆக மொத்தம் 56

| | |
|---|---|
| ராசி குணிதம் பரல் | 219 |
| கிரக குணிதம் பரல் | 163 |
| சுத்த பிண்டம் | 304 |
| ஏக சமூகம் | 468 |
| குண சமூகம் | 28 |

## சுக்கிரன் அஷ்டவர்க்கம் பரல்
## 52–க்கு விபரம்

| | | | |
|---|---|---|---|
| 5 | | 3 | 5 |
| 5 | 52 | | 3 |
| 7 | | | 4 |
| 5 | 3 | 4 | 6 |

| | | | |
|---|---|---|---|
| 3 | 2 | 3 | 4 |
| 4 | திரிகோணம் | | 3 |
| 3 | 36 | | 2 |
| 2 | 3 | 4 | 3 |

| | | | |
|---|---|---|---|
| 2 | | 3 | 3 |
| 3 | 31 | | 3 |
| 3 | | | 2 |
| 3 | 3 | 4 | 3 |

## சுக்கிரன் அஷ்டவர்க்கம் பரல் 52—க்கு விபரம்

1 சூரியன்:-8 11 12 ...3
2 சந்திரன்:-1 2 3 4 5 8 9 11 12 ...9
3 குஜன்:-3 5 6 9 11 12 ...6
4 புதன்:-3 5 6 9 11 ...5
5 குரு:-5 8 9 10 11 ...5
6 சுக்கிரன்:-1 2 3 4 5 8 9 10 11 ...9
7 சனி:-3 4 5 8 9 10 11 ...7
8 லக்கினம்:-1 2 3 4 5 8 9 11 ...8

| | |
|---|---|
| ராசி குணிதம் | 243 |
| கிரக குணிதம் | 148 |
| சுத்த பிண்டம் | 391 |
| ஏக சமூகம் | 464 |
| குண சமூகம் | 21 |

## சனி அஷ்டவர்க்கம்

| | | | |
|---|---|---|---|
| 4 | 3 | 1 | 3 |
| 3 | 39 | | 3 |
| 2 | | | 5 |
| 5 | 4 | 3 | 5 |

| | | | |
|---|---|---|---|
| 2 | 3 | 1 | |
| | திரிகோணம்-24 | | 2 |
| | | | 3 |
| 3 | 2 | | 1 |

| | | | |
|---|---|---|---|
| 2 | 2 | 1 | |
| | 16 | | 2 |
| 1 | | | 3 |
| 2 | 3 | | 1 |

### சனி அஷ்டவர்க்கம் பரல் 39-க்கு விபரம்

1 சூரியன்:-1 2 4 7 9 10 11 ...7
2 சந்திரன்:-3 6 11 ...3
3 குஜன்:-3 5 6 10 11 12 ...6
4 புதன்:-6 8 9 10 12 ...6
5 குரு:-5 6 9 11 12 ...4
6 சுக்கிரன்:-6 11 12 ...3
7 சனி:-4 3 5 6 11 ...4
8 லக்கினம்:-1 3 4 6 10 11 ...6

ராசி குணிதம் 130 கிரககுணிதம் 47
சுத்த் பிண்டம் 177 ஏகசமூகம் 239 குணசமூகம் 32

| | | | |
|---|---|---|---|
| ரா | | வி | |
| | ராசி சக்கரம் | | |
| சுக் | | | |
| [illegible] | கு,சந்,பு | செ,சனி லக் | கேது |

| | | | |
|---|---|---|---|
| 32 | 28 | 23 | 25 |
| 22 | 337 | | 29 |
| 31 | | | 33 |
| 26 | 26 | 5 | 32 |

| | | | |
|---|---|---|---|
| 26 | 26 | 23 | 23 |
| 22 | 291 | | 26 |
| 23 | | | 26 |
| 26 | 26 | 22 | 23 |

| | | | |
|---|---|---|---|
| | | 23 | 2 |
| | 337 | | 26 |
| 23 | | | 26 |
| | 26 | 22 | 22 |

## சர்வாங்க அஷ்டவர்க்கப் பால் 337க்கு விபரம்

| | | | |
|---|---|---|---|
| 1 | சூரியன்:—3 3 3 3 2 3 4 5 3 5 7 2 | —ஆக | 43 |
| 2 | சந்திரன்:—2 3 5 2 2 5 2 2 2 3 7 1 | ,, | 36 |
| 3 | குஜன்:—4 5 3 5 2 3 4 4 1 6 7 2 | ,, | 49 |
| 4 | புதன்:—3 1 5 2 6 6 1 2 5 5 7 3 | ,, | 4 |
| 5 | குரு:—2 2 1 2 3 4 2 4 2 4 7 3 | ,, | 36 |
| 6 | சுக்கிரன்:—2 3 3 3 4 4 2 3 4 3 6 3 | ,, | 40 |
| 7 | சனி:—3 2 4 4 4 2 3 4 4 4 6 1 | ,, | 42 |
| 8 | லக்கினம்:—5 3 5 5 2 6 1 2 2 6 7 1 | ,, | 45 |
| | | ஆக மொத்தம் | 237 |

| | |
|---|---|
| ராசி குணிதம் பால் | 1267 |
| கிரக குணிதம் பால் | 1067 |
| சுத்த பிண்டம் | 2424 |
| குணசமுகம் | 157 |

## அஷ்ட வர்க்க சோதனை

1. சூரியனிருக்கும் இராசிக்கு 9 ம் இராசியைப் பிதுர் பிண்டத்தைப் பெருக்குக

2. இவ்விதம் ஆக்கிய தொகையை 27 ஆல் வகுத்த சேட நட்சத்திரத்தில் சனி வரும்போது சந்தேகமின்றிப் பிதுர்கிலேச முண்டென்க.

3. மேற்கூறிய நட்சத்திரத்திற்குத் திரிகோணத்தில் சனி வரும்போது தந்தையேனும் தந்தைக்கு ஒப்பானவரே னும் நாசமடைவான்.

4. இலக்கினத்திற்குச் சுகாதிபதிவநாம் சத்தில் இருக்கும் இராசியதிபன் தெசையிலாவது சுகாதிபதி வீட்டிற்குச் சமானமுடையரேனும் மிருத்தியு உண்டாகும்.

5. சூரியனது சமுதாயத்தைச் சோதித்து அவர் நின்ற இராசியின் பித்துவை 8-ல் பெருக்கி 12-ஆல் வகுக்கப்படும் இராசியில் சூரியன் வரும்போதேனும் அல்லது திரிகோணத்தில் வரும்போதேனும் தந்தை மரிப்பாள். இவ்விதமே எல்லாக் கிரகங்கட்கும் கணக்கு அறிந்து கொள்ள வேண்டியது

6. சந்திரன் இருக்கும் இராசிக்கு 4-ல் இருக்கிற பிந்துவால் சோதித்த பிண்டத்தைப் பெருக்கி 27-ல் வகுத்த சேஷ நட்சத்திரத்தில்சனி வரும்போது மாதா மரிப்பாள், அல்லது திரிகோண நட்சத்திரத்தில் வரும்போதேனும் நாசமுண்டு.

7. சந்திரனது நான்காம் வீட்டில் எட்டாம் இராசி நாதன் இருக்கும் நவாம்சாதிபதிலன் திரிகோணத்தில் சூரியன் வரும்போது அந்த மாதத்தில் தாய் நாசமுண்டு.

திரிகோண் சோதனை

ஓர் திரிகோணத்தின் ஸ்கானத்தில் பிந்து குறைவாக இருப்பின் அதற்குச் சமனாயுள்ள மற்றிரண்டு கோணங்களின் பிந்துக்களையும் சோதித்திடுக ஓர்வீட்டில் பித்துக்கள் இல்லாதிருப்பினும் திரிகோண சோதனை வேண்டியதில்லை

இரண்டுவீட்டிலுள்ள பிந்துக்கள் இல்லாதிருந்தால் மீத வீட்லுள்ள பிந்துக்கள் முழுவதையும் எடுத்துவிட வேண்டும் மேற்கூறிய மூன்று கோணத்களிலும் பிந்துக்கள் சமமாக இருந்தால் அந்த இடங்களிலுள்ளவைகளையும் நீங்கி விடவேண்டும்

ஏகாதி பத்திய சோதனை.

1. திரிகோண சோதனை செய்த பின்னரே ஏகாதிபத்திய சோதனை புரிவதற்குரியது இரண்டு வீடுகளில் பித்துக்கள் இருந்தால்தான் சோதிக்கவேண்டும்.

2. கிரகம் இருக்கும் இராசியில் பிந்துக்கள் குறைத்தும் அது இல்லாதரசியில் நிறைந்தும் இருப்பின் கிரகம் இல்லாத ராசியின் பிந்துக்களைச் சரிசெய்து கொள்ள வேண்டும்.

3. கிரகம் இருக்கும் வீட்டில் பிந்துக்கள் அதிகரித்து அது இல்லாத வீட்டில் குறைந்து இருப்பின் அவை யாவையும் எடுத்து விடுக கிரகத்துடன் கூடிய இராசியிலும் அது இல்லாத இராசியிலுள்ள பிந்து சமமாக இருந்தால் கிரகமில்லாத இராசியிலுள்ள எல்லாப் பிந்துக்களையும் எடுத்துவிட வேண்டும்.

4. இரண்டாம் வீட்டில் கிரகங்கள் இல்லாதிருந்து பிந்துக்கள் சமமாக இருந்தால் எல்லாவற்றையும் எடுத்து விட வேண்டும் இரண்டாம் வீட்டில் கிரகங்கள் இருந்தால் எப்பொழுதும் சோதனை வேண்டுவதில்லை,

5. ஓர் வீட்டில் பிந்து சூன்யமுண்டாயின் மற்றோர் வீட்டைச் சோதித்தல் அவசியமில்லை இரண்டு வீட்டிலும் கிரகங்கள் இல்லாது பிந்துக்கள் ஏறக்குறைய இருந்தால் சரிசெய்து கொள்க.

6, சோதிக்கப் பெற்று மிகுந்த பிந்துக்களை அந்தந்த ராசியின் சங்கியையிலும் அந்தந்தக் கிரகங்களின் சங்கியைகளிலும் பெருக்குக.

## இராசி குணாகாரம்

1. ரிஷப சிங்கங்கட்குப் பத்தாலும் மிதுன விருச்சிகங்கட்கு எட்டாலும் துலாம் மேஷத்திற்கு ஏழாலும் கன்னி மகரத்திற்கு ஐந்தாலும் பெருக்குக.

2. கடகம், தனுசு, கும்பம், மீனம் இவைகளை மேஷர்தியான இராசியின் எண்களால் தனித்தனி பெருக்குக இவை ராசி குணாகாரம் கிரக குணாகாரம் என இருவகைப்படும்.

3. குரு, குஜன், சுக்கிரன், புதன் இவைகளுக்குக் கிரமமாய் 10, 8, 7, 5 ஆகிய இந்த எண்களாலும், மற்ற கிரகங்கட்கு (புதனுக்குச் சொன்ன) ஐந்தாலும் பெருக்கிப் பிறகு இராசி குணத்தாலும், கிரக குணத்தலும் தனித்தனி பெருக்குக, இவ்விதம் பெருகிவந்த தொகையை ஒன்றாய்க் கூட்டுக பிறகு அத்தொகையை ஏழால் பெருக்குக. பிறகு அதை 27-ஆல் வகுக்க வருவதே (ஆயு) வருஷமாம்.

யீதத்தைக் கிரமமாய் 12, 30, 60, இவ்வெண்களால் பெருக்கி 7-க்குக் கொடுக்க மாதம், நாள், நாழிகை முதலி யனவரும் வருஷங்களில் வந்த ஈவை மண்டலமாகிய 27-ல் கழித்து மற்றவைகளை வைத்துக்கொள்க. 27-க்குக் குறைந் தால் உள்ளபடி வைத்து கொள்ளவும்.

கிரகங்கள் கூடியிருந்தால் அவரவர்களுக்குப் (பாதி வருஷங்கள்) தள்ளிவிடுக. நீச அஸ்தானம் அடைந்த கிர கங்களுக்கும் பாதியை நீக்குக ஷத்துரு க்ஷேத்திரமானால் 3-ல் ஓர் பாகத்தைத் தள்ளிவிடுக. திரிசியார்த்தமாயின் 3- ஓர் பாகத்தையும், சூரிய சந்திரர்களின் பாதத்திலிருக்கி கிரகங்களாயின் 3-ல் ஓர் பாகத்தையும் தள்ளிவிடுக ஓ கிரகத்திற்கு அநேக ஹரணங்கள் உண்டாயின் பலமான ஹரணம் ஒன்றை மாத்திரம் எடுத்துக்கொள்ள, பிறகு அவற்றை ஒன்றாகச் சேர்த்து 324 பெருக்கி 365-ஆல் வகுக்க வரும் ஈவே வருஷமாம் சந்தேகமில்லாமல் இது சுத்த ஆயுளாகும் இவ்விதம் சகல கிரகங்களுக்கும் தெசையை உண்டி பண்ண வேண்டும் எல்லாவற்றுள்ளும் அஷ்டவர்க்க சகாமர்க்கம் உத்தமோத்தமமானதாம்.

இலக்கிணத்திற் செல்லவேண்டியபாகைகலாதிகளில் 108 பாகைகள் வரை செல்வந்த அதிர்ச்சியென்றும் மற்ற தைத் திரிசி யென்றும் கூறுக

உதாரணம்

| | |
|---|---|
| இலக்கின ஸ்புடத்தில் | 1—55 |
| ரிஷபத்திற் செல்ல வேண்டிய பாதை | 24—55 |
| மிதுனம் 30, கடகம் 30, சிம்மம் 30 | |
| கன்னி 30, துலாம் 30 | 150—0 |
| ஆரம்பம் முதல் விருச்சிகத்தில் | 5—5 |
| ஆகமொத்தம் | 180 |

| | |
|---|---|
| இப்பாகத்தில் உள்ள கிரகங்கள் திரிசிய கிரகங்களாம் விருச்சிகத்தின் | 24—25 |
| தனுசு 30, மகரம் 30, கும்பம் 30 | |
| மீனம் 30, மேஷம் 30, | 150—0 |
| ரிஷபத்திற் செல்லவேண்டியது | 5—0 |
| | ——— |

இதிலுள்ள கிரகங்கள் திரிகிய கிரகங்களாம்.

குறிப்பு:— 30 பிந்துகளுக்கு அதிகமாயிருக்கும் இராசியே சுபத்தைக் கொடுக்கும் 25-க்குக் குறையாத இராசி மத்திய பலத்தையும் அத்தொகைக்குக் குறைந்த இராகி கஷ்ட பலத்தையும் தரும் என்பதாம் மத்தியதைக் காட்டி கஷ்ட பலத்தையும் தரும் என்பதாம் மத்தியதைக் காட்டிலும் 10-ம் இடத்திலும், இலாப ஸ்தானத்திலும் பிந்துக்கள் நிறைந்தும், இலாப ஸ்தானத்திலும், விரையஸ்தானத்திலும் அவை இலக்கினத்தில் அதிகரித்தும் இருந்தாலும் (ஜாதகன்) பெரும் யோகததையும் உயர்ந்தவனாயும் இருப்பான்.

தேவகேரளியப்படி அஷ்ட வர்க்கப்பலன்

மேஷாதியாய் எந்த இராசிகளில் எட்டுப் பிந்துக்கள் இருக்கின்றனவோ அந்த இராசிகளின் பாவகதிகள் தமக்குரிய புஷ்டியையும் தேஜஸையும் பலத்தையும் உண்டாக்கும்

5,6,7 ஆகிய இப்பிந்துக்களுள்ள இராசிகளின் பாவங்கள் சுபத்தைக் கொடுக்கும் 3 2 1 இந்தப்பிந்துக்கள் உள்ள இராசி பாவங்கள் அசுபங்களைக்கொடுக்கும் 4-பிந்துக்கள் உள்ள இராகு பாவங்கள் மிசிரபலனைக் கொடுக்கும் பிந்து இல்லா இராசி பாவங்கள் ரோகம் அபவாதம் இவற்றைக் கொடுக்கும்.

கிரகங்களுக்கும் தனித்தனி அவரவர்களின் அஷ்டக வர்க்கத்தின் மேஷம் முதலான இராசிகளைக்கொண்டு பிந்துபலன் கூறவேண்டும் பிந்து சூன்யமான பாவங்களிலும் பகை நீச இராசிகளிலும் இருக்கிறதெசையில் சந்தேகமில்லாது) வியாதி தனநாசத்தையும் உண்டாக்கும் 123 பிந்துக்களுள்ள இராசிகளிலிருக்கும் கிரகங்களதுதெசையில் தனம் தான்யம், பசு முதலியவை தாசமாகும்.

4. பிந்துக்களுக்கும் இராசியிலுள்ள கிரகதெசை மத்தியாயும் 5 பிந்துக்களுக்குமேல் குணம் அதிகமாம் 8 பிந்துக்கள் சமஸ்த சித்தியையும் உண்டாக்கும் இவை ஸ்வக்ஷேத்திரத்துவம் உபஜய ஸ்தானம் பலமுடையவனவாம்

### சூரிய அஷ்டவர்க்க சமுதாய பிந்து பலன்

சூரியன் இக்கினத்தில் பகை நீசமாயிருந்து 3 3 பிந்துக்களுடன் கூடியிருப்பின் ஜாதகன் ரோகி ஆவான் அவர் இலக்கினத்தில் ஆட்சி உச்சமாய் 5 முதலான பித்துக்களுடன் இருந்தால் இராஜனாகவும் தீர்க்காயுளுள்ளவனாகவும் இருப்பான் கேந்திர (1 4 7 10) திரிகோணத்தில் (1 5 ௪) 6 4 7 8 பிந்துக்களுடன் இருந்தால் ஜாதகனாவது அவன் தகப் னாவது அக்கினிமலை மயானம் இவைகளில் விழ்த்து மரணமடைவான்.

சூரியன் இருக்கும் இடத்திற்கும் கேந்திரத்தில் குரு ஆட்சி உச்சகத்தில் 6 3 4 5 6 7 பித்துக்களோடு மத்திய கண்டத்திலிருந்தால் (ஜாதகன் 100 யோசனை விஸ்திரண பூமிக்கு அதிபதியாவான் பிராமணனாயின் யாகாதிகள் புரியும் தீக்ஷிதனாயேனும் கிராமாதிபத்திய முடையவனாயேனும் வாழ்வான்.

பாவ 8-ல் 3 4 5 7 பித்துக்களோடியிருப்பின் அற்பமென்க ஏகாதிபத்திய சோதனை செய்த பின் ஞாயிறு 3-6 11-ல் 8 பிந்துக்களோடியிருந்தால் அந்தந்த பாவ விருத்தியைச் சொல்ல வேண்டும் கூறிய சோதனையான பிந்து அவர் 1, 2, பிந்துக்களோடு எங்கேயிருந்தால் அந்தப் பாவங்கட்கு நாச முண்டென்று அறியவேண்டும்.

### சந்திர அஷ்டவர்க்கச் சமுதாய பிந்து பலன்

சூரிய ரந்திரர்களின் அஷ்டவர்க்கத்தில் தந்து சூன்யமாக இராசி மர்தத்தில் எந்தச் சுபர்களும் செய்யலாகாது அமரபட்சி சந்திரன் 1, 2 3 பிந்துக்களோடு இலக்கினத்திலிருந்தால் (ஜாதகனுக்கு) காசரோக முண்டாம் சந்திரன் 2 அல்லது 3 கிரகங்களோடு கூடி 1 2 3 பித்துக்களில் எந்த பிந்துக்களையாவது பெற்று எவ்விதத்திலிருப்பினும் ஜாதகனுக்கு 37-வது வயதில் மரணமுண்டாகும் அமரபட்சத்துச் சந்திரன் கேந்திரன் திரிகோணம் 11-ம் இடம், இவைகளுள்

எதிலேனும் பகை நீசம் பெற்று 2 அல்லது 3 பிந்துக்க ளோடு எப்பாவத்திலிருனும் அப்பாவம் நாசம் அடையும் என்க. பூர்வ பட்சத்துச் சந்திரன் மேற்கூறிய இடங்களில் சொல்லியபடி இருக்கின் அப்பாவம் விருத்துயடையும் என சந்திரன் கேந்திரத்தில் 8 பிந்துக்களோடு இருப்பின் ஜாதக னுக்கு வித்தை கீர்த்தி. தனலாபம் பிரபலமான இராஜத் துவம் உண்டு என்று சொல்லப்படும்.

## அங்காரக அஷ்டகவர்க்கச் சமுதாய பிந்து பலன்

அங்காரகன் 9 4 1 10 இந்த ஸ்தானங்களில் எட்டு பிந்துக்களுடன் கூடி உச்சு ஸ்வஷேத்திரம் பெற்றிருந்தால் கோடீஸ்வரனாவான் தனுசு மேஷம் சிம்மம் மகரம் கடகம் இவைகள் இலக்கினங்களாகி இவற்றில் அங்காரகன் நான்குபிந்துக்களோடிருந்தால் அரசனாகவேனும் அரசனுக் குச் சமானமாகவேனும் வாழ இடமுண்டு அங்காரன் எட்டுப் பிந்துக்களோடு எந்த இடத்திலிருந்தாலும் சாமா னிய அரசனாவான் இவ்விதமே எட்டும் பித்துக்களோடு இலக்கினம் 10. 2 இவ்விடங்களுள் குஜன் இருந்துவிடின் அரசனாவதற்குத் தடையே இல்லை எட்டுப்பித்துக்களோடு உச்சம் ஆட்சி பெற்றிருந்தால் பொருத்த ஐசுவரியனாவான் குலத்து உதித்தோனாவாவது தேசாதிபதியாகவாவது சக் கரவர்த்தியாகவாது இருப்பதற்குத் தடையே இல்லை அங்காரகன் எட்டுப் பிந்துக்களோடு இலக்கினம் 4,10 இந்த ஸ்வானங்களிலிருந்தால் தனபதியாயும் பரந்த பூமி களுக்கு இறைவனாகவு இருப்பான் இந்த ஜாதகன் அரச வம்சத்தான்யின் பெரிய சக்கரவர்த்தியாவதில் சந்தேக மில்லை.

அங்காரகன் அஷ்டவர்கத்தில் அவரிருக்கும் இராசிக்கு மூன்றாம் இராசியின் உள்ள சமுதாய பிந்துக்களாக் சோதித்த பின் பிண்டத்தைப் பெருக்கி 27-ல் வகுத்த மீதி நட்சத்திரத்தில் சனி வரும்போதேனும் அல்லது திரிகோண நட்சத்திரத்தில் சனிவரும்போதனும் சகோதர நாசமுண் டாகும் ள்ல்லது ரோக பிடிதமுண்டாம் சூரியனுக்குச் செல்லப் பெற்றுள்ள கணக்குப்படி அறிந்து இன்னமாதத் தில் சகோதர மரணம் உண்டென்று கூறுக.

## புதன் அஷ்டவர்க்கச் சமுதாய பிந்து பலன்

புதன் எட்டுப் பிந்துக்களோடு கேந்திர திரிகோணங்களிலிருப்பின் அந்த சாதிக்குரிய வித்தைகளில் அதிபாண்டித்யமுடையவனாயும் போகியாயுமிருப்பான் புதன் 1 2 3 பிந்துக்களோடு ஆக்ஷி உச்சம் இவைகளில் எந்தப்பாவத்திலிருப்பினும் அப்பாவத்திற்கு விருத்தி உண்டு என்க, இவ் அஷ்டவர்க்கத்தின் பிந்து அதிகமாயுள்ள இராசி மகரத்தில் வித்தியாரம்பம் செய்தால் சர்வ வித்தையிலும் வல்லவனாவான புதன் அஷ்டவர்க்கத்தில் பிந்து சூன்யமான இராசியில் சனிவரும்போது பந்துக்களில் நாசமுண்டு செல்வம் அழிந்து போகும் புதன் 4 முதலிய பிந்துக்களோடு நீசம் பகை மூடம் இவற்றில் குரூர திருஷ்டியிலாவது எப்பாவத்திலிருப்பினும் அப்பாவத்திற்குச் சம பலன் உண்டு.

புதன் அஷ்டவர்க்கத்தின் எந்த ராசியில் பிந்துக்கள் அதிகமாய்ச் சுபவீக்ஷண்யமுளதோ அந்த இராசி அந்த மாதத்தில் ஜாதகனுக்கு வித்தியாரம்பம் செய்தால் மூடனாயினும் பல நூல் வல்ல பண்டிதனாவான் இந்த அஷ்டவர்க்கத்தின் சூன்ய ராசியில் பனி வருங்காலை புத்திரமித்திர களத்திரர் நாசமுறுவர் என்க.

புதனுக்கு 10-வது இராசியிலிருக்கும் சமுதாய பிந்துக்களால் சோதித்திய பின்டத்தைப் பெருக்கி 27-க்குக் கொடுத்து நின்ற மீதி நட்சத்திரத்தில் சனிவரும்போது அவசியம் வியாபாரத்திற்குக் கெடுதியுண்டாகும் என்க.

## குரு அஷ்டவர்க்க சமுதாய பிந்து பலன்

குரு அஷ்டவர்க்கத்தில் அவர் 1,2,3 பிந்துக்களோடு சுபவர்க்கம் ஈனராயின் விபரீதப்பலன் உண்டு என்று அறிக அவர் ஐந்து முதலான பிந்துக்களோ 6812-ல் இருப்பின் ஜாதகன் நீண்ட வாழ்நாளோடும் திரண்ட ஐஸ்வரித்தோடும் வாழ்வான் சத்துருக்களை ஜெயிப்பான், இந்த அஷ்டவர்க்கத்தில் அதிகம் பிந்துள்ள இராசி மாதத்திலேனும் இராசி இலக்கிணத்திலேனும் நிஷேக முகூர்த்தம செய்தால் சுபரத்திலாபமுண்டாகும், அதிகம் பிந்துக்கள்

உள்ள இராசி திக்கில் வீடு கட்டினால் தனம், தான்யம். பசு முதலிய சம்பத்து உண்டாகும். நீசம், பகை, மூடம் இவைகளை நீக்கிக் கேந்திர திரிகோணங்களில் ஆட்சி, உச்சம் பெற்று எட்டுப் பிந்துக்களோடு இருப்பின் சுய கீர்த்தியினாலே இராஜனாவான் அல்லது இராஜனுக்குச் சமானமாவான் ஜாதகன் பிராமணனாயின் தீக்ஷிதனாவான் வைசியனாயின் தனாட்டியனாவான் சூத்திரனாயின் சேனாதிபதியாவும் பிரபுவின் சேவகனாயும் இருப்பான்.

அவர் ஏழு பிந்துக்களோடு முன் சொன்ன ஸ்தானங்களிலிருந்தால் அதிக ஸ்திகளையும் புத்திரர்களையும் உடையவனாவான் தனப்பிராப்தியுமுண்டு ஆறு பிந்துக்களுடன் கூடியிருந்தால் புத்திர பிராப்தியும் வாகன பிராப்தியும் முண்டு முன் கூடியபடி ஐந்து பிந்துக்களோடு கூடியிருந்தால் ஜய சீலனாவான்.

சுக்கிரன் அஷ்டவர்க்க சமுதாய
பிந்து பலன்

சுக்கிரன் கேந்திர திரிகோணங்யுளில் எட்டுப் பிந்துக்களுடன் கூடியிருப்பின் ஜனனம் முதல் ஆயுள்வரை பலவாகனாதிகளுடன் உடையவனாவான். ஏழு பிந்துக்களோடு மேற்கூறிய ஸ்தானங்களிலிருந்தால் தனம் இரத்தினம் பிரபு ஆவான். நீசம், மூடம் 12ல் இருந்தால் மேற்கூறிய பலனுக்கு ஹீனமுண்டாகும் கூறிய ஸ்தானங்களில் 65 பிந்துக்களோடு இருந்தால் பிந்துக்களின் கணக்கின்படி பத்தினிகளை உடையவனாவான், அங்காரகன் பார்வையானால் சிரேஷ்டமான ஸ்திரீகளாய் இருப்பார்கள்.

இலக்கினாதிபதியிருக்கும் நலாசம்சத்தில் சூரியன் குரு திருஷ்டி யுடையவனாய் வரும் மாதத்தில் விவாகமுண்டென்று அறிய சுக்கிரன் அஷ்டவர்க்கத்தின் பிந்து சூனிய இராசித் திக்கிலிருந்து களத்திரம்வரின் ஜாதகன் ரோகம் சோகம் பயம் இவைகளை யுடையவன் பிந்து அதிகமாயிருக்கும் இராசி திக்கிலிருந்து களத்திரம்வரின் சுபம் சௌக்கியம் கீர்த்தி ஆயுள் விர்த்தி புத்திர பிராப்தி இவைகளுண்டாகும் என்று அறிக.

## சனி அஷ்டவர்க்க சமுதாய பிந்துபலன்

சனி அஷடவர்க்கத்தில் சனி பிந்துக்கள் இல்லாரான இலக்கினத்தில் இருந்தால் ஜாதகன் மரணத்தையேனும் தய்நாரத்தையேனும்அடையஏதுவுண்டாகும். சனிகேந்திரத் திலேனும் உச்சத்திலேனும் 1 3 4 பிந்துக்களோடு இருந் தால் அற்பாயுள் உண்டு அவர் 5 பிந்துக்களோடு இலக்கி னத்தில் பலாட்டியராயின் வாழ்நாள் வரை துக்கியாயும் தன்ம இழட தோனாயும் வாழ்வான் அவர் 6-முதலாய பித்துக்களோடு நீசப் பகை ஸ்தானங்களிலிருந்து சுபக்கிர கங்கள் மகேந்திரத்திலிருந்த பின் தீர்க்காயுள் உடையவன் அவச் நீச மூட பகையாதிகளில் 4 5 பிந்துக்களோடு இருந் தால் குதிரை யானை ஒட்டகம் தனம் இவை யுண்டாகும் அவர் எட்டுப் பிந்துக்களுடன் இலக்கினந்திற்கு ஐந்தாம் இடத்தில் இருப்பின் இலௌகிக விவகா தந்திர க்ராமாதி பன் ஆவான் அவர் ஏழு பிந்துக்களுடன் இருந்தால் தனாட்டியன் என்க.

### சர்வாங்க அஷ்டவர்க்கப் பலன்

மேஷாதியாய் இராசிகளில் 30 பிந்துகளுக்கு மேலிருந் கின் அந்த இராசியின் பாவதிகள் தங்களுக்குரிய புஷ்டி யையும் தேஜஸையும் பலத்தையும் உண்டாக்கும் இதற்குக் குறைத்த பிந்துக்களுக்குள்ள இராசிகளின் ப்ரவங்கள் மிசிர பலனைத் தருவனவாம் 26 பிந்துக்களுக்குக் குறைந்த இராசி கஷ்ட பலனைத் தரும் என்பதாம்.

இலக்கித்தில் எத்தனை பிந்துக்கள் இருக்கின்றன வோ அத்தனை வருடங்களுக்குப் பிறகு ராஜ்யம் புத்திரன் நூதன வித்தை இவைகளை அடைவதும் தவிர சம்பத்து சௌக்கியம இவைகளை உண்டாக்கும்.

இலக்கனத்திற்கு 9, 10, 11 ஆகிய இந்த ஸ்தானங்களி லும் 30 பிந்துக்களுக்கு மேலிருந்தால் ஜாதகன் முதல் ஜீவிய பல்யந்த அரசனாகியிருப்பான் அல்லது அரசனுக்கு சமானமானவனாக இருப்பான் இலக்கினத்திற்கு 9,11,

இடங்களில் பிந்துக்கள் க்ஷீணமாயும் மத்திபமாயும் அற்பமாயும் இருந்தால் முறையே தரித்திரத்திரனாயும் கோபியாயும் வியாதிஸ்தானாயும் இருப்பான் என்று அறியவும்.

இலக்கினம் 9. 11 10 இந்த இடங்களில் 19 22 பிந்துக்களிலிருந்து திரிகோணத்தில் பாபக்கிரகங்களிலிருந்தால் தரிததிரத்தில் ஜாதகன் யாசிப்பான் இலக்கினத்தில் 30-க்குக் குறைந்தும் 3-ம் இடத்தில் 30-க்கு அதிகமாயும் இருந்தால் ஜாதகன் இராஜ சபையில் இராஜ சின்னத்தை அணிந்த அதிகாரி ஆவான்.

திரிகோண ஏகாதிபத்திய சோதனைகளைச் செய்து 508 அல்லது 16-ல் பெருக்கி 2-ல்வகுத்தறிதலே சர்வாங்க அஷ்ட வர்க்க சோதனையாம் சோதிக்கப்பெற்ற இராசி குணாகாரத்திற் குறைக்கப்பெற்ற துருவ சங்கியைகளாலும் கிரகங்களுக்குச் சொல்லப்பெற்ற துருவ சங்கியைகளாலும் பெருக்கி ஒன்றாகச் சேர்த்து அதை 7-ல் பெருக்கி27-ஆல் வகுத்த வந்தாவே வருஷமாம் மாகம் நாள் முதலியனவாம் ஈவு 27-க்கு அதிகமானால் 27 ஐ கழித்து மீதியை எடுத்துக் கொள்க அந்தச் சமுகாயத்தை 324-ல் பெருக்கி 365-ஆல் வகுக்க வரும் தின சமுகங்கள் சுந்த ஆயுளாம் சொற்பமத்திய பூரண ஆயுள்சனியன் பார்வை சேர்க்கை இவற்றாலும் கால ஸ்திதியாலும் சத்துரு கடாக்ஷத்தாலும் செல்ல வேண்டும்.

கிரகங்கள் ஆட்சி உத்தமம் நட்பு கேந்திரம் திரிகோணம் சுபராசியான அம்சம் இவைகளையுடைய சர்வாங்க அஷ்கிவர்க்கம் வர்க்கத்திற் கொற்ப பிந்துக்களோடு இருந்தால் கெட்ட பலனைக்கொடுப்பார்கள் இதற்கு மாற்றமுண்டானால் நற்பலன்களுண்டாகும் இலக்கினம் கர்மம் பாக்கியம் இலாபம் இவைகளில்30 பிந்துக்களுக்கு மேலிருந்தால் ஜாதகன் வாழ்நாள் முழுவதும் சுகத்தையும் சௌபாக்கியத்தையும் அனுபவிப்பான்.

# கோசாரபலன் அறியும் விதம்

### ஜன்ம நட்சத்திரத்தைக் கண்டு கணக்கிடுதல்

எப்போது ஜனனமோ அப்போது என்ன நக்ஷத்திரம் என்பதை ஒரு பஞ்சாங்கத்தைக் கொண்டு தெரிந்துக்கொள்

ளலாம் ஆனால் உதாரணமாக இதை தெரிந்து கொள்வோம் ஜய வருஷம் தைமாதம் 20ந் தேதி புதன்கிழமை சூரியோதயாதி நாழிகை 10க்கு ஒரு குழந்தை பிறக்கிறது பஞ்சாங்கத்தில் அன்றைய தேதியில் நக்ஷத்திரம் என்ற தலையங்கத்தின் கீழே தியாஜ்யம் என்று இருப்பதைப் பார்க்கிறோம் அதாவது அன்று சூரியோதயாதி நாழிகை 10 விநாடி 13 வரையில் தியாஜ்யம் நக்ஷத்திரம் நடக்கிறது என்று தெரிய வேண்டும் ஜனனம் சூரிய உதயாதி நாழிகை 10க்கு தியாஜ்யம் நக்ஷத்திரம் ஜாதகன் பிறகும் நாழிகை 10-க்கு அதிகமாக இருப்பதால் ஜன்ம நக்ஷத்திரம் தியாஜ்யம் என்று தெரிந்து கொள்ளவும்.

## கோசார பலன் அறியும் விதம் ஜன்ம நட்சத்திரத்தை எவ்வாறு காணுதல்

எப்போது ஒரு குழந்தை ஜெனனமோ அப்போதே என்ன நட்சத்திரம் என்பதை பஞ்சாங்கத்தின் மூலம் தெரிந்து கொள்ள வேண்டும் ஆனால் உதாரணமாக ஜய வருஷம் தைமீ 10 தேதி ஞாயிற்றுக்கிழமை சூரிய உதயம் நாழிகை 30க்கு விநாடி 6-க்கு குழந்தை பிறக்கிறது நிச்சயித்துக் கொள்வோம் ஆனந்தபோதினி பஞ்சாங்கத்தில் நட்சத்திரம் பூரம்21-23 விநாடி என்று இருக்கும் சூரிய உதயம் 13 3 விநாடி வரையில் ஷ நட்சத்திரம் இருக்கிறது பிறப்பு சூரிய உதயம் நாழிகை 10க்கு பூரநட்சத்திரம் குழந்தை பிறந்த பிறகும் 10 நாழிகைக்கு மேல் அதிகமாக பூரநட்சத்திரம் இருக்கிறது என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

## நட்சத்திரம் தெரிந்து கொள்ளும் விதம்

ஒரு நக்ஷத்திற்கு நான்கு பாதங்கள் ஆனபடியால் 64 நாழிகை விநாடி 6, அதை (அரை-வகுத்தால் ஒருபாதத்திற்கு நான்கு பாதங்கள் ஆகின்றது ஒரு பாதத்திற்டி 16 நாழிகை4விநாடிஆகிறது .குழந்தைஜெனனம்சூரியஉதயம் நாழிகை 25, அதை பூரம் வரை 55-5 வரை இருக்கிறது ஆனதினால் 55-9ல் இருந்து 25-கழித்தால் 30-19

30 19 தான் பூரம் என்றோ. வேறு எந்த நட்சத்திரவரினும் அதிலிருந்து செல்லவேண்டிய நாழிகை 30-9ஐ பூரம் என்றோ, வேறு எதுவோவரினும் தெரிந்து கொள்ளவேண் டும் இதைக் கெற்பச் செல் என்று சொல்வது வழக்கம் பாதம் ஒன்றுக்கு 16-½ ஆகிறது ஆனதினால 33- 7குக் 2-ம் பாதம் முடியும்வரை 32-3 போக மீதி 1-14க்கு 1-ம் பாதம் இதில் குழந்தை ஜெனனம் என்று அறிந்து கொள்ள வேண்டும் சந்திரன் இருக்கும் ராசி எதுவோ அதுவே. ஜெம ஜெல் ம ராசி என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

## இதன் பலன்

சூரியன்; 3 1011 இந்த இடத்தில் வந்தால் நற்பலன் மற்ற இடங்களில் வந்தால் துற்பலன்.

செவ்வாய்:-361011 இந்த இடங்களில் வந்தால் கால் பலன் நற்பலனும் மற்ற இடத்தில் வந்தால் துற்பலனும் கொடுப்பான்.

சந்திரன்:-13,671011 இடங்களில் வந்தால் நற்பலன் மற்ற இடங்களில் வந்தால் துற்பலன்.

புதன்:-246810 1 இந்த இடங்களில் புதன் வந்தால் கால்பலனும் மற்ற இடங்களில் துற்பலனும் கொடுப்பான்.

வியாழன்:-25791 இந்த இடங்களில் குரு வந்தால் நற்பலனும், மற்ற இடங்களில் நற்பலனும் உண்டாகும்.

சுக்கிரன்:-123456789101112 இந்த இடங்களில் நற்பல னும் மற்ற இடங்களில் துற்பலனும் நடக்கும்.

சனி;361 இடங்களில் வந்தால் நற்பலனும் மற்ற இடங்களில் வந்தால் துற்பலனும் நடக்கும்.

## அந்தச் சக்கரத்தில் காரகர்ஸ்தானங்கள் அறிவது

சூரியன் பிதா 9-ம் இடம் சந்திரன் மாதா 4-ம் இடம் செவ்வாய் சகோதரம் 3-ம் இடம், மாமன் வித்தை 2-ம் இடம் வியாழன் சந்திரன் 5-ம் இடம், சுக்கிரன் களத்திரம்

7-ம் இடம் சனி சாதகன் 8-ம், இடம் இப்படி அறிவது கார கர் தானாதிபதி ஸ்தானத்தை பார்த்தவன் இருந்தவன் இவர்களுடையதசை, புத்தி சித்திரங்களில் சூடசித்துவிபரீத முதலான கோட்சார வகைகளும் அறிந்துபலன்சொல்லவும்

ஒவ்வொரு கிரஹத்தின் ஜனன காலத்தில் துவாதச ராசிகளில் இருக்கும் பிந்து சங்கியைகளைக் கொண்டும் கோசார பலன்களை ஆராய்ந்திடல் வேண்டும் குருவான வன் சந்திர லக்கினத்திலிருந்து 5-ம் பாவத்தில் சஞ்சரித் தால் சுபனாகிறான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் ஜாதகத்தில் குருவின் பின்னாஷ்டக வர்க்கத்தில் அந்த 5-ம் பாவத்திற்குரிய இராசியில் 4 பிந்துக்களுக்கு மேல் இருந்தான் தான் கூறியசுப பலன்கள் நடக்கும் 4-க்கு குறைந்தால் சுப பலன் நடக்காது 4-பிந்து மட்டும் இருந் தால் தான் கூறிய சுப பலன்கள் நடக்கும் 4-க்குக் குறைந் தால் சுப பலன் நடக்காது 4-பிந்து மட்டு இருந்தால் சுபம் அசுபம் இரண்டும் சேர்ந்தே நடக்கும் இப்படியே ஒவ்வொரு கிரகத்தின் அஷ்டக வர்க்கத்தின் பலத்தையும் கொண்டு கோசார பலன்களைக் காண வேண்டும்.

ஏழு கிரஹங்களும் கோசார வசாத் எந்தெந்த இராசிக ளில் இருக்கின்றனவோ அந்தந்த இராசிகளில் அதனதன் பின்னாஷ்டக வர்க்கத்தில் எவ்வளவு பிந்துக்கள் இருக் கின்றனவோ அந்த ராசிகளினுடைய பிந்துக்களைக் கூட் டினால் அது 24-க்கு லோனால் சுபம் என்றும், அதற்குக் குறைந்தால் அசுபம் என்றும் காணவேண்டும் அதாவது சூரியன் மேஷத்திலும் சந்திரன் ரிஷப திலும் செவ்வாய் மிதுனத்திலும், புதன் மேஷ திலும் குரு கன்னியிலும் சுக்கி ரன் மேஷத்திலும் சனி கடகத்திலும் ஒரு தினம் கிரஹங்கள் சஞ்சரிப்பதாக நினைத்துக்கொள்வோம் ஜனன காரத்தில் சூரியனுடைய அஷ்டவர்க்கத்தில் மேஷத்தில் 5-பித்துக் களும் சந்திராஷ்டவர்க்கத்தில் விருஷபத்தில் 4-பிந்துக் களும் செவ்வாய் அஷ்டவர்கத்தில் மிதுனத்தில் 3-பிந்துக் களும் புதன் அஷ்டவர்கத்தில் மேஷத்தில் 6-பிந்துக்களும் குரு அஷ்டர்வர்க்கத்தில்சன்னியின் 3பிந்துக்களும் சுக்கிரன்

அஷ்ட வர்க்கத்தில் மேஷத்தில் 4 பிந்துக்களும் சனியஷ்ட வர்க்கத்தில் கடகத்தில் 4-பிந்துக்களும் இருப்பதாக வைத்துக்கொண்டால் மொத்தம் 29-பிந்துக்கள் ஆகின்றன. 24-க்கு மேல் இருப்பதால் ன்று சுக பலன்கள் நடக்குமெனக் கண்டு கொள்ள வேண்டும்.

அஷ்ட வர்க்கத்தைக் கொண்டு மற்றொரு விதமாகவும் கோசார பலன்களைக் காணவேண்டும் அது பின்வருமாறு ஒரு ராசியை எட்டு சமபாகங்களாக்க வேண்டும் ஒவ்வொரு ராசியிலும் 30 பாகைகள் அடங்கி இருக்கின்றன. இவைகளை எட்டு சகபாங்களாகப் பிரித்தால் ஒவ்வொரு பாகத்திற்கும் 3-பாகை 45 கலை ஏற்படுகிறது.

| | | | |
|---|---|---|---|
| முதல் பாகத்திற்கு அதிபன் சனி | | | |
| 2-ம் | ,, | ,, | குரு |
| 3-ம் | ,, | ,, | குஜன் |
| 4-ம் | ,, | ,, | சூரியன் |
| 5-ம் | ,, | ,, | சுக்கிரன் |
| 6-ம் | ,, | ,, | புதன் |
| 7-ம் | ,, | ,, | சந்திரன் |
| 8-ம் | ,, | ,, | லக்னம் |

கோசாரத்தில் குருஸ்புடன் 7 இராசி 18 பாகை 52 கலை என்று வைத்துக் கொள்வோம் இதில் குரு யாருடைய கக்ஷியிலிருக்கிறாரென்று பார்த்தால் 5 கக்ஷிக்கு 18 பாகை 45 கலை போக 6-வது கக்ஷியில் குரு இருக்கிறார் 6-வது புதன் கஷியாவதால் குரு புதன் கஷியிலிருக்கிறார் என்று அறியவேண்டும்.

குரு ல்வ்வொரு இராசியிலும் சஞ்சரிக்குங் காலம் யாருடைய கஷியிலிருக்கிறாரோ அந்த கிரகத்தினுடைய பிந்து எந்த இராசியில் குருவின் பின்னாஷ்டக வர்க்கத்தில் இருந்தால் அக்காலம் சுப பலன் ல்ன்றும் இல்லாவிட்டால் அசுப பலன் என்றும் காணவேண்டும்.

இம்மாதிரியாகவே ஒவ்வொரு கிரகத்தில் விஷயத்திலும் அதனதன் பின்னாஷ்டக வர்க்கத்தைக்கொண்டு கோசா பலன்களின் சுபா சுபத்தன்மையை அறியவேண்டும்.

ஓர் உதாரணம் எடுத்துக்கொள்வோம் சூரியன் கடக ராசியில் 5-வது பாதமாகிய சுக்கிரன் கக்ஷியின் சஞ்சரிக்கிறதாக வைத்துக்கொள்வோம் சூரியனுடைய அஷ்டக வர்க்கத்தில் கடகத்தில் சூரியன் செவ்வாய் சந்திரன் லக்கினம் ஆகிய நால்வரால் கொடுத்த நான்கு பிந்துக்கள் தான் இருக்கின்றன என்றும் குரு புதன் சனி சுக்கிரன் இந்நால்வரின் பிந்துக்களும் இல்லை என்றும் குரு புதன் சனி இவர்களின் கட்சிகளில் கடராசியில் சஞ்சரிக்குங்காலம் அசுப பலன்கள் நடைபெறும் என்று கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு கிரகமும் ஒவ்வொரு ராசியிலும் எத்தனையாவது பாகைகலை விடுதலையில் ஒரு குறிப்பிட்ட காலத்தில் சஞ்சரிக்கிறது என்பதை அறிந்து, அது எத்தனையாவது பாகமென்று கண்டு, அப்பாகத்திற்குறிய கிரஹம் எது என்பவைக் கண்டு, அக்கிரஹத்தில் பிந்து அந்த ராசியில் இருக்கிறதா, இல்லையா என்பதை நன்கு கவனித்து, இருந்தால் சுப பலன் என்றும் இல்லாவிட்டால் அசுப் பலன் என்றும் காண வேண்டும்.

### போதகன், வேதகன், பாசகன், காரகன் என்பதை அறியும் விபரம்

1. இராகு கேதுகள் தவிர மற்ற ஒவ்வொரு கிரகத்தின் திசையில் குரு காரகன், அங்காரகன், போதகன்

2. சந்திரனுடைய திசையில் சுக்கிரன், பாசகன், சூரியன், தேவன், சனி காரகன் அங்காரகன் போதகன்,

3. செவ்வாயினுடைய திசையில் சூரியன், பாசகன் சந்திரன், போதகன், புதன் வேதகன் சனி காரகன்

4. புதனுடைய திசையில் சந்திரன் பாசகன் குரு போதகன் அங்காரகன் வேதகன் சுக்கிரன் காரகன்

5. குருவினுடைய திசையில் சனி பாசகன் சூரியன் வேதகன் அங்காரகன் போதகன் சந்திரன் காரகன்.

6. சுக்கிரனுடைய திசையில் புதன் பாசகன் குரு போதகன் சனி வேதகன் சூரியன் காரகன்.

7. சனியினுடைய திசையில் சுக்கிரன் பாசகன் சந்திரன் போதகன் அங்காரகன் வேதகன் குரு காரகன்

இதுபோல் நான்கு பேரும் ஒவ்வொரு கிரகங்களின் திசையில் ஒவ்வொருக்குள்ள பலாபலன்களை உண்டு பண்ணுவர் இதையறிந்து நன்றாக யோசித்துப் பலன்களை சொன்னால் பலன் பொருத்தமாகவே இருக்கும் தவறாது.

## சூரியனின் கோசார பலன்கள்

சந்திரன் லக்கினத்தில் வரும் பலன் சமயம் கெட்டவைகளே சரீர அலைச்சல் பீடை விவகாரம் உண்டாகின்றன இவர்களால் நண்பர் பந்து உண்டாகும் விசனம் கீழான நிலை முதலான கெட்ட பலன்கள் பொதுவாக உண்டாகலாம்.

இரண்டாம் இராசியில்:-வீண் முயற்சிகள் பணக்கஷ்டம்களை ரோகம் பிறரால் ஏமாற்றப்படுதல் முதலான கெட்ட பலன்கள் உண்டாகும்.

மூன்றாம் இராசியில்;-தன வரவு நேராக நிவர்த்தி ஜாதக மாறுதல் செய்தொழில் லாபம் பகையாளியின் அழிவு முதலான நற்பலன்கள் நடைபெறும்.

நான்காம் இராசியில்;-ஜுவரம் வீயாஜ்யம் மனக்கவலை எவ்வித முயற்சிகளும் வீணாகப் போகுதல் முதலான கெட்ட பலன்கள் உண்டாகும்.

ஐந்தாம் இராசியில்;-ரோகம் சோகம் சத்துருவினால் பயம் ராஜபீடை முதலான அசுப பலன்கள் நடைபெறும்.

ஆனால் பாவத்தில்;-ரோக நிவர்த்தி சத்துரு நாசம் காரியானுகூலம் நற்கீர்த்தி முதலான சுப பலன்கள் நடைபெறும்.

ஏழாம் ப்ரவத்தில்:-அலைச்சல் அஜீரணம் விஷ ஜந்துக்களால் பய. காயப்படுதல் களத்திரத்திறகுப் பீடை முதலான அசுபபலன்கள் நடைபெறும்.

எட்டாவது இராசியில்:—குடும்பத்தில் ஸ்திரீகளுக்கு மனஸ்தாபம் ரோகம் முதலான அசுபபலன் நடைபெறும்.

ஒன்பதாம்:-இராசியில் தாழ்மையான நிலை ஜாகையேர உத்தியோகமோ மாறுதல் யாரிடமும் துவேஷம் முதலான அசுப பலன்கள் நடைபெறும்.

பத்தாம் இராசியில் காரியசித்தி, வழக்கில் வெற்றி முதலான சுப பலன்கள் நடைபெறும்.

பதினொன்றாம் இராசியில்:-லாபம் நற்கீர்த்தி ரோக நிவர்த்தி முதலான சுப பலன்கள் நடைபெறும்.

பன்னிரெண்டாம் இராசியில்:-செலவு தொழிலுக்கு நாசம் முதலான அசுப பலன்கள் நடைபெறும்.

சந்திரனின் கோசார பலன்கள்

சந்திரலக்கினம்:—பாக்கிய விருத்தி ஸந்தோஷம் முதலான சுப பலன்கள நடைபெறும்.

இரண்டம் இரசியில்:—அதிகச்செலவு கலகம் முதலான அசுப பலன்கள் நடைபெறும்.

மூன்றாம் இராசியில்:—காரியானுகூலம் நற்கீர்த்தி முதலிய சுப பலன்கள் நடைபெறும்

நான்காம் இராசியில்:-பந்து பீடை தனநாசம் நம்பிக்கை மோசம் முதலான அசுப பலன்கள் நடைபெறும்.

ஐந்தாம் இராசியில்:-தனக்கஷ்டம், அஜீரணரோகம் அலைச்சல் மனக்கவலை காரிய விக்னம் முதலான அசுப பலன்கள் நடைபெறும்.

ஆறாம் இராசியில்:-ரோக நிவர்த்தி தனலாபம் ஸ்நேகிதர் வரவு முதலான சுப பலன்கள் நடைபெறும்.

ஏழாம் ராசியில்:-வாகன லாபம் மரியாதை ஸ்திரீ மூலம் ஸந்தோஷம் முதலான சுப பலன்களைக் கொடுக்கிறான்.

எட்டாம் இராசியில்:-மனக்கவலை கலகம் முதலான அசுப பலன்கள் நடைபெறும்.

15

ஒன்பதாம் இராசியில் :—கட்டுப்படுத்தல் பயம் தன நஷ்டம் மானஹானி சத்துருபீடை சரீர அசௌக்கியம் முதலான அசுப பலன்கள் நடைபெறும்

பத்தாம் இராசியில்:—காரிய லாபம் மதிப்பு முதலான சுப பலன்கள் நடைபெறும் ஆனால் அசத்துகளுடன் விரோதம் ஏற்படும்.

பதினொன்றாம் இராசியில்:— தனலாபம் ஸ்திரீயோகம் மத்திரனின் வரவு விவாஹாதி சுப காரியம் முதலான சுபபலன்கள் நடைபெறும்

பன்னிரண்டாம் இராசியில்:—எதிலும் குறைவு தனச்செலவு சோம்பல் ஒருவருக்குக் கீழ்படிதல் முதலான அசுப பலன்கள் நடைபெறும்.

அங்காரகனின் கோசார பலன்கள்

சந்திர லக்னத்தில் :— சரீரத்தில் காயப்படுதல் வியாஜ்யம் தனச்செலவு காரியவிளக்கம் அடிக்கடி அலைச்சல் முதலான அசுப பலன்கள் நடைபெறும்.

இரண்டாம் ராசியில்:—ஏமாற்றம் கஷ்டத்துக்குமேல் கஷ்டம் ஆகிய அசுபபலன்களே நடைபெறும்

மூன்றாம் இராசியில்;—அதிகாரப் பதவ பூமி தனம் இவைகளில் லாபம் வெகுமானம் முதலான சுப பலன்கள் நடைபெறும்

நான்காம் இராசியில்:—வயிற்றுவலி ரத்தம் வெளிப்படுதல் எம்முயற்சியும் பயனற்றுப் போகுதல், அசல்சங்கத்தின் மூலம் கெடுதல் முதலான அசுப பலன்கள் நடைபெறும்

ஐந்தாம் இராசியில்:—புத்திரன் புத்திரி இவர்களுக்குப் பீடை சரீரத்தில் காயம் படல் கைப்பொருள் திருடுபோகுதல் கலகம் ரோகம் முதலிய அசுப பலன்கள் நடை

ஆறாம் இராசியில்:-ரோக நிவர்த்தி நற்பெயர் சத்துரு ஜெயம் தனவரவு சுப பலன்கள் நடைபெறும்

ஏழாம் இராசியில்:-மனைவியுடன் கலகம் வயிறு கண் இவற்றில் ரோகம் தன நஷ்டம் மித்திரர்களின் நஷ்டம் ஆகிய கஷ்டங்கள் ஏற்படும்.

எட்டாம் இராசியில்:-இடறி விழுதல் கட்டுப்படல் சத்துரு பீடை ஆயுதம் மூலம் காயம் ஆகிய இம்மாதிரியான கெட்ட பலன்கள் நடைபெறும்

ஒன்பதாம் இராசியில் :- சரீரத்தில் காயமேற்படுதல் அலைச்சல் பலஹீனம் முதலிய அசுபபலன்கள் நடைபெறும்

பத்தாவது இராசியில்:—ரோகம், சோரி சிரங்கு, பயம் ஆயுதம் மூலம் காயமேற் படுதல் முதலிய அசுப பலன்கள் நடைபெறும்

பதினொன்றாவது இராசியில்:-புத்திர லாபம் உயர்ந்த பதவி பூலாயம், சத்துருக்களை ஜெயித்தல், செல்வாக்கு முதலிய சுப பலன்கள் நடைபெறும்.

பன்னிரண்டாம் இராசியில்:-காலில் அடிபடுதல் அவமானம், கலகம், பலவிதச்செலவுகள் ஆகிய அசுப பலன்கள் நடைபெறும்,

புதனின் கோசார பலன்கள்

சந்திர லக்கினத்தில்:-தன நஷ்டம், மதிப்புக் குறைவு அலைச்சல் முதலிய கெட்ட பலன்கள் நடைபெறும்.

இரண்டாம் இராசியில்:-அபவாதம், கோப வார்த்தை தாழ்மையான நிலை அவமானம் முதலிய அசுப பலன்கள் நடைபெறும்,

மூன்றாம் இராசியில்:-பந்துக்களுடன் விரோதம் கட்டுப்பாடல், சத்துரு மூலம் பயம், முதலிய அசுப பலன்கள் நடைபெறும்,

நான்காம் இராசியில்:-நதனலாபம், விவாகம் மதிப்பு பந்துக்களால் பூஜிக்கப்படல் முதலிய சுப பலன்கள் நடைபெறும்,

ஐந்தாம் இராயிசில்:-ஸ்தான நாசம் பயம் பிரயத்தனங்கள் வீணாகுதல் பிள்ளை பெண்கள் இவர்களுடன் கலகம் ஆகிய அசுப பலன்கள நடைபெறும்.

ஆறாம் இராசியில்:-சௌபாக்கியம் காரியஜெயம் மேலான நிலைமை ஆகிய சுப பலன்கள் நடைபெறும்

ஏழாம் இராசியில்:-கலகம் தாழ்மைப்படுதல் காரிய விக்னம் ஆகிய அசுப பலன்கள் நடைபெறும்.

எட்டாம் இராசியில்: —புத்திர வஸ்திர தனலாபங்கள் வித்தையில் நேர்ச்சி புத்தியில் தெளிவு பிறருக்கு உபசரித்தல் முதலிய சுப பலன்கள் நடைபெறும்

ஒன்பதாம் இராசியில்:-வீண்பழி அலைந்து திரிதல் விரோதம் எதிலும் இடையூறு முதலான அசுப பலன்கள் நடைபெறும்.

பத்தாம் இராயியில்:-செய்தொழிலில் கீர்த்தி மதிப்பு சத்துருவின் நாசம் தனவரவு ஆரோக்கியம் முதலான சுப பலன்களைக் கொடுக்கிறான்

பதினொன்றாம் இராசியில்:-தனலாபம் எல்லோருக்கும் திருப்திகரகமாய் நடத்தல் பசு குதிரை முதலியவைகளை லாபம் முதலான சுப பலன்கள் நடைபெறும்.

பன்னிரெண்டால் இராசியில் சத்துருவினால் உபத்திரவம் ரோகம் அவமானம் மனதில் கலக்கம் முதலான அசுப பலன்கள் நடைபெறும்.

குருவின் கோசார பலன்கள்

சந்திர லக்கினத்தில் சஞ்சரித்தால் ஸ்தானப்ரஷ்டம் மானபங்கம், அலைச்சல் விரோதம் ஆகிய அசுப பலன்கள் நடைபெறும்.

இரண்டாம் இராசியில்:-காரியானுகூலம் ஜீவன் சம்பந்தமான விஷயங்களில் முயற்சியின் பேரில் நற்பலன்கள் ஓர் குழந்தையின் ஜனனம் தனவரவு விவாஹாதி சுப காரியங்கள் முதலான சுப பலன்கள் நடைபெறும்.

மூன்றாம் இராசியில்:-ஊரோ ஜாகையோ உத்தியோகமோ தன் விருப்பத்திற்கு விரோதமாக மாறுதல் இடையூறுகள் முதலிய கெடுதலான பலன்கள் நடைபெறும்.

நான்காம் இராசியில் அவமானம் ஜீவன விஷயத்தில் கஷ்டம் பந்து நாசம் வீண்பழி சுமத்தப்படுதல் முதலான அசுப பலன்கள் நடைபெறும்.

ஐந்தாம் இராசியில்:-புத்தி ஜனனம் புதிதான ஸ்தான தன வரவு முதலான சுபபலன்கள் நடைபெறும்.

ஆறாம் இராசியில்:-வீண் மனஸ்தாபம் தனக்கஷ்டம் ஸ்தான நாசம் சத்துரு அல்லது கடன்காரர் மூலம் உபத்திரவம், எதிர்பார்த்த இடங்களிலிருந்துப் பணம் வராமல் போகுதல் முதலான அசுப பலன்கள் நடைபெறும்.

ஏழாம் இராசியில்:-விவாஹாதி சுப காரியம் புத்திர ஜனனம் தன வரவு சாஸ்திரக்கேள்வி முதலியன சுப பலன்கள் நடைபெறும்.

எட்டாம் இராசியில்:- பந்தனம் வியாதி சோகம் மரணத்திற்கொப்பான ரோகம் வழி நடப்பதால் உண்டான க்லேசம், எதிலும் கஷ்டம், விவாதம் முதலிய அசுப பலன்கள் நடைபெறும்.

ஒன்பதாம் இராசியில்:—உத்தியோகத்தில் உயர்ந்த பதவி அதிகாரபதவி புத்திர ஜனனம், நற்குணமுள்ளஸ்திரி லாபம் கௌரவிக்கப்படுதல் முதலான சுப பலன்கள் நடைபெறும்

பத்லாம் இராசியில் :—புத்ராதி மரணம் அலைந்து திரிதல் நேந்திரரோகம் இஷ்டமரணம் சிலேஷம் வியாதி செய்தொழிலில் பலவிதக் கஷ்டம் அவமானம் முதலான அசுப பலன்கள் நடைபெறும்

பதினொன்றாம் இராசியில் :—இழந்த பாக்கியம் பதவி இவைகளை மறுபடியும் அடைதல், உத்தியோக லாபம் எடுத்த காரியசித்தி, ரோக நிவர்த்தி, தனவரவ, வாஹனம் வீடு பூமி இவைகளை வாங்குதல் புத்திரஜனனம் முதலான சுப பலன்கள் நடைபெறும்

பன்னிரெண்டாம் இராசியில் :—தர்ம விஷயங்களில் பணச்செலவு யாத்திரையால் சிரமம் வாஹனத்தினின்றும் விழுதலோ இடறி விழுதலோ முதலான கஷ்டம் ஆகிய அசுப பலன்கள் கலந்தே நடைபெறும்

சுக்கிரனின் கோசார பலன்

சந்திர லக்கினத்தில் சஞ்சரிக்குங் காலம்—அழகிய ஸ்திரியோகம்.வாசனை திரவியங்களின் லாபம், விவாஹாதி சுபகாரியங்கள் முதலியவை நடைபெறும்.

இரண்டாம் இராசியில்:—வித்தை, புத்தி லக்ஷ்மிகடாக்ஷம் நல்லவார்த்தை ராஜாக்கள் தரிசனம் முதலான மிக்க சுபபலன்கள் நடைபெறும்

மூன்றாம் இராசியில்:— புதிதாக ஸ்தானம். மதிப்பு, ஆரோக்கியம் போக்கியவஸ்துக்களின் லாபம், மித்திரனின் வரவை முதலான சுப பலன்கள் நடைபெறும்

நான்காம் ராசியில்:—தனம், பத்னி, புத்ரன், இஷ்டர்களுடன் போஜனம் முதலான சுப பலன்கள் நடைபெறும்.

ஐந்தாம் இராசியில்:—புத்திரோற்பத்தி, நற்கீர்த்தி தனலாபம் முதலான சுபபலன்கள் நடைபெறும்

ஆறாம் இராசியில்:—அவமானம் களத்திரத்திற்குப் பீடை ரோகம் முதலான அசுப பலன்கள் நடைபெறும்.

ஏழாம் இராசியில்:—அலைச்சல் களத்திரத்திற்கு பீடை அஸ்த்துக்களின் ஸ்நேகம் முதலான அசுப பலன்கள் பெடும்.

எட்டாம் இராசியில் :-ஸ்திரிமூலம் சௌக்கியம் பிரக்யாதி, மித்திரர் வரவு விவாஹாதி சுபகார்யம் மனை, லாபம் முதலான சுப பலன்கள் நடைபெறும்.

ஒன்பதாவது இராசியில்:-விவாஹாதி சுபகாரியம், பெருத்த தனலாபம், வித்யாலாபம் தர்மானுஷ்டானம் முதலான சுப பலன்கள் நடைபெறும்.

பத்தாவது இராசியில் :-பந்துப்ரீதி காரியசித்தி மதிப்பு முதலிய சுப பலன்கள், நடைபெறும் சுக்கிரன் பத்தாவது இராசியில் சஞ்சரிக்குங்காலம் சண்டை முதலியவை நிச்சயமாய் ஏற்படும் என்று வராஹமிஹிராசாரியார் கூறுகிறார்.

பதினொன்றாவது இராசியில் :-ஆபரணம் தனம் நல்லமலை இவைகள் ஏற்படும்.

பன்னிரண்டாம் இராசியில் :-போக்கிய வஸ்துக்களின் லாபம் ஆயினும் வஸ்திரநாசம் இவைகள் நடைபெறும்.

சனியின் கோசார பலன்கள்

சந்திர லக்கினத்தில்:-சிறையிலடைபடுதல் இடம் மாறுதல் வாயுவினாலும் விஷத்தினாலும் நெருப்பினும் பீடைஅவமதிப்பு தொழில்நாளம் களத்ரம் மாதா பிதா இவர்களுக்குப் பீடை நஷ்டம் முதலான கடுமையான கெட்ட பலன்கள் நடைபெறும்

இரண்டாம் இராசியில்:-தனச்செலவு பலவிதக்கஷ்டங்கள் மனஸ்தாபம் குடும்பக் கவலை முதலான கெட்ட பலன்கள் நடைபெறும்

மூன்றாம் இராசியில் :-சத்துருநாசம் மதிப்பு சௌபாக்கியம் காரியசித்திரோக நிவர்த்தி ஜீவன விஷயத்தில் நல்ல பலன்கள் முதலானவை நடைபெறும்

நான்காம் இராசியில் :-பந்துநாசம் அவமானம்ரோகம் அலைச்சல் திரிதல் முதலான அசுப பலன்கள் நடைபெறும்

ஐந்தாம் இராசியில்:-புத்திரர்களுக்குப்பீடை புத்தியில் கலக்கம் கலஹம் எக்காரியமும் தடைப்படுதல் முதலான அசுப பலன்கள் நடைபெறும்

ஆறாம் இராசியில் :-சத்துரு ஜயம், ரோக நிவர்த்தி தனலாபம் முதலான சுப பலன்கள் நடைபெறும்.

ஏழாம் இராசியில்:-அடிக்கடி அலைச்சல் பிசாசுபாதை களத்திரத்திற்குப் பீடை ஆண்பெண் குறிகளில் ரோகம் வீண்சிரமம் முதலான அசுபபலன்கள் நடைபெறும்.

எட்டாம் இராசியில்:-பந்து மரணம், சரீரத்தில் பீடை இவைகளைச் செய்வான்.

ஒன்பதாம் இராசியில்: தனநஷ்டம் விரோதம் பயணற்ற சிரகங்கள் பிதுர்வழி நாசம் முதலானவற்றைக் கொடுப்பான்

பத்தாம் இராசியில்:-ஜீவன விஷயத்தில் கஷ்டம் சரீரத்தில் பீடை மதிப்புககுறைவு முதலான அசுப பலன்கள் நடைபெறும்.

பதினொன்றாம் இராசியில்:-உயர்ந்த பதவி புதிய ஸ்லாதன, அடிக்கடி தனலாபம் நினைத்த காரிய சித்தி முதலான சுப பலன்கள் நடைபெறும்.

பன்னிரண்டாம் இராசியில்:- வீண் விரயங்களும் ஒன்றின் பின் ஒன்றாகச் சோகமும் ஏற்படும்.

ராகுவின் கோசார பலன்கள்

பொதுவாக இராகு கேது இவர்கள் சந்திர லக்னம் 2 4 5 8 9 10 12 இந்த இராசியில் அசுப பலன்களையும் 3 6 11 இந்த ராசிகளில் சுப பலன்களையும் கொடுக்கிறார்கள் என்று பலன் தீபிகையில் சொல்லப்பட்டிருக்கிறது.

சந்திர லக்கினத்தில்:-தேகத்தில் அதாவது சரீரத்தில இளைப்பேற்றும்

சந்திர லக்கினத்திற்கு 2-ல் தன்நாசம்
மூன்றாவது வீட்டில்;-ஸௌக்கியமேற்படும்
நான்காவது வீட்டில்;-துக்கம்
ஐந்தாவது வீட்டில்;-தனநாசம்
ஆறாவது வீட்டில்;- சுக விருத்தி
ஏழாவது வீட்டில்;-நாசமே ஏற்படும்
எட்டாவது வீட்டில்;-மிருத்தியு பயம்
ஒன்பதாவது வீட்டில்;-ஹானி
பத்தாவது வீட்டில்; லாபம்
பதினொன்றாவது வீட்டில்;-எவ்விதத்திலும் நன்மை
பன்னிரண்டாம் வீட்டில்;-பணச் செலவுகள்

ரகுவைப்போலவே கேதுவிற்கும்
கோசாரப் பலன்களைச் சொல்ல
வேண்டும் நோய்வாய்பட்ட நட்சத்திரத்
தைக்கொண்டு நோய் தீரக்கூடிய
நாட்களை அடியில் குறிப்பிட்டபடி
பார்த்துத் தெரிந்து கொள்ளவும்

வியாதி ஏற்பட்டு சுகமாகும் நாட்கள் நக்ஷத்திரம்

| | |
|---|---|
| அசுவின் | 9 நாட்களில் குணமாகும் |
| பரணி | 5 நாட்களில் குணமாகும் |
| கார்த்திகை | 7 நாட்களில் குணமாகும் |
| ரோகிணி | 21 நாட்களில் குணமாகும் |
| மிருகசீரிஷம் | 5 அல்லது 9-நாட்களில் குணமாகும் |
| திருவாதிரை | 5 நாட்களிலோ-3 பட்சத்திலோ மரணம் |
| புனர்வசு | 7 நாட்களுள் குணம் |
| ஆயில்யம் | 9 நாட்களுள் மரணம் அல்லது வெகு நாட்களுக்குப் பின் மரணம். |
| மகம் | 10 நாட்களுக்குள் மரணம் அல்லது அடுத்த மகத்துள் மரணம் |
| பூரம் | 21 நாட்களுள் குணம் |
| உத்திரம் | 9 நாட்களுள் குணம் |
| ஹஸ்தம் | 7 நாட்களுள் குணம் |
| சித்திரை | 8 நாட்களுள் அல்லது அடுத்த சித்திரைக்குள் குணமாகும் |
| சுவாதி | 10 தினங்களுக்குள் அல்லது ?-பட்சத்துள் குணமாகும் |
| விசாகம் | 25 நாட்களுள் குணமாகும் |
| அனுஷம் | 10 நாட்களுள் குணமாகும் |
| கோட்டை | 12 நாட்களுள் மரணம் |
| மூலம் | 10 தினங்களுக்குள் மரணம் |
| பூராடம் | 5 தினங்களுக்குள் குணமாகும் |

| | |
|---|---|
| உத்திராடம் | 1 மாதத்துள் குணமாகும் |
| திருவோணம் | 3 தினங்களுள் குணமாகும் |
| அவிட்டம் | 10 தினங்களுள் குணமாகும் |
| சதயம் | 6நாட்களுள் வியாதிஅதிகமாகும் |
| பூரட்டாதி | 12 நாட்களுள் வியாதி அதிகமாகும் |
| உத்திரட்டாதி | 1 பட்சத்தில் குணமாகும் |
| ரேவதி | 8 நாட்களுள் குணமாகும் |

நோய் நீங்கும் காலம்

| நட்சத்திரம் | 1-வது பாதம் நாள் | 2-வது பாதம் நாள் | 3-வது பாதம் நாள் | 4-வது பாதம் நாள் |
|---|---|---|---|---|
| அசுவினி | 9 | 10 | 15 | மரணம் |
| பரணி | 9 | 7 | 15 | 15 |
| கார்த்திகை | 9 | 10 | 15 | 4. |
| ரோகிணி | 10 | 18 | 32 | 32 |
| மிருகசீரிஷம் | 30 | 28 | 15 | 35 |
| திருவாதிரை | 9 | மரணம் | 10 | 25 |
| புனர்பூசம் | 7 | 10 | 18 | மரணம் |
| பூசம் | 7 | 12 | 30 | 27 |
| ஆயில்யம் | 9 | 20 | 30 | 39 |
| மகம் | மரணம் | 3 | 30 | 5 |
| பூரம் | மரணம் | 25 | 6 | 31 |
| உத்திரம் | 8 | 20 | 12 | மரணம் |
| ஹஸ்தம் | 8 | 15 | 28 | 32 |
| சித்திரை | 9 | 15 | 12 | 41 |
| ஸ்வாதி | 12 | மரணம் | 36 | 12 |
| விசாகம் | 9 | 6 | 40 | 31 |
| அனுஷம் | மரணம் | 20 | 20 | 40 |
| கேட்டை | மரணம் | 20 | 31 | 32 |
| மூலம் | மரணம் | 30 | 10 | 0 |
| பூராடம் | 9 | மரணம் | 10 | 54 |
| உத்தராடம் | 7 | 20 | 50 | 40 |
| திருவோணம் | 11 | 10 | 3 | மரணம் |
| அவிட்டம் | 9 | 15 | 32 | 39 |
| சதயம் | 7 | 10 | 4 | 5 |
| பூரட்டாதி | மரணம் | 16 | 31 | 41 |
| உத்திரட்டாதி | 7 | 12 அல்லது 18 | 7 | 28 |
| ரேவதி | மரணம் | 11 | 18 | 26 |

*உதாரணம்:-* ரேவதி முதல் பாதத்தில் ரோக மேற்பட்டால் மரணம் ஏற்படும், ரேவதி 2-வது பாதத்தில் ரோகம் ஏற்பட்டால் 11 நாட்களில் குணமாகும் இப்படியே மற்ற நக்ஷத்திர பாதங்களைக் கொண்டும் அறிந்து கொள்ள வேண்டியது.

ஞாயிற்றுக்கிழமையும், சதுர்த்தியும், திருவாதிரை ஆயில்யம் அல்லது மகம் கூடின தினம் செவ்வாய்க் கிழமையும் நவமியும், சுவாதி அல்லது கேட்டை அல்லது பாணி கூடின தினம் சனிக்கிழமையும் சதுர்த்தியும் பூரம் பூராடம் அல்லது பூரட்டாதி கூடின தினத்தன்று ஆரம்பித்த ரோகம் மிருத்யு அச்சத்தையே கொடுக்குமென்று தெரிந்து கொள்ள வேண்டும்.

ஸ்திர காரணங்களான சதுஷ் பாத நாகவ கிம்ஸ்துக்ன சகுண;- இந்நான்கு காரணங்களிலும், விஷ்டி கரணத்திலும் ஆரம்பித்த வியாதினின்று பிழைப்பது கஷ்டம்.

ஜென்ம நக்ஷத்திரம், அதினின்றும் 3-வது 5-வது 7-வது 10-வது 19-வது நக்ஷத்திரங்களில் உண்டான பிணிதிராத சஞ்சலத்திலேயே முடிவாகும்.

சதுர்த்தி நவமி சதுர்த்தசி சஷ்டி அஷ்டமி, த்வாதசி அமாவாஸ்யை-இத்திதிகளில் ஏற்பட்ட பிணியும் கவலையைக் கொடுக்கும்.

வியாதியில் கஷ்டப்படுகிறவர்களுக்கு அவர்களுடைய ஜென்மராசிக்கு 8 வது வீட்டில் சந்திரன் கோசாரப்படி வரும் சமயம் நக்ஷத்திர தினமும் ஜென்ம நக்ஷத்திர பாதம் முதல் 88-வது பாதமும் குரு வாரங்களான செவ்வாய், சனி ஞாயிற்றுக்கிழமைகளும், சந்தியா நேரங்களும் அந்தந்த நாட்களுக்குரிய விஷநாடிகளும் தக்கயோகமும் உயிருக்கு அச்சத்தையே உண்டாகும்

சந்திர லக்கினத்திற்கு 8-ம் இடத்தில் சனி வரும்போது அஷ்டமற்துச் சனியாகும் அக்காலத்தில் ஜாதகனுக்குந் பலவிதமான கஷ்டங்களுண்டாகும் சந்திர லக்கினத்திற்கு 12-ம் இடத்தில் சனி வரும்போது ஏழரைநாட்டுச் சனி தொடருங்காலமாகும் 12 1, 2, இந்த மூன்று இடங்களிலும் இந்தச் சனி ஏழரை வருஷமிருந்து எப்போதும் கஷ்டமான பலன்களைக் கொடுப்பதினால் இந்தச் சனிக்கு ஏழரைநாட்டுச் சனி என்று பெயர் இதில் முதல் 5 வருஷம் மிகவும் கொடிய கஷ்டங்களையும் துற்பலன்களே உண்டாகும் இந்தச் சனி சந்திர லக்கினத்திற்கு 3-ம் இடத்தில் வருங்காலத்தில் சற்று நற்சுகத்தைக் கொடுப்பான். கஷ்டங்கள் நீங்கும் 30 வருஷத்திற்கு ஒரு தடவை ஏழரை நாட்டுச் சனி வருவதினால் முதல் தடவையில் தந்தைக்கு சுக பலன்களையும், ஜாதகனுக்கு கஷ்டத்தையும் கொடுப்பான். இரண்டாம் தரம் ஜாதகனுக்கு துற்பலனும் கொஞ்சம் நற்பலனும், மூன்றாம் தடவையில் மரணத்தையும் கூடக் கொடுக்கலாம், மேஷம் சிம்மம், மீனம் இந்த ராசிகளில் ஏழரைச் சனி இருந்தால் கொடிய கஷ்டம் உண்டாகும்.

## நவக்கிரகங்களின் பரிகாரத்திற்கு வேண்டிய நவதான்யங்களும், புஷ்பங்களும்

| கிரகம் | தானியம் | புஷ்பம் |
|---|---|---|
| சூரியன் | கோதுமை | செந்தாமரை |
| சந்திரன் | பச்சரிசி | மல்லிகை |
| செவ்வாய் | துவரை | சண்பகம் |
| வியாழன் | கடலை | முல்லை |
| புதன் | பச்சைப்பயறு | வெண்காந்தன் |
| சுக்கிரன் | மொச்சை | வெண்தாமரை |
| சனி | எள் | கருங்குவளை |
| இராகு | உளுந்து | மந்தாரை |
| கேது | கொள்ளு | செவ்வரளி |

கும். நாலாமிடத்திற்குடையோன் லக்கினத்திலிருந்து சுபர்களால் பார்க்கப்பட்டாலும் குரு சுக்கிரனோடு கூடி இருந்தாலும் தண்டிகை பல்லக்கு முதலிய வாகனங்களுண்டாகும்.

வாகனாதிபதி இருக்கும் வீட்டுக்குப் பக்கத்துடையவனும் லக்கினாதிபதியைக் கூடினால் பெரும் பூமிக்கதிபனாவான் நல்ல சுகவாழ்வு பெற்று வாழ்வான். வாகனாதிபதி ஸ்புடத்துடன் சுக்கிர ஸ்புடத்தையும் கூட்டி கண்ட ராசியில் குரு வந்து சேர்ந்து கேந்திரத்திலும் திரிகோணத்திலும் இருந்தால் வாகனாதிகள் உண்டென்று சொல்லவேண்டும்.

சுகம் ஞானம் பண்டித்துவம் பிரபுத்தன்மை பீடை சம்பத்து பந்து இவைகளை நான்காம் பாவத்திலுள்ள சூரியாதி கிரகங்களால் அறிய வேண்டும் சத்துரு க்ஷேத்திரத்தையடைந்த பாபக்கிரகங்களால் பந்துக்களிருந்தாலும் ஜாதகன் பந்து ஜனங்களால் ஆதரிக்கப்படமாட்டான் மகா குரூரத்தையும் மகா துக்கத்தையும் வெகுகாலம் வரை அவர்களால் ஜாதகன் அடைவான்.

ஜென்ம லக்கினத்திற்கு நான்காம் பாவத்தில குரூரமான கிரகங்களிலிருந்தாலும் மேற்கூறியபடி துக்கத்தையே அடைய நேரிடும்.

ஜென்ம லக்கினத்திற்கு நான்காம் பாவம் பாவக்ஷேத்திரமாகில் அப்படிப்பட்ட நான்காம் பாவத்தில் அங்காரகனிருந்தால் ஜாதகன் இருதய நோயினால் கஷ்டமடைவான் ஸ்திரீ நாசமும் பந்துக்களின் கலகமும் உண்டாகும், பந்து ஜனங்கள் அதிகமிருந்தாலும் மூடர்களுடைய நட்புமுள்ளவர்களாகவே இருப்பான் மேற்கூறிய செவ்வாய் சுபர்களுடைய வீட்டிலிருந்தால் ஜாதகன் அன்னிய தேசம்செல்லக் கூடியவனாக இருப்பான்.

ஜென்ம லக்கினத்திற்கு நான்காம் பாவத்தில் வளர்பிறைச் சந்திரனிருந்தாலும் சுக்கிரனிருந்தாலும் இவர்கள் தன் உச்ச அதிமித்திர ராசிகளிலிருந்தாலும் ஜாதகன் வாகனம் முதலியவை போகங்களை உடையவனாக இருப்பான்.

சூரியனுடன் சனி சேர்ந்து குடும்ப ஸ்தானத்திலிருந்து மூன்றாமிடத்து அதிபனையும் நாலாமிடத்தையும் சனி

பார்த்தால், சந்திரன் பாம்புகளுடனேயாவது, பாவிகளுடனேயாவது சேர்ந்துபலன் இன்றி இருக்குபோது நாலுக்குடையவன் உச்சமாயிருந்தாலும் மாதாவுக்குப் பீடையுண்டு என்று தெரியவேண்டும்.

மாதுர் ஸ்தானத்தில், சந்திரனும், சுக்கிரனும் பாம்பும் மூன்று பேருமிருக்க இவர்களுக்கு ஏழில், ஐந்தில் சனிநிற்க சூரியனுடன் மூன்றாமிடந்தோன்றி ஐந்தாமிடத்தில் நிற்க இவர்களைச் சனி பார்க்க குடும்பஸ்தானத்தை அங்காரன் பார்க்க தாய்க்கு அரிட்டம் உண்டாகும்.

மேஷலக்கினத்திற்கு மாதுர் ஸ்தானத்தில் சுக்கிரனும் புபினும் நிற்க அதற்கு ஏழில் குரு நிற்க அப்போது சந்திரனுக்கு ஏழில் சனி இருந்தால் மாதாவைப்பொற்ற மாதா காலமாவள். ந்திரன் உச்சமாகி சுபக்கிரகங்கள் பார்த்தால் மாதாவுக்கு தோஷமே இல்லை.

நாலுக்குடையவனோடு லக்கினம் ஒன்பது பத்துக்குடைய பரிவர்த்தன யோகமிருந்தால் வாகன விருத்தியுண்டாகும் பாக்யராஜ்யாதிபதிகள், வாகன ஸ்தானாதிபதியையாவது வாகன ஸ்தானத்தையாவது பார்த்தால் வாகன யோகவான் என்றும் சொல்லவும் சப்பல சகிதமான வாகன ஸ்தானாதிபதிக்கு மேற்கண்ட ஸ்திதி இருந்தாலும் ரதம் பல்லக்கு யோகமெனச் சொல்லவும்.

பாக்கிய ராஜ்யாதிபதிகள் நாலாமிடத்திலிருந்து க்ஷேத்திரகாரனாக குஜனால் பார்க்கப்பட்டால்பூமி லாபம், புதன் பலவானாய் நாலாம் வீட்டிலிருந்து சுபர்களால் பார்க்கப்பட்டால் கிராமாந்தங்களரங்களில் பூமி ராஜ்யம், சொந்த மனை இவைகள் சேரும் புதன் பலவானாகி நான்காம் வீட்டிற்கு விரையஸ்தானத்தில் இருந்தால் ஆறுக்குடையவன் பார்த்தாலும் கூடி இருந்தாலும், பூமி பொருள்கள் அழிந்துவிடும் என்று சொல்லவும்.

## ஐந்தாம் பாவம் புத்திர பலன்

புத்திர ஸ்தானத்து அதிபதியுந்திரகாரனாகிய பிரகஸ்பதி குடும்பாதிபதி இந்த மூன்று பேர்களால் புத்திர பாவ

*பிரிவர்த்தனம் யோகம் என்பது அவன் வீட்டில் இவனும் இவன் வீட்டில் அவனும் இருப்பது.

சுகத்வைக் கொடுப்பான். கிரக பாகத்தில் புருஷ ஸ்திரீ யென்று பாதிக்கப்பட்டது என்றதினால் புத்திர ஸ்தானாதிபதி, புருஷ கிரகமோ அல்லது ஸ்திரீகிரகமோ அவர்கள் இருக்கப்பட்ட ராசிபுருஷ ராசியோ. ஸ்திரீ ராசியோ என்று கண்டறிந்து புத்திர சந்தானத்தை நிர்மாணஞ் செய்ய வேண்டும்.

தந்திரம், புத்தி குரூரம், காவியமறிதல், கௌரவத்துடனிருத்வால், சேனாதிபதி ஆகுதல் மூடனுக்குச் சமானமாக இருந்தல். நிதானம், இவற்றை ஐந்தாம் பாவத்தாலும் சூரியன் முதலானவர்களாலும் தெரிந்து பலன் கூறவேண்டும்.

ஜென்ம லக்கினத்திற்கு ஐந்தாம் பாவம் சுபாக்ஷத்திரமானாலும். சுபர்கள் பார்வையுடையதானாலும் குரு கேந்கூறிய ஐந்தாம் பாவத்தில் இருப்பினும், குரு ஐந்தாம் பாவத்தைப் பார்த்தாலும் ஜாதகனுக்கு புத்தி சந்தானம் உண்டாகக் காரணமுண்டு.

ஜென்ம லக்கினத்திற்கு ஐந்தாம் பாவத்தில் பாவக்கிரககங்கள் இருந்தாலும் பாவாதிபதி பாவர்களுடன் கூடியிருந்தாலும், ஐந்தாம்பாவம் குருவால் அல்லது புத்திர பாவாதிபதியால் பார்க்காவிடிலும் ஜாதகனுக்கு புத்திரனில்லை என்று சொல்லவும்

ஜென்ம லக்கினத்திற்கு ஜென்மாதிபதியோடு ஐத்துக்குடையோன் சேர்ந்தாலும், பார்த்தாலும், ஒருவர் வீட்டில் ஒருவர் மாறி நின்றாலும், பெருமையான குழந்தைகள் பிறப்பார்கள். அப்படி பிறந்தவர்கள். நமனுக்கு அஞ்சமாட்டார்கள்.

## ஜாதக அலங்காரத்தில் கூறுகிறது

அஞ்சரகுமிடத்திலறு மவராற் தோஷம்
அனுகும் சனிவகை குழவி கருகன் தந்தைக்கே
துஞ்காதமதிக்கன்னை புதனாலன்னை
சுற்றமதற் கரசனால் தந்தைசுற்றமாகும்
நஞ்சாருங் கரியகோள் சுதற்குச் செவ்வாய்
நண்ணிலடிலம்மானுக்குத் தோஷமாகும்
மஞ்சாறுங்குழன் மடவாய் யரசனைந்தின்மேவ
வந்திடில் சந்தானமத்திய முதித்தறானே.

ஐந்தாமிடத்திலிருப்பவரால் தோஷம் வரும் விதம் எப்படியென்றால், சனியிருந்தால் குழந்தைக்கும், சூரியனிருந்தால் தந்தைக்கும் சந்திரனிருந்தால் தாய்க்கும், புதனிருந்தால் மாதுரு வர்க்கத்தாருக்கும், குரு விருந்தால் பிதுர் வர்க்கத்தாருக்கும், ராகு இருந்தால் குழந்தைக்கும், செவ்வாயிருந்தால் மாமனுக்கும் தோஷமுண்டாகும் குரு இருந்தால் சந்தானம் உற்பத்தியே குறைவாகும் என்று அறியவும்.

ஜென்ம லக்கினத்திற்கு ஐந்தாம் பாவமான சுய க்ஷேத்திரத்தில் புத்திரஸ்தானத்தில் இரண்டு பாபக்கிரகங்கள் இருந்தால் ஜாதகனுக்கு அனேக குழந்தைகள் பிறக்கும், மேற்கூறிய பாபக்கிரகங்கள் பலஹீனர்களாக இருந்தால் புத்திர நாசமாகும்.

ஜென்ம லக்கினத்திற்கு எட்டாம் பாவாதிபதி தவிர மற்றவர்கள் சுபக்கிரகங்கள் ஐந்தாம் பாவத்திலுருந்தால், சுப பலன்களுண்டாகும் சுபக்கிரமாயிருந்தால் எட்டாம் பாவாதிபதி ஐந்தாவது பாவத்தில் இருந்தால் புத்திர தோஷம் ஏற்படும்.

ஜென்மலக்கினம் துலாமாகில் ஐந்தாம் பாவமாகிய கும்பராசியில் சூரியனிருந்தால் ஜாதகன் புத்திரபாக்கியமில்லாதவனாவான். புத்திர ஸ்தானத்தில் சூரியனிருந்தால் ஒரு புத்திரனும் செவ்வாயிருந்தால் இரண்டு புத்திரர்களும், குருவிருந்தால் நற்குணமுள்ள ஒரு புதல்வனும் சுபக்கிரகங்கள் பார்வையில் குரு பலனால் நான்கு புதல்வர்களுமுண்டாகும்

ஒன்று இரண்டு ஐந்து ஸ்தானாதிபதிகள் ஆறு எட்டு பன்னிரெண்டில் இருந்து அதற்கு இரண்டு பக்கத்திலும் சத்துரு கிரகங்களிலிருந்து, புத்திர ஸ்தானாதிபதி குருவிற்கு விரைய ஸ்தானத்திற்கு சத்துரு க்ஷேத்திரத்திலாவது நீச்சமடைந்து இருந்தாலும் புத்திர சந்தானம் உண்டாகாது என்று சொல்ல வேண்டும்.

புத்திர ஸ்தானத்தில் சனியிருந்தால் பெற்ற பிள்ளைகள் நிலைக்காது என்று சொல்லவும் புத்திர ஸ்தானாதிபதி சனியுடன் கூடு பாத சாரத்துக்கு முந்தியிருந்தால் தெத்து புத்திரன் உண்டு என்றும் சொல்லவேண்டும்.

குஜன் லக்கின குருவுக்கு ஐந்திலிருந்தால் குரு மகா திசையில் செவ்வாய் புத்தியில் புத்திரசோக முண்டாகு மென்று சொல்லவும், இதுவரையில் கூறிய சுபர்களிருந்தால் அந்த பாவங்களுக்கு சுப பலனே கொடுப்பார்கள்.

## அற்ப புத்திர யோகம்

ஜென்ம லக்கினத்திற்கு ஐந்தாம் பாவமாக சனி புதன் இவர்களின் ராசி ஆகி அங்கு சனி மாத்திரம் கூடியிருந்தாலும், சனி மாந்தி, இவர்களால் மேற்படி புத்திரர்கள் நாசமடையும், புத்திர க்ஷேத்திரத்திலிருந்து பார்க்கப்பட்டாலும் ஜாதகனுக்கு தத்துவமூலமாகத்தான் புத்திரபாக்கியமுண்டு என்று அறியவும்.

ஜென்ம லக்கினத்திற்கு. மீனராசி, புத்திர க்ஷேத்திரமாகி அங்கு கிரகங்கள் சனி, மாந்தி, ஆகி மேற்படி ராசியிலிருந்தால் ஜாதகனுக்கு அற்ப சந்தான முண்டாகும்.

குரு கும்பராசியிலிருந்தால் ஜாதகன் சந்தான விருத்தி இல்லாதவன். ஜென்ம லக்கினத்திற்கு ஐந்தாம் பாதாதிபதி ஏழாம் பாவத்திலிருந்தாலும். ஏழாம் பாவாதிபதி ஐந்தாம் பாவத்திலிருந்தாலும், இந்தப் பாவங்களில் இவர்களுடன் பாபக்கிரகங்களிலிருந்தாலும் பாபக்கிரகங்களால் பார்க்கப்பட்டலும், ஜாதகன் புத்திர சந்தான மில்லாதவனாகவே இருப்பான்.

அங்காரகன் சூரியன், சனி, இவர்கள் ஜன்ம லக்கினத்தின் முடிவில் அல்லது ஏழில் இருந்தாலும் ஐந்தாம் பாவத்தில் க்ஷீண சந்திரன் சூரியனிருந்தாலும் ஜாதகனுக்குப் புத்திரர்கள் அற்பமாகும்.

ராகு புத்திர ஸ்தானத்திலிருக்க அல்லது புத்திர ஸ்தானாதிபதியுடன் சேர்ந்து சுகக்கிரக திருஷ்டி உண்டானாலும் உண்டாகும், ராகு இல்லாதிருந்தால் நாகபாசத்தால் புத்திர நாசமுண்டாகும்.

ஜென்மலக்கினத்திற்குப் பத்தாம் பாவத்தில் சந்திரனும் ஏழாம்பாவத்தில் சந்திரனும், நான்காம் பாவத்தில் பாபரும்

இருந்தால் ஜாதகனுக்குக்குல நாசம் உண்டாகும். வெகு புத்திரர் சோகமும் உண்டாகும், ஜாதகனுக்கு சனி, அங்காரகன் இவர்களால் மட்டும் இருந்தால் மேற்படி தோஷமுண்டாகும் என்று அறியவேண்டும்

ஜென்ம லக்கினத்திற்கு ஐந்துக்குடையோன் மேற்கூறிய ஸ்தானங்களில் இல்லாமல் இருந்தாலும், சுபர்களுடைய வீட்டைப் பாராமலிருந்தாலும் குழந்தையே பிறக்காது ஐந்துக்குடையோன் மூன்றிலிருந்தால் புத்திரர்கள் அற்பமாகும்.

சந்திரன் இலக்கினத்திற்கு மத்தியில் இருக்கும் ஐந்து இடங்களையும் பாபக்கிரகங்கள் பார்த்தால் புத்திரர் அற்பமாகும். சனி முதலிய பாபிகள் பார்த்தால் இல்லை ஐந்தில் கேது, ராகு இருந்தால் குழந்தைகள் பிறந்து மறிப்பார்கள்

## ஆறாம் பாவம், சத்துரு பாவம்

கூறு மாறாமிடத்தில், குறத்திடும் பலன்களாறிற்
விறுதல்லோர் கடகமு மேவிடில் றாயத்தார்கள்
வேறுபட வழக்கிட்டுள்ள, பெருந்தனம் பிரிந்தாவென்று
ஏறுயம் பலத்தினிற்ப எதிரிக்கே வலுமையாகும்.

ஆறாமிடத்துப் பலன்களைச் சொல்லுமிடத்து ஆறில் சுபர்கள் இருந்தால் பங்காளிகள் வழக்கு தொடுத்து பங்கு பாகம்ஜெயிப்பார்கள் என்று அறியவும் ஆறில் சுபர்களிருந்தால் எவர்கள் பார்த்தாலும். விவாதம் சொல்லக்கூடாத சமர்த்தனாவான். பங்காளிகளை எல்லாம் வழக்குகளில் ஜெயித்து வெற்றி யடைவான்

ஆறில் பாபர்கள் பொல்லாதவர்களுக்கு. பொல்லாதவனாகவும் நல்லவர்களுக்கு நல்லவனாகவும் இருப்பான், புகழுடன் வாழ்வான் மேற்படி பாபக்கிரகங்கள் இருப்பதனால் எதிரிகள் பயப்படுவார்கள். சத்துருக்கள் வணங்குவார்கள் செல்வமுடையவனாகவும் வாழ்வான் என்று அறியவும்.

ராகு ஆறிலிருந்தால், ஜாதகன் எந்த விஷயங்களுக்குப் போனாலும் புகழும், கீர்த்தியும் பெற்று வருவான். ஆறுக்

குடையவன் பாவியாகிக் கேந்திரத்தில் சுபர்காணவிருந் தால் மந்தேரியாக இருந்து துஷ்டர்களைத் தண்டிக்கும் தன்மை உடையவனாக வாழ்வான்.

ஜென்ம லக்கினத்திற்கு 6ஆம் ஆறுக்குடையோனும் லக்கினாதிபதியும் சூரியனும் கூடினால் சுரத்தினால் கண்டமும். சந்திரன் கூடினால் ஜலத்தினால் கண்டமும், செவ்வாய்கூடினால் ஆயுதத்தினால் கண்டமும், சனி கூடினால் குளக்கரை நீரால் கண்டமும், சுக்கிரன் கூடினால் பெண்களினால் கண்டமும் ராகு, கேது இவர்கள் கூடினாலும் பார்வையுண்டானாலும், விஷப்பாம்புகளினால் கண்டமும் உண்டாகும்.

ஜென்மாதிபதியும் நான்காம் அதிபதியும் அட்டமாதிபதியோடு கூடி இருந்தால் அல்லது ஆறாமிடத்திலேயே இருந்தாலும் அஜீரணபேதி உண்டாகித் துன்பத்தைக் கொடுப்பான்.

ராகுவானாலும், கேதுவானாலும், ஆறாமிடத்திற்குடையவனும் கூடி அல்லது ஆறிலேயே நிற்க அங்காரகன் பார்க்க நெருப்பிலகப்பட்டு இறப்பான்.

இலக்கினாதிபதி உழிலுமிருக்க பாபிகளால் பார்வை பெறக் கர்மாதிபதியும், சஷ்டாதிபதியும் இலக்கினத்திலிருந்த பெண்களினால் விஷபக்ஷணம் உண்டு மரணமடைவான் என்று சொல்லவும்.

ராகு கேதுக்கள், கேந்திர திரிகோணத்திலிருக்க ஆறாமடத்திற்கு உடையவனால்பார்க்க காரகன் அஷ்டமத்திலிருக்க ராகு திசை நடக்கும்போது சுயபுத்தியினால், மரங்களினால் படுகாயமுண்டாகும் என்று சொல்லவும்.

அஷ்டமாதிபதி சாஷ்டம் விஷயங்களிற் சந்திரனோடு கூடி 6,7,8,8, இந்த இடங்ளில் உள்ள எந்தக் கிரகங்களையும் பார்த்தாலும் ஜாதகன் நடுப்பிராயத்தில் தன் மனையாளின் மனஸ்தாபத்தினால்தூக்கிலிட்டுதானேகயிறு போட்டுக்கொண்டு மரணமவைார்கள் என்று கூறவும்.

இலக்கின பாவத்தில் சனியின் அம்சத்தில் குருவும் சூரியனுமிருந்து கிருஷ்ணடக்ஷ சந்திரன், புதன், ராகு இவர்

களுடன் கூடியிருந்தாலும், அஸ்தமயத்தை அடையும் போது ஜனித்தவன் வயிறு அறுபட்டு மரணமடைவான்.

ஜென்ம லக்கினத்தில், சனியிருந்து சுபர்களே பார்த்து இருந்தும். சந்திரன் சர்ப்பக் கிரகங்களான, ராகு கேதுக்களுடன் சூரியனும் கூடியிருந்தாலும் பார்த்தாலுமஜாதகன் யுத்தக்களத்தல் மரணமடைவான்.

க்ஷீண சந்திரன் ராகு கேதுக்களால் பார்த்தாலும் அங்காரகனும் சேர்ந்து இருந்தாலும், அரசர்களால் சிரச்சேதமுண்டாகும்

ஜென்ம லக்கினத்திற் சனி இருந்து செவ்வாய், சுய ஷேத்திரத்திலிருந்து, சந்திரனும் புதனும், மூன்றாம் பாவத்திலிருந்தாலும், ஆறாம்பாவத்தில் செவ்வாயிருந்து சனியால் பார்த்தாலும். ஜாதகன் வெகு சத்துருக்களை யுடையவனாக இருப்பான். சத்துருக்களினால், பயமும் ஆபத்தும் உண்டாகும் என்று கூறவும்.

சனியும் ராகுவும். லக்கினத்திலிருந்து கன்னியா ராசியில் சுக்கிரனிருந்தாலும் சனி அஸ்தமனமா யிருக்கும்போது பிறந்தவன் தனது கரகங்களை அறுபட்டு பகைவனால் துன்பமட்டவான், இவனுக்கு எப்பொழுதும், பகை இருந்து கொண்டே இருக்கும், இவர்கள் எங்கும் தனிமையாகப்போவது தவறாகும்.

சூரியன். அங்காரகன். ஆறாமிடந்துக் கதிபதியுடன் சேர்ந்து, 10, 4 ஆல், இருந்தால் மலைமேலிருந்து கீழே விழுந்து அடிபடுவான் என்று சொல்லவும்.

சனி, சந்திரன், செவ்வாய், ஆறாமிடத்தில் இருந்து பாபர்களைப் பார்த்தாலும், மேற்கூறிய கிரகங்கள் 4,7,10-ல் இருந்தால் ஜாதகன் கிணற்றில் விழுந்து மரணமடைவான்.

ஆறாமிடத்திற்குடையவன் நீச்சமாகி குரூர சஷ்டியங்கிசத்திலிருந்தால் ஜாதகன் க்ஷயத்தினால் பீடிக்கப்படுவான் என்று அறியவும்.

ஆறாம் பாவம் முற்றிற்று



## ஏழாம்பாவம் களத்திர பலன்

### சோதிட களஞ்சியத்தில் கூறுகிறது

வரிசைபெறுங் களத்திரத்தாதிபனைக் கூடி
வாழ்கிரகம் எத்தனையுண்டத்தனைபேர் மணப்பன்
உரிய களத்திரகாரனாதிபன் சுகமாய்
உற்றிடினற் கோளகாண்கில் உத்தமற்றிவர் தாம்
அரியிடத்தும் வியமுறினும் பாவர்களே காண
அமர்ந்திடினும் மத்தியமாம் மேவுஞ் செவ்வாயிருவர்
பிரியமுடன் களத்திரத் துற்றிடின் மடவார் காணில்
பெருகி சுபக்கோணோக்கம் பெற்றிடினும் உதித்த மக்கள்

களத்திர ஸ்தானாதிபனைக்கூடிய கிரகம் எத்தனையோ அத்தனை விவாகம் செய்துக்கொள்வான் களத்திர காரன், சுபமாக இருந்தாலும் சுபர்களால் பார்த்தாலும் உத்தமம், களத்திரகாரன், சிம்மராசியிலும் பன்னிரெண்டாமிடத்திலிருந்தாலும், பாவிகள் பார்த்தாலும். நாசமாகும் களத்திரம் தாங்காது, ராகும், அங்காரகனும் இந்த இருவரும் களத்திர ஸ்தானத்திலிருந்தால் மனைவிக்கினமாகும் அவர்களைச் சுபக்கிரகங்கள் பார்த்தால் உத்தமமாம்.

களத்திர ஸ்தானாதிபதி, லக்கினாதிபதியுடன் கூடிய தன்னுடைய வீட்டிலிருந்தால் ஜாதகன் பல பேரைக்கூடி ஒரே விவாகம் நடக்கும். களத்திராதிபனும். குரும்பாதிபனு பாவிகளுடன் கூடினாலும், சுக்கிரனுடன் கூடினாலும் மூன்று ஆறாமிடங்களிலிருந்தாலும் மனைவிக்கினமாம்.

லக்கினாதிபனும் ஏழுக்குடையோனும் கூடி 1 2 6 8 இந்த இடங்களிலிருந்தால் ஜாதகனுக்கு விவாகமில்லை ஏழாமிடம். சுத்தியாய், அந்த வீட்டுக்குடையவனோடு பலரும், சுக்கிரனும் கூடியிருந்தால் ஜாதகனுக்கு மனைவி ஒன்றேயாகும்.

சுக்கிரனும், அங்காரகனும் ஏழாம் பாவத்தி லிருந்தால் ஜாதகன் விதவையை மணஞ் செய்வான். சந்திரனும் அங்காரகனும், ஆறுக்குடையவனுன் சேர்ந்து நான்கிலிருந்

தாலும், இந்த நால்வரும் ஜென்மலக்கினத்திற்கு 9, 4 6, இந்த ஸ்தானங்களில் கூடினாலும் இருந்து பார்த்தாலும் பாஸ்திரீ மணப்பான். அவரினால் சந்தான விருத்தி யுண்டாகிப், பந்து ஜனங்களை பகை செய்து கொள்ளுவான் என்று அறியவும்.

ஏழில் பாவிகளிருந்தால் களத்திரத்திற்கு ரோகமுண்டு சூரியனும் ராகுவும் சேர்ந்து, இரண்டிலிருந்தால் களத்திரத்திற்கு அநேகமாக ரோகம் இருந்துகொண்டே யிருக்குப் அதிலிருந்து குடும்பம் ஏழைக் குடும்பமாகும்.

ஏழுக்குடையோன் சரராசியிலிருந்நால் இரண்டும் களத்திரமாம். ஸ்திர ராசியிலிருந்தாலும், நன்மையும் உபய ராசியிலிருதந்ால் இறவாமல் பல களத்திரமும் உண்டாகும் களத்திராதிபன் பார்த்தால் பலன் கைகூடும் லக்கினாதிபன் சுக்கிரனுடைய வீட்டிலிருந்து அவனைப் பார்த்தாலும் கூடினாலும், ஜாதகன் ஸ்திரீ சம்பன்னன் என்றே சொல்ல வேண்டும்.

ஏழு, இரண்டாமிடங்களுக் குடையோனும், சுக்கிரனும் பாவக்கிரகங்களோடு சேர்ந்து 6 8, 12-ல் இருக்கும் பாவிகள் வந்து சேர்ந்தால், ஜாதகன் ஒரு பெண்ணை மணப்பான். ஆனால் ஷெ மனைவிக்கு சந்தான உற்பத்தியே இல்லை அற்ப ஆயுளுடையவள்.

ஏழுக்குடையோன், குடும்ப ஸ்தானாதிபதி இவர்களுடன் திரிகோணத்திலும், கேந்திரத்திலும், ஏறியிருந்து அவர்களுடை வீட்டில் ஆட்சி பெற்றிருந்தான் தன் தாரமின்றி பறத்தின்மீது ஆசைப்படமாட்டான்.

ஏழுக்குடையோனும் களத்திரக் காரனும் நீச்சமடைந்து 12 6, 8 இந்த இடங்களிலிருந்தால், மனைவிக்

கீனமுண்டாம். சுக்கிரனிருக்கும் வீட்டுக் குடையோன் 12 6, 8 இந்த இடங்களிலிருந்தால் எத்தனைபேரை மணந்தாலும், ஷ மனைவிகள் தங்கால் இருந்துகொண்டே இருப்பார்கள்.

ஏழுக்குடையோன், சூரியனுடன் கூடினாலும், எட்டு ஆறா பன்னிரெண்டாமிடங்களிலிருந்தாலும் ஜாதகன் மனைவி நல்ல வாலிப வயதிலேயே இருந்து விடுவான்.

ஏழாமிடத்தில் சூரியனிருந்தால் பெண்விரோதத்தினால் அற்பனாவான். விவாகம் விளம்பரமாக நடக்கும். சாஸ்திர சம்பன்னன், தேசாந்திரம் போவான், தன விருத்தியுடைய பெண்ணையே விவாகம் செய்து சுகமாக வாழ்வான்.

இலக்கினத்திற்கு ஏழாம் பாவத்தில், சந்திரனிருந்தால் தன் மனையாள்மீது நட்பும், அவளுடைய வார்த்தையையும் தட்டாமல் நடப்பான். தன் மனைவியும் நற்குணம் வாழ்ந்தவள். தன் மனைவிக்கு வியாதி உண்டாகும். அவள் வேறு விவாகமும் செய்துகொள்ளுவான்.

அங்காரகன் ஜன்மலக்கினத்திற்கு, ஏழாம் பாவத்திலிருந்தாலும் இரண்டாம் பாலத்திலிந்தாலும் ஜாதகனுடைய மனைவிக்கு ஈனமாம்.

புதன் லக்கினத்திற்கு ஏழாம் பாவத்திற்சூரியன் அஸ்தமித்திருந்தால் ஜாதகனுடையமனைவி சபலபுத்தியும் மூர்க்க குணமும், வஞ்சனையும் உடையவளாக இருப்பாள் மேற்கூறிய புதனே ஏழாம் பாவத்தில் சுபனாகி, வம்சமூலமும் நல்ல ரூபமும். அனைவோரும் புகழ்ந்து கொண்டாடப்பட்ட தன்மையும். வெகு பிரீதியுடையவளாகவும் இருப்பாள். ஜாதகனுக்கு அநேக பெண்களுண்டு என்றும் சொல்ல இடமுண்டு.

சுபர்களுடைய வீட்டில் ரிஷப லக்கினத்தில் புதனிருந்தால் ஜாதகனுடைய குணம் நற்குணமாகும், ஏழாம் பாவத்

தில் குருவர் வக்கிரமடைந்து இருந்தால் ஜாதகன், அரசர்களுக்கு இன்பமுடையவனாக இருப்பான்.

ஏழாம் பாவத்தில் குரு நீச்சமடைந்திருந்தால் ஜாதகனுக்கு நற்குணமுடைய மனைவி கிடைத்தாலும் மனைவிக் கீனமுண்டாகும் மேற் கூறிய பாவத்தில் சுக்கிரனிருந்தாலும் ஜாதகன் மனைவிக்கு ஈனமாம்.

சனி செவ்வாய் இவர்கள் சுக்கிரன் சந்திரன் இருக்கும் ராசியிலிருந்தாலும் பார்த்தாலும் ஜாதகன் மனைவி இல்லாதவனாவான் அங்கக் குறைவுடையவனாக இருப்பான்.

ஏழுக்குடையோன் சனி இருக்கும் வீட்டில் இருந்தாலும் பார்த்தாலும் ஏழாம் பாவத்தில் ஒன்பதாமதிபன் எட்டிலிருந்தாலும் தன் மனைவி பிற நாயகனைச் சேருவாள் அதன் மூலமாகத் ஜாதகன் ஜீவனம் நடத்தக் கூடியவனாக இருப்பான்.

கன்னி லக்கினமாகி சந்திரனுஞ் சனியும் கேந்திரந்திலிருந்தால் ஜாதகன் அனேகப் பெண்களை மணப்பான். ஏழில் சுக்கிரனும் ஜென்ம லக்கினத்தில் குருவும் நல்ல சுபர்களுடன் கூடியிருந்தால் மேற்கூறிய பெண்களைக் காப்பாற்றுவான் ஷ கிரகங்கள் நீச்சமடைந்து பாபக் கிரகங்களுடன் கூடியிருந்தாலும் பார்த்தாலும் ஷ பெண்களைக் காப்பாற்ற முடியாமல் இருப்பான்.

குடும்பாதிபன் களத்திராதிபன் ஆறுக்குடையோன் இவர்கள் ஏழாம் பாவத்தில் கூடியும் பார்த்தும் இருந்தால் ஏழு எட்டுக்குடையவன் இவர்கள் பாபர்களுடன் இருக்கும் பன்னிரெண்டில் ஒகு செவ்வாய் கூடி வந்தாலும் ஜாதகனுக்கு இரண்டு விவாகம் நடைபெறும்.

ஜாதகன் ஜெனன காலத்தில் குரு ஜென்மத்திலிருந்தால் ராஜஸ்திரியோடும் சூரியனும் செவ்வாயும் கூடினால் க்ஷத்திரியப் பெண்ணையும் சந்திரனும் புதனும் கூடினால் வைசியப் பெண்ணையும் சனிகூடினால் சூத்திரப்

பெண்ணையும் குரு கேது கூடினால் புலையர் குலத்திலுதித்தப் பெண்ணுடன் கூடிப்பெருமையாக வாழ்வான். ஆனால் ஜாதகன் வாழ்வு கடைசி காலத்தில் பெண் ...ன் ரோகத்தினால் பிணியுற்று மரணமடைவான்.

களத்திர ஸ்தானத்தில் பாவர்களிருக்க களத்திரஸ்தானாதிபதி பகைமை பெற்று அவ்வீட்டிலேயே அல்லது பன்னிரெண்டாமிடத்தில் பத்துருநீச்சருடைய வீட்டிலிருக்க விவாகம் செய்தும் நல்ல சுகத்தை அடைய மாட்டான்.

### சோதிட களஞ்சியத்தில் கூறுகிறது

லக்கினம் தனக் கேழ் தன்னில்
விபத்தினிற் சோமன்றானும்
புக்கவே பாவரங் தசையிற்
பெருந்தியே யிருந்த காலை
சுக்கிரன் பாவரோடு
துலங்கவே யிருக்க நாரி
கைக்கொள்ளும் புருடனாய்
கணவனைக் ககாள்வள் கண்டீர்

லக்கினத்திற்கேழிலும், பன்னிரெண்டிலும் சத்திரன் ஏழாம் பாவத்தில் பொருந்தி இருந்தாலும் அவள் தனது கணவனைக் கொள்ளுவாள் என்பதாம். களதிராதிபதி குருவாகி பாவிகளுளன் கூடிப் பாவராசியில் இருந்து பார்த்தாலும் சனியிருந்தாலும் தன் மனைவி சோரத்தனம் போவாள் இக்காரத்தினால் தான் நாயகனைக் கொல்லும்படி நேரிடும்.

ஏழாம் பாவம் முடிவு

---

## எட்டாம் பாவம் ஆயுட்பலன்

### சோதிடக் களஞ்சியத்தில் கூறுகிறது

அட்டமத்தின் பாக்கியாதிபனாகி நிற்கில்
அட்டமத்தின் பாவியாகிலுமை ஐயமில்லை
அட்டமத்தின் சமாகி ஆனநற்கோண
அட்டமத்தபதிபன் தன்னைப் பார்க்கினும் நூறாண்டிருப்பான்

எட்டுக்குடையோன். பாக்கியாதிபதியானாலும் பாவியானாலும், உச்சமானாலும் சுபர்களுடைய பார்வையைப் பெற்றால் ஜாதகன் நூறு வயது வரைக்குமிருப்பான்.

லக்கினாதிபதியும் சூரியன் இருவரும். ஆதிமிந்திரகளாக இருந்தாலும் பாவக்கிரகங்கள் 8லிருந்தாலும் அஷ்டமாதிபதி உச்சமடைந்த போதும், தன் சொந்த வீட்டிலிருந்தாலும் மேற்கூடிய கிரகங்கள் பலம் பெற்றிருந்தாலும் சுபக்கிரகங்களான குரு சுக்கிரன், புதன், கேந்திர திரிகோணத்திலிருந்தாலும், லக்கினாதிபதி. கேந்திர திரிகோணத்தில் சட்பசகிதனாகி யிருந்தாலும் இராகு 3-[illegible]-12 லிருந்தாலும் ஜாதகனுக்குப் பூரண ஆயுள் என்று சொல்லவும்.

5, 9ல் சூரியன் நவம் ஸ்தானாதிபதியிலிருந்து கெட்ட ஸ்தானாதிபர்களுடன் சத்துரு பாவக்கிரகங்களாவது சம்மந்தம் பெற்றிருந்தால் ஜாதகன் தாயார் கர்ப்பத்திலிருக்கும் போதே தனது தந்தைக்கு மரணம் ஏற்படும்.

நவக்கியஸ்தானமாபவும் தசமராஜ்யம் ஸ்தானமாகவும் சொல்ல வேண்டும் இந்த ராஜ்யபாக்கிய ஸ்தானாதிபதிகளுக்கு துஸ்மஸ்தானாதிபதியாகவும், பரிவர்த்தன யோகமும் 80க்கு மேல் ஜாதகனுக்கு ஆயுளுக்கு அற்ஷ்டமுண்டு என்றும் கூறவேண்டும் இந்தக் கிரகங்கள், சரராசியிலிருந்தாலும் இராஜயோகமுண்டாகும்.

கிரகங்களுக்கு ஸ்தானம் இரண்டு மேற்பட்டிருந்தால் ஒரு ஸ்தானம் ராஜ்ய பாக்கியமாக இருந்தால் 3 6 8 12 11 இநத ஸ்தானங்களில் ஒன்றாகவரும் ராஜ்யபாக்கியாதிபதி பரிவர்த்தன யோகமில்லாதபோது துஸ்மஸ்தானாதிபதிகள் தோஷத்தினால்யோகம் கெட்டுப்போகும், தனது சுயக்ஷேத்திரத்திலிருந்து இருந்தால் ராஜயோகமே சொல்ல வேண்டும், ஆயுளும் குறையாமல் 80 வரை நடந்தேறும்.

அஷ்டமாதிபன் ஒன்று, ஒன்பது ஐந்திலிருந்து அஷ்டமத்தைச் சனிபார்த்தால் ஜாதகனுக்கு வயதுஎழுபத்தைந்து.

இலக்கினாதிபனும் அஷ்டமாதிபனும் இலக்கினத்திலிருக்க குரு பார்த்தால், பூரணாயுள் உண்டாகும்.

பிதுர்ஸ்தானாதிபதி விரையஸ்தானத்திலிருந்து சூரியனைச சனி பார்த்தால் தன்பிதாவுக்கு அற்பாயுள் என்று கூறவும்.

சிம்மராசி லக்கினமாக இலக்கினாதிபதி அங்காரகன் புதனோடு கூடி லாபஸ் தானத்தில் அமரசந்திரன் உச்சம்

பெற்று ராகு சுக்கிரனோடுகூடி கர்மஸ்தானத்தில் நிற்க சனி லக்கினத்தில் நின்று குரு பார்வையினால் ஜாதகனுக்கு வயது அறுபதுக்குமேல் நடக்கும்.

ஆறுக்குடையோனும் லக்கினாதிபனும் பாவக்கிரகங்களால் பலம் பெற்று 7 லிருந்துசுபக்கிரகங்களின் பார்வைப் பெறாமல் போனால் ஜெனத்த குழந்தை இரண்டு மாதத்திலும் லக்னாதிபதிக்கு எட்டில் பாவர்களும் அவர்கள் பார்வை பெற்றாலும் குழந்தை நான்கு மாதங்களிலும் மரணமாவான்.

லக்னாதிபதியே பாவியாகிப் பலமற்று, சுபர்கள் பார்வை இல்லாதிருந்தால் 6 மாதங்களிலும் 6,8,12இந்தஇடங்களில் பாவிகள் பார்வை பெற்றிருந்தால் எட்டு மாதத்திலும் ஜெனத்த குழந்தை மரணமாகும்.

தேய்பிறைச்சந்திரன் 86 இந்த ஸ்தானங்களில் ஜென்ம லக்கினத்திற் பாவிகள் கூடியும் பார்த்தும் இருந்தால் 10 மாதங்களிலும் பாவிகள் ஜென்மத்திலும் நல்லோர் பார்வை பெற்றிருந்தாலும் ஜாதகன் ஒரு வருடத்திலும் மரணமாம் துஸ்மஸ்தான மென்பதும் துஸ் ஸ்தானம் என்பதும் 3 6 11 12 இடங்கள்.

## விருத்தம்

அஞ்சு பத்து நவம் பனிரண்டில்
    அருக்கனேக அவன் பிதா தோஷமாம்
அஞ்சு நாலெட்டுப்பத்துப் பனிரெண்டில்
    இந்து வுஞ்சேந்தீ வண்ணனுஞ் சேர்த்திட
மிஞ்சு மாதுரு வர்க்கமுந்தோஷமாம்
    மேவு மூன்றாறும் எட்டும் பனிரெண்டிற்
செஞ்சுடர்பானும் சேயுடன் சேர்ந்திடிற்
    சிறந்த சோதரர் சேதமாகுமே.

உதயத்தில், சனியும் நான்காமிடத்தில் செவ்வாயும் ஏழாமிடத்தில் சூரியனுமிருக்கச் சுபக்கிரகங்கள், பார்வை இல்லை என்றால் பிள்ளை பிறந்த அன்றே மரணமாகும்.

உதயத்தில், ராகு, கேது, நிற்கச் சுபக்கிரகங்கள் பாரா திருந்தால் அன்று இரவு குழந்தை மரணமாகும்.

மீனத்தில் கேதுவும் ராகும் இருந்தால் சுபபலன்களுண்டாகும் 7,8ல் ஏழில் செவ்வாயு 8ல் சூரியனும் இருந்தால் அரிஷ்டமாகும்.

பகலிற் பிறந்தவனுக்கு 1-ம் இடத்தில் சூரியனும் இரவில் பிறந்தவனுக்கு 11-ம் இடத்தில் சந்திரனும் இருந்தால் சகல தோஷமும் நிவர்த்தியாகும்.

அதிர்ஷ்டபாகம் 5-க்கு விபரம்

1 வருஷம் முதல் 12 வருஷம் வரையில், பாலாரிஷ்டம் வருஷம் முதல் 20 வருஷம்வரை யவ்வண அரிஷ்டம் 21 வருஷம் முதல் 32 வருஷம் வரை கௌமாரக அரிஷ்டம் 33 வருஷம் முதல் 70 வருஷம் வரை யிருந்தாரிஷ்டம் 71 வருஷம் முதல் 100வருஷம்வரை பூரண ஆயுள்.

பாலாரிஷ்டத்தைம் பார்க்கும்போது அதை இரண்டு விதமாகம் பலன் அறியவேண்டும்.

முதலாவது ஜெனன காலத்தில் இலக்கினந்திற்குப் பட்ட கிரகஸ்திதியை அனுசரித்துச் சொல்ல வேண்டும்

இரண்டாவது சந்திரனிருக்கப்பட்ட நட்சத்திரத்தைப் பார்த்துப் பலன் சொல்லவேண்டும்

காலை மாலையில், எந்த ராசியிலாவது சந்திரவோரையில் ஜெனனமாகி, அந்த லக்கினம் நவாம்சையுண்டாகிய ராசுகளில் பாவர்களிருந்தால் அதிர்ஷ்கியோகம்.

கேந்திரங்களான (1 4, 7 0) இந்தஸ்தானங்களில் சந்திரனும் பாவக்கிரகங்களும் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பாதத்திலிருந்து சுபக்கிரகங்கள் வீக்ஷண்யம் இல்லாதிருந்தால் ரிஷ்ட யோகமாம்.

பாவக்கிரகங்களாகிய இராசி சக்கரம் பூர்வபாகத்தில் அசுபக் கிரகங்களுடன் உதயபாதத்தில் சுபக்கிரகங்களும் இருந்த ஜென்மலக்கினம் விரிச்சிமாகில் அரிஷ்டயோகமாம்

சந்திரன் 1 7 8, 15 இந்தஸ்தானங்களில் ஓரிடத்தில் பாவர்களுடன் கூடி, கேந்திரத்திற்கு நேர்விரோதமான ஸ்தானங்களிலிருந்தாலும், சுபர்கள் பார்வை பெறாமலிருந்தாலும் அரிஷ்ட முண்டாகும்.

(2 3 5 6 8 9, 11 12) இந்தஸ்தானங்கள் கேந்திரத்திற்கு நேர்விரோதமான ஸ்தானமாகும்:

சந்திரன் சத்தமத்திலிருந்தாலும், கிரக, யுச்சத்தில் பாவர்களுடன் வெல்லப்பட்டால் பிறந்த சிசுவுக்கு ஒரு மாதத்தில் அரிஷ்டமுண்டாகும்.

சந்திரன் சஷ்டாமத்திலிருந்து சுக்கில பட்சத்தில் இரவிலும் கிருஷ்ணபட்சத்தில் பகலினும் குழந்தை ஜெனனமானால் அக்குழந்தைக்குப் பலரிஷ்டம் இல்லை.

சந்திரகிரஹண காலத்தில் சந்திரன் லக்கினத்திலிருந்து சஷ்டமத்தில் செவ்வாய், இருந்தாலும் சூரியகிரஹண காலத்தில் சூரியன் லக்கினத்திலிருந்து சனி புதன் இருவரில் ஒருவருடன் சேர்ந்திருந்தாலும் அரிஷ்டமத்தில் அங்காரகனிருந்தாலும் மாதாவுக்கும் சிசுவுக்கும் ஒரே சமயத்தில் அரிஷ்டமுண்டாகும்.

சூரியன் சந்திரன் பலம்பெற்று சுபக்கிரகங்களுடைய திருஷ்டியாவது கூடியிருந்தாலாவது மேற்கூறிய பலமுடைய கிரகங்களினால் மேற்சொல்லப்பட்ட யோகங்கள் மாறி தாயும் குழந்தையும் க்ஷேமமடைவார்கள்.

லக்கினத்திற்கு 8-ல் க்ஷீணமதியிருக்க 7-ல் சேய்நிற்க லக்கினாதிபன் பலவீனமாகி 2-ல் இருக்க, பூசம், பூராடம் பிறக்க அமரபச்சத்துச் சந்தியன், விருச்சிகராசியிலிருக்க 1 7ல் சனியிருக்க ஜலராசி யுதயமாக சுபர்கள் கேந்திரத்திலிருக்க 5 மிடம் கடகமாகி அதில் சேயிருக்க அமரபதி 6 8 1 இந்த ஸ்தானங்களிருக்க 5 9ல் ரவி குரு கூட அமரபதி கேந்திரஸ்தானத்திலிருக்க பாவர்கள் 8-ல் கூட சுபர்கள் கேந்திர வீட்டிலிருக்க குழந்தை இரண்டுநாளிருந்து மரணமாகும் என்பதாம்.

இலக்கினத்திற்கு குரு, உதயத்திலிருக்க வருடம் 30 என்றும் 7ல் கேயிருக்க சனி இலக்கினத்தில் இருந்தாலும் வருடம் 31 என்பதாம் பாவாதிபதி இலக்கினத்திலிருந்தால் மிகவும் விருத்தியுடையவன் என்பதாம்.

எட்டாம் பாவம் முற்றிற்று

## ஒன்பதாம் பாவம் பிதுர்பலன்

### சோதிடக் களஞ்சியம் கூறுகிறது

ஓதுமைந்த தொன்னாதி கதிருடனே கூட
ஓதிடுங் காரிபார்க்கவுறும் பிதாவிற்கு அரிஷ்டம்
ஓதுமைந்தொன்பானாதி கதிருடனே காரி
ஓதி பேயிவர்தா மூன்றிலுற்ற தந்தையுடனேபோமே

மேற்கூறிய ஐந்து ஒன்பதுக்குடையோர்கள் சூரியனு டன் கூடவும் சனி இவர்களைப் பார்க்கவும் இருந்தால் ஜாதகனுடைய பிதாவுக்கு அரிஷ்ட முண்டாகும்.

ஐந்து ஆறு அதிபர்கள் சூரியன் சனி அங்காரகனுடன் கூடி மூன்றாமிடத்தில் இருந்தால், த்ந்தையுடனே மரிப் பான்.

லக்கினத்திற்கு 9,5,10, இந்த இடங்களில் சனி அங் காரகன் சூரியன் இந்த மூவரில் ஒருவரிருந்தாலும் தன் தந் தைக்கு அயுட்டமுண்டாகும் ஜென்ம லக்கினத்தில் அங்கா ரகனும் ஏழில் சூரியனும் இருந்தால் சந்தேகம் குருவிருந் தால் தந்தை மூன்று வருஷமிருந்து மரிப்பான்.

பிதுர்ஸ்தானத்தில் சனியும் கேந்திரத்தில் அங்காரக னும் இருந்தால் தகப்பனுக்கு அரிட்டமுண்டு அஷ்டமத்தில் ஜென்மாதிபதியுடன் சூரியன் அங்காரகன் இவர் கூடியிருந் தாலும் தந்தைக்கு அரிட்டமாம் ஜென்மத்திற்கு 5,9, இந்த இடங்களில் பாவிகளும் ராகு கேந்திரத்திலுமிருந்தால் ஜாதகனுடைய தந்தைக்கு ஈனமாம் சூரியனுக்கு, ஏழில் சனியும், அங்காரகனுமிருந்தால் சுபர்கள் பார்வை பெற்றி ருந்தாலும் தந்தைமரிப்பான்.

### சோதிடக்களஞ்சியத்தில் கூறுகிறது

ஒன்பானிடத்தில் சனி ஐந்தில்
ரவியுடனே யுறு பாம்பும்
அன்பா யிருக்கத் தந்தை
தனக்கரிட்டம் ஐந்தாம் அதிபதி
இன்பமுச்சமா யிருக்க வில்லை
யரிட்டர் பிணி நாட்டும்
பொன் பார்த்தருளச் சனி ரவி
நின்றாற் பிணிபோங்கண்டீரே.

ஒன்பதில் சனியும் ஐந்தில் சூரியனும் ராகுமிருந்தால் தந்தைக்கரிட்ட முண்டு ஐந்துக்குடையோன் ஆட்சி உச் சம் பெற்றால் அரிட்டம் உண்டாகாது பிணியைக் காட்டும் இவர்களை, குரு பார்வையும் சனியும் சூரியனுமிருந்தால் நோய் சுகமாகும்.

சனியும், சூரியனும் ஒன்பதுக்குடையானும் ஒரு வீட்டி லிருந்தால் தந்தைக் கரிட்டம் அவரைக் குருபார்த்தால்

ஐந்துக்குடையோன் உச்சமாயிருக்கவும் சிலநாள் சென்ற பின் தந்தைக்கு அரிட்டமுண்டாகும்.

பிதுர்காரகனும் ஒன்பதுக்குடையோனும் சனியும் பாவர்களுடன் கூடி பன்னிரெண்டில் எட்டு ஆறாமிடங்களிலும் பிதுர் ஸ்தானத்தில் கேதுவுமிருந்தால் அவ்வீட்டுக்குச் சனியும் வரும்போது உடனே தந்தைக்கு அரிட்டமுண்டாகும்,

ஜென்மலக்கினத்தில் அங்ககரகனும் ஒன்பதில் சனியும் இருந்தால் தந்தைக்கு அரிட்டமாம் பிதுர்ஸதானதிபதியுடன் அங்காரகன் சனி, கூடியும் சுபகிரகங்கள் எந்த ராசியில் இருந்தாலும் தந்தைக்கு அரிட்டமாம்.

ஒன்பதுக்குடையோன் வலிமைபெற்று சுபர்கள் வீட்டில் நற்கோல் பார்க்க நின்றால் தெய்வங்களை இகழாமல் அறிவைச் செலுத்தி ஜெபதப தியானங்கள் செய்வான் பிதுர் சொந்துக்கள் கிடைக்கும் அதைக்கொண்டு ஜீவனம் செய்வான்.

சூரியன் ஒன்பதாமிடத்ல் இருக்க இன்னும் மற்ற கோள்கள் பகை நீச்ச ராசிகளிலிருக்க இவர்களுக்கு குரு திருஷ்டி இல்லாமல் பாவர்சகிதம் இருக்கின தன் தந்தை துரோகியாம் அல்லது ஈகலரையும் நிந்திப்பான் என்பதாம்

பிதுர் ஸ்தானாதிபதி கெட்ட ஸ்தானங்களில் தன்பெலம் குறைத்து இருந்தாலும் பிதுர்ஸ்தானத்தில் சூரியனும் செவ்வாயும் இருந்தாலும் பிதுர்ஸ்தானாதிபதி சத்துருநீச்சர்களுடைய வீட்டிலிருக்க பிதுர்ஸ்தானத்தை கெட்ட கோள்கள் பார்த்தால் ஜாதகனுடைய பிதா அரிட்டமாவான்.

ஒன்பதாமிடத்தில் ராகு, இருக்க அல்லது சர்ப்பத்திரேக்காணமாம் இவன்பிதா (ஜாதகன்பிதா) சர்ப்பம் தீண்டி இறப்பான்.

ஒன்பதாமிடம் சர ராசியாய் ஒன்பதிற்குடையோன் சர ராசியிலிருக்க சூரிடன் திரிகோணராசியாகியஒன்பதாமிடத்திற்குடையவனுக்கு, சஷ்டமாதிபதிகள் சரக்கலாக இருந்தால், ஜாதகன் தன் தந்தையின் மரணகாலத்திற்கு உதவமாட்டான்.

சூரியனுக்கு எட்டாமிடத்தில் இருக்கின்ற க்ரகங்கள் எட்டாமுடத்திற்கதிபதி நின்ற ராசி வீட்டில் ராஜ்பாதிபதி கூடி நின்ற அயகிரத்திலும் அதற்குத் திரிகோணங்களிலும் சனி வருங்காலத்தில் சனியுடன் கூடி நின்ற கிரகங்கள், சுபர்களானாலும் பாவர்களானாலுய ஷ திசை நடக்குங் காலத்தில் பிதுர் மரணமாம்.

ஒன்பதாமிடத்திற்கதிபன் சூரியனாகில் ஜாதகனுடைய தந்தை சுரரோகம் பித் ,ரோகம் இவற்றால் மரணமாவான்

சந்திரனிருந்தால். உதர ரோகம் அதிகாரம், ஜல தோஷம் இவற்றால் மரணமாவான். அங்காரகனாகில் இரத்த ரோகம் ஆயுதம் இவற்றால் மரணமாவான். புதனாகில், வாத ரோகத்தினாலும் மூளைக்கோளாராலும் மரணமாவான். குருவாகில் குலை நோய் குன்மரோகம் இவற்றால் மரணமாவான் சுக்கிரனாகில் ஜலத்தினால், விஷக்கடியினால் மரணமாவான் சனியாகில், சூளை நோயாலும், குஷ்ட நோயாலும் மரணமாவான்.

ஒன்பதாம் பாவத்தில் குருவுடன் சந்திரன், புலன் அங்காரகன் இவர்களும் கூடி இருந்தால் ஜாதகன், பூமி நஷ்டமும். மனைவிக்கீனமும் தன்தாய் நாசமும் உண்டாகும்.

பிதுர் காரனையுணர்ந்து பலன் சொல்லுவதற்கு சூரியனுக்கிருபுறங்களிலும் பாவக்கிரகங்கள் இருந்தாலும், பார்த்தாலும் ஜாதகனுக்குக் குழந்தை மனைவியின் கர்ப்பத்திலிருக்கும் போதே தந்தைக்கரிட்ட முண்டு.

ஒன்பதுக்குடையோனும் குருவும், கேந்திர திரிகோணங்களில் இருந்தாலும் இவர்களுடன் பாக்கியாதிபனும் சேர்ந்து ஒன்பதிலிருந்தால் இவர்கள் மகாதிசையிலாபாதிகன் கூடினாலும் பூர்ணபாக்கிய முண்டாகும் ஏழுக்குடையோன் லாபாதிபனைக் கூடினாலும் சேர்ந்து இருந்தாலும் அவன் சுபர்கள் வீட்குலிருந்தாலும் அவர்கள் திசை நடக்கும்பொழுது சனி வருங்காலத்தில் ஜாதகனுடைய குடும்பத்தில் தாய்வழியில் பிதுர் மரணமாவான்.

ஒன்பதாம் பாவம் முடிவு

———

## பத்தாம் பாவம் கன்ம பலன்

### சோதிட களஞ்சியத்தில் கூறுகிறது

பத்தாம் இடத்தில் அஷ்டமந்தோன்
பாவருடனே கூடி நிற்கப்
பத்தாம் அதிபலம் பெறவே
பாவம் பார்க்கத் துர்க்கண்மம்
பத்தாம் அதிபன் பலவானாய்ச் சுபக்
கோளூடனும் பரிந்தேழில்
ஒத்த நான்கிற் சென்மத்தி
உரின்நற் கருமமுளனாவன்

பத்தாமிடத்தில் அஷ்பமாதிபதி பாலகிரகங்களுடன் கூடியிருந்து பத்தாமிடத்திற்குடையோன் அதிகப் பலம் பெற்று பாவக்கிரஹங்கள் பார்வையினால் கெட்ட கருமம் உண்டாகும் பத்தாமிடத்திற்குடையவன் பலம்பெற்று சுபக் கிரகங்களுடனே கூடி ஏழாமிடத்திலும் நான்கமிடத்திலும் ஜென்ம லக்கினத்திலும், சுபக்கிரகங்கள் உச்சம் ஆட்சி, நட்பும், பெற்றிருந்தால் நல்ல கருமுண்டாகும்.

சனி நான்வாமிடத்திற் இருந்தால் ஞானியானவன், சனி பத்தாமிடத்திலிருந்தால் அனேக பெரிய ஸ்தலங்கள் சென்று தீர்த்தமாடி பகவத்தியானமே செய்து வருவான். ஜென்மாதிபன் பத்திலிருந்தால் சஞ்சத்தனமும், பத்தாமிடத்தில் குரு இருந்தால் கருமகாண்ட முடையவனும் மேற் கூறிய கிரகங்கள் அவரவர்கள் வீட்டில் பலம் பெற்றிருந்தால் எக்காலத்திலும் கர்ம முடையகினுவான்.

ஒன்பதாமிடத்தில் குருபலமடைந்து சுபக்கிரகங்களின் வீட்டிலிருத்தாலும் சுபக்கிரகங்கள் குருவைப் பார்த்தாலும்

சந்திரன் சர ராசியிலிருந்தாலும் பெரிய தீர்த்தம் ஆடுவான் சந்திரன் உச்சமடைந்து சுக்கிரன் அடுத்த ஸ்தானத்தில் ஆட்சி பெற்றிருந்தாலும் இன்னும் பல தீர்த்த யாத்திரை செய்து கொண்டேயிருப்பான்.

தகப்பன் தாய் சத்துரு பந்து சகோதரம் ஸ்திரீ பரிவாரங்கள் இவர்களுடைய தனத்தினால் ஜீவனம் செய்வரைச் செல்லப்படுகிறது பத்தாம் பாவத்திலுள்ள சூரியாதிக் கிரகங்களால் அறியவும்

ஜென்ம லகினத்தில் எந்த பாவாதிபதி பத்தாம் பாவத்திலிருக்கிறாரோ அந்தப் பாவத்தின் பலனையே தருவான்.

பத்தாம் பாவத்தை பார்ப்பவர்களாலும் பத்தாம் பாவத்திலிருப்பவர்களாலும் உச்சம், சொட சேத்திரம் மித்திர சத்துரு நீச்சம் இப்படிப்பட்ட அஸ்த அங்கத கிரகங்களாலும் ஜாதகன் சிவபூஜை தேவர்களுக்கு அர்ச்சனை செய்வதும் எண்ணெய் விற்றல் பிரயாசைப்பட்டுப் பொருள் தேடுதல் இவைகளைக் கண்டறிய வேண்டும்.

பத்தாம் பாவத்தில் கிரகங்கள் இல்லாதிருந்து பத்தாம் பாவமும் கிரகங்களால் பார்க்கப்படாமலிருந்தால் ஜாதகன் தனது வறுமையினால் நாலாபக்கங்களிலும் அலைந்து திரிவான்.

சந்திரனுக்கும் லக்கினத்திற்கும் பத்தாமிடத்தில் பலமுடைய கிரங்கள் எது இருக்கிறதோ, அதற்கு ஏற்பட்ட தொழில் கிடைத்து அதன் மூலமாகப் பணமும் சம்பாதிப்பான், இதைச் சூரியன் முதலான கிரகாதிகளைக்கொண்டு நிச்சயம் செய்து கொண்டு பலன் சொல்லவும்.

சூரியன் பத்தாம் பாவத்திலிருந்தால் ஜாதகன். புத்தியுடையவன் சுகம் கீர்த்தி புத்திரன் முதலிய சம்பத்துக்களையுடையவனாக இருப்பான்

சூரியன் சனி அங்காரகனின் ராசியிலிருந்து அவன் பாபக்கிரகங்களின் பார்வையை அடைந்து பலம் பெற்றிருந்தாலும், ஜாதகன் மரணமடைவான் என்பதாம்.

சந்திரன் பத்தாம் பாவத்திலிருந்தால், ஜாதகனுடைய செய்கை ஆச்சாரமாகவும் தனம் காமம் கர்ம விவேகம் உள்ளவனாக இருப்பான்.

செவ்வால் பத்தாம் பாவத்திலிருந்தால், ஜாதகன் பலம் புஷ்டியுடைய சரீர முள்ளவனாகவும் இருப்பான். செவ்வாய் பாவிகளைப் பார்த்தால் ஜாதகன் எக்காரியங்கள் செய்தாலும் தடங்களேற்படும்.

சந்திர லக்கினத்திற்குப் பத்தாமிடத்தில் செவ்வாயிருக்கும் ஜாதகன். எக்காரியமும் ஆரம்பகாலத்தில் தனமும் சுகமுமுடையவன், பெண்ணாசை மிகுதியானவன் தரும குணம், தைரியம் நல்ல மனைவி இவைகளை உடையவனும் எப்பொழுதும் கசளகர்யமும் தனத்தினால் செல்வாக்கும் பெரும்புகழும் பெற்று வாழ்வான்.

பத்தாம் பாவத்ல்ல் புதனிருந்தால் வெகுமங்கள மூடையவன் சந்தோஷமுடையவன் அறிவுடையவன் நல்ல அலங்கார முடையவன் தர்ம சிந்தனையுடையவன் கீர்த்தியும் கல்வியும் தெய்வ பக்தியுமுடையவன் ஆச்சாரமுள்ளவனாக இருப்பான்.

குரு இருநதால் வித்துவ தன்மை யுடையவன். தனமுடையவன், தன்பந்து ஜனங்களுக்கு உபகார முடையவன்

சுக்கிரன் பத்தாம் பாவத்திலிருந்தால் ஜாதகன் சங்கீத பிரியன் நாட்டியம் முதலிய நாடகக் கலைகளில் பிரீதியுள்ளவன் ஜாதகன், ஒரு கிராம அதிகாரியாகவும் இருப்பான் ஆனால் பத்தாம் பாவத்திலுள்ள கிரகங்கள் சுபர்களாக இருந்து ஆட்சி வீட்டில், உச்சத்திலிருந்தால், ஜாதகன் சேனைத் தலைவனாகவும், மந்திரியாகவும் வரக்கூடும்.

பத்தாம் பாவத்தில் சனி இருந்தால், கோவில், குளம், தர்மசத்திரம் கட்டுவான், தன்னுடைய சுயபூமியை இழந்து விடுவான் அயல்தேசத்தில் தன்னுடைய தொழில் நடத்துவான் குருபக்தி தர்மசிந்தனையுண்டு தன்னுடைய புதல்வர்களால் பகையுண்டு,

பத்தாம் பாவத்தில் ராகு, கேது இருந்தால் நல்ல ஐஸ்வரியமுண்டு. தாசி வேசி மிலேச்சர் இவர்களால் சேர்க்கையினர் தேடிய பொருளையுடையவன் ஆனாற் சிவபக்தி யுடையவன்.

பத்தாம் பாவத்தில் சந்திரன் லக்கினத்திப் பத்திலிருந்தால் ராஜப்பிரியன் சூரியனிலிருந்தால் இந்த யோகமுண்டு அழகுண்டு.

பத்தாம்பாவத்தில் சந்திரனும் புதனுமிருந்து இவர்களுடன் சுக்கிரனாவது ராகுவாவது கூடினாலும் ஜாதகன் சண்டாளயோகம் என்பதை அடைவான் இவன் தன் குலாச்சார விதிகளை எல்லாம் மறந்து வேறு தொழில் செய்வான் மேற்கூறிய சந்திரன் சுபர்களால் பார்க்கப்படாமல் ராகுவுடன் கூடி பத்தாம் பாவத்தில் சரராசியிலிருந்தால் ஜாதகன் தனம் அதிஷ்டமில்லாதவனாவான் பாவர்களுடன் ராகுவும் கூடியிருந்தால் ஜாதகன் குறும்புடையவன் தன் சகோதர நாசமாகும் ஆனால் சந்திரனும் குருவும் கூடியிருந்து, சுபர்கள் பர்ர்வை பலமடைந்து உச்சம் நட்புப் பெற்றிருந்தால் ஜாதகன் நல்ல வாகனங்களை அடைந்து அரசனைம்போல் வாழ்வான்.

பத்தாம் பாவத்தில் சூரியன் செவ்வாய் புதன் குரு சுக்கிரன் அல்லது சனி இவர்களுடன் சந்திரன் கூடியிருந்தாலும் அல்லது பத்தாம் பாவத்தில் செவ்வாய் புதன் குரு இவர்கள் ஆட்சி உச்சம் பெற்றுதன் சுய வீட்டிலிருந்து சுபர்களால் பார்க்கப்பட்டால் ஜாதகன் ஒரு நாட்டிற்குகதிபதினாவான் ஜனங்களால் போற்றக்கூடிய லோககுரு ஆவான் ஒரு மந்திரியாகவும் பலனுண்டு என்பதாம்.

பத்தாம் பாவாதிபதி துர்பலனாகி பத்தாம் பாவத்திலேயேயிருந்தால் ஜாதகன் கெட்ட செய்கையுடையவன் சோம்பலுடையவன் மந்தமான புத்தியுள்ளவனுமாவான்.

பத்துக்கதிபன் இரண்டாமிடத்தில் அல்லது கேந்திர ராசியில் அல்லது பதினோராமிடத்தில் உச்சம் பெற்றிருந்தாலா வழியிலும் பொருள் தேடுவான்.

பத்தாமிடத்திற்கதிபதி சூரியன் அங்குசமானால் காய் கிழங்கு முதலியவைகள் பயிர்செய்து ஜீவிப்பான் இதைக் கொண்டு பலமான வியாபாரமும் செய்வான் வைத்தியத்திலும் ஈடுபடுவான் அரசாங்க உதவியினாலும் பணம் தேடுவான் ஜாதகனுக்கு வியாபாரத்தினால் விருத்தியுண்டாகும்.

பத்துக்குடையோன் சுபர்களாகியிருந்தாற் ஜாதகன் தனம் லாபம் பாக்கியாதியாகவும் இருப்பான் ஆனால் உச்சம் பெற்று கேந்திரத்திலிருந்தால் நல்ல கருமத்தையும் அவ

பாவமாகி நீச்சமடைந்து 6,8,12 இந்த இடங்களில் இருந்தால் நல்லவர்களையும் நிந்தனை செய்வான் கெட்ட கருமமான காரியங்களை செய்வான்.

கர்மாதிபதி குருவாகி அவன் உச்சம் பெற்று சுக்கிரனுடன் கூடினால் யாகாதி கர்மங்களும் பன்னிரெண்டுக்குடையோனைக்கூடி சுபர்கள் பலம்பெற்று தன்சொந்த வீட்டிலேயே இருந்தால் சுபகர்மங்களும் நடக்கும்.

கர்மாதிபதி பாவியாகி பார்வைகளுடைய வீட்டிலேயே இருந்தால் கர்மஸ்தானத்தைப் பார்த்தால் சூதக துக்கமுண்டாகும் அதனால் அநேக தீங்குகள் நேரிடும் தியபலமும் பணவ்ரையமும் மனகஷ்டமும் கடன் தொந்தரவுகளும் ஏற்படும் சூதகம் தன்நெருங்கிய சொந்தமான பந்துக்களிடையே தான் ஏற்படும்.

## ஜோதிட களஞ்சித்தில் கூறுகிறது

வேண்டிடு செவ்வாய் ரவி மதி மூவர் கூடி
விரும்பும் பத்தாமிடத்திருக்க மின்னார் பொன்றனக்கும்
ஈண்டியடோர் விரிவில்லாச் சந்நியாசியாவான்
இனிய புதன் கதிரோனும் உச்சமாபிருக்க
தண்டு வியத்தானத்தில் சுக்கிரனெய்திடவும்
சனியொருவனாகி நிற்க சுக்கிரன் தன்னைப்பார்க்க
பூண்டுவரும் ஜன்ம முதலாதியந்தமாகப்
புகழ்ந்திடு சந்தியாசியெனப் போற்றுட வீற்றிருப்பான்

அங்காரகன் சூயுயன் சந்திரன் இம்மூவர்களும் கூடிப் பத்தாம் பாவத்திலிருந்தால் சந்நியாசியாவன் புதனும் சூரியனும் உச்சமாகி சுக்கிரன் பன்னிரெண்டிள்ம் சனிதனியனாகவும் சுக்கிரனைப் பார்த்தாலும் ஜெனனகால முதல் மரணமாகும் வரை ஜாதகன் சந்நியாசியாகவே இருப்பான்.

இலக்கினாதிபதி பத்தாமிடத்திலிருக்க அல்லது பத்துக்குடையோன் இவர்களுடன் கூடி சுய சம்பாத்தியம் செய்து தர்ம முதலான காரியங்கள் செய்வான்.

பத்துக்குடையோனும் இலக்கினாதிபனும் சூரியனும் கூடினால் தனக்கு தாழ்ந்த ஜாதியாரின் பொருள் அளித்து கர்மங்கள் செய்வான்.

ராகும் குளிகனும் கர்மத்திலிருக்க அஷ்டமாதிபதி யுடனே ராகுகூட ஒன்பதாமிடத்துக் குடையோன் நீச்ச மடைந்து இருந்தால் ஜாதகன் அரசர்களால் தண்டிக்கப் பட்டுத் தண்டனை அடைவான்.

பத்தாம் பாவம் முடிவு

## பதினோறாம் பாவம் (102)ம் ஆயுதகாலம்

வியமாறு எட்டாமதிபதிகள்
மேவினாலுந்தனியேனும்
நயமாய் பாவத்து நிற்பவர்
நண்ணிற் பாக்கிலாபமில்லை
சுப லாபாயச்சனுமாய்
சுபர்மத்தியிலே தானிருக்க
சுயலாபத்திற் சுபரிருக்கச்
சாரும் லாபந் திரளாக

தனம் கியாதி நல்லதீரம் தீர்க்காரின் இவற்றைப் பார்க்க பதினோறாம் பாவத்திலுள்ள சூரியாதி முதலிய நவக்கிரகங் களைக் கொண்டு அறியவும்.

உச்சம் மித்திர சொட்தேத்திர கிரகங்களாலும் அறிய வும் பதினோறாம் பாவத்தில் சுபக்கிரகங்களிருந்தால் ஜாத கன் தீர்க்காயுள் தனம், புத்தி இவற்றில் மிகுந்திருப்பான் குரூரமான கெட்ட கிரகங்கள் தன் உச்ச மித்திர அதிமித்தி ரர்களாகி தன் சுயக்ஷேத்திரங்களிலிருந்தால் ஜாதகன் சேர்த்து வைத்த பணம் நல்ல வேலைகளில் செலவு செய்து கியாதியுள்ளவனாக இருப்பான் சகலரும் போற்றுவார்கள்.

12 6, 8-ம் அதிபர்கள் சேர்ந்திருந்தாலும் தனித்திருந் தாலும் 11-ம் பாவத்திலிருந்தாலும் பாவக்கிரகங்களிலிருந் தாலும் அவர்கள் பார்த்தாலும் லாபமில்லை இலாபாதிபதி

உச்சனாக இருந்து சுபகிரகங்களின் மத்தியிலிருந்தாலும் இலாபாத்தில் சுபர்களிருந்தாலும் அளவுக்கு மீறி இலாபமுண்டாகும்,

லபாதிபதி உச்சத்திலிருந்தும் லாபஸ்தானத்திலிருந்தாலும் ஜென்மலக்கினத்தில் லக்கினாதிபதியுடன் லாபஸ்தானாதிபதியாகிய சுக்கிரன் புதன் இவர்கள் கூடியிருந்தாலும் மிகுதியான லாபத்தை கொடும்பான் இலாபாதிபதி யிருந்த வீட்டிற்குடையோன் கேந்திரஸ்தானத்திலிருக்க அவனை மித்துருக் கிரகங்கள் பார்க்க மிகுதியான இலாபத்தை அடைவான்.

சூரியன் பதினோராம் பாவந்திலிருந்தால் ஜாதகன் சகலராலும் போற்லப்படுவான்.

சந்திரன் பதினோராம் பாவத்திலிருந்தால் வெகுபுத்திரர்களும் தீர்க்காயுளும் அனேக வேலையாட்களை வைத்து வேலை நடத்தும் மனிதனாக இருப்பான் அவனால் தனவந்தனாவான்.

செவ்வாய் பதினோராம் பாவத்திலிருந்தால் ஜாதகன் பலிஷடன் சோம்பலில்லாதவன் நல்ல விஷயங்களில் ஊக்கமுடையவன் ஜாதகனுக்குத் தன்மனைவியுடன் வேறு ஸ்திரீ சேர்க்கையுமுடையவன் ஜாதகன் நல்ல அழகுள்ளவன்.

புதன் பதினோராம் பாவத்திலிருந்தால் ஜாதகனுக்குப் பலவிதமான தொழில் மூலமாக பணம் வரவு மிகுதியாகும் வம்சவிர்த்தியுடையவன் வண்டி வாகனாதிகளுண்டாகும்,

பதினோராம் பாவத்தில் வியாழனிருந்தால் ஜாதகன் தீர்க்காயுளுடையவன் கல்வி ஞானம் இல்லாதவன் தனது குடும்பத்தில் சந்தவிர்த்தியும் இராது ஜனம் பந்துசேர்க்கையுடையவன்.

பதினோராம் பாவத்தில் சுக்கிரனிருந்தால் தனம் வித்தை பூமிலாபம் தொழில் விர்த்தி வாகனம் ஆதாயமிகுதி இவைகளுண்டாகும்.

பதினோராம் பாவத்தில் சனியிருந்தால் பூமிலாபமுண்டு அரசர்களால் கியாதியுண்டு கல்விகுறைவாக இருந்தாலும் புத்தியுடையவன் போகபாக்கியமுடையவன் தானியம்முதலியவைகள் பூமி மூலமாக வரவு கிடைக்கும்.

பதினோராம் பாவத்தில் ராகு, கேது இவர்களிருந்தால் ஜாதகனுக்கு காது நோயுண்டாகும் பண்டிதனாவான் புத்திரர்கள் மிகுதி தனதான்யம் விருத்தியுண்டாகும் பதினோராம் இடத்திற்கு அதிபன் நட்பு. ஆட்சி உச்சம் இந்த ராசிகளிலிருந்தாலும் பார்த்தாலும், ஜாதகன் எத்தொழிலைச் செய்தாலும் விர்த்தியுண்டாகும் சமர்த்தன்.

பதினோராமிடத்திற்கு அதிபன் நான்கிலிருந்து நாலுக்கதிபன் இலக்கினாதிபதியுடன இருந்து சுபக்கிரகங்களால் பார்த்தாலும் அல்லது கூடினாலும் இவனுடைய திசை நடக்கும் பொழுது ஜாதகன் புதையலெடுப்பான்.

ஐந்து ஒன்பது இந்த ஸ்தானத்தில் அங்காரகனிருந்தால் இவன் திசை நடக்கும் காலத்திலும் புத்தி சித்திரங்களிலும் ஜாதகனுடைய தந்தைக்கும் தன் புத்திரனுக்கும் தோஷமுண்டு பல உஷ்ண சம்மந்தன பிராணியையும், கொடுப்பான்.

பதினோராம் பாவத்தில் சூரியனும், புதன், குரு ராகு இவர்கள் கூடி லாபஸ்தானாதிபதியுடன் இருந்தாலும் அல்லது இவர்களைச் சுபக்கிரகங்கள் பார்த்தாலும் ஜாதகன் தன்னுடைய குடும்பத்தில் ஆடு மாடுகள் உண்டாகும் ராகு குளிகனுடன் கூடி இருந்தால் நாய் பன்றி முதலிய பல மிருகங்களுண்டாகும்.

தேய்பிறைச் சந்திரன் பதினோராம் பாவத்தில் அங்காரகனுடன் அல்லது நான்காமிடத்தில் இருக்க இவர்களைச் சூரியன் பார்த்தாலும் கூடி இருந்தாலும் ஜாதகன் மரத்தின் மேலேறி விழுந்து உயிர் துறப்பான் ஆனால் ஆயுள்காரகனாகிய சனி பார்த்தால் ஜாதகன ஊனமாவான்

பதினோராம் பாவாதிபதி லக்கினாதிபதியுடன் இருந்து அவன் பார்த்தால் ஜாதகனுககுத் தீர்க்காயுளுமுண்டு

பதினோராம் பாவாதிபதியாகிய சூரியன் சந்திரன் கூடியிருந்தாலும் சந்திரனால் பார்க்கப்பட்டாலும்ஜாதகன் அரசபதவியை அடைவான்

பதினோராம் இடத்தில் 6, 8, 12 இந்த இடத்திற்குடையவர்கள் திரிகோண கேந்திரஸ்தானத்தில் நின்றாலும்

பார்த்தாலும் யாதொரு தொழில் செய்தாலும் லாபமில்லை.

இலாபஸ்தானாதிபதி தன்சுய க்ஷேத்திரத்திலேயே இருக்க வியாழன் கேந்திர திரிகோண ஸ்தானத்திலிருந்தாலும் லாபஸ்தானாதிபதி கேந்திர திரிகோணம் பெற்றிருந்தாலும் மிகுந்த தனவந்தனாவான்.

சோதிட களஞ்சியத்தில் கூறுகிறது

உண்டாம் லாபாதி பனிருந்ததிக்கில்
பலன்களுரை செய்வோம்
கண்டாமரை நண்பன் கிழக்கு
தருஞ்சுக்கிரஞ்சு அக்கினிமூலை
கண்டாய் குஜன் தெநகார மூலை
காரிமேற்கூச் சிவாயு
கொண்டேயிருக்கும் புதன்வடக்கு
குரு ஈசானங்கொண்டுவரும்

பதினோராம் பாவத்தில் இலாபதிபதி இருந்த ஸ்தானத்தில் பலாபலன்களை ஆராயும் பொழுது கிழக்கில் சூரியனும் அக்கினிமூலையில் சுக்கிரனும் தெற்கில் அங்காரகனும் நிருதியில் (நடுவில்) ராகுவும் மேற்கில் சனியும் வாயு மூலையில் சந்திரனும் வடக்கு மூலையில் புதனும் ஈசான் மூலையில் குருவும் இருந்தால் ஜாதகனுக்கு எல்லாத் தொழிலும் நல்ல லாபம் கிடைக்கும்.

லாபாதிபதியான சந்திரனைக் குரு பார்த்தாலும் அல்லது லாபாதிபதியாருடைய வீட்டிலிருந்தாலும் அவரவர்களுக்கு அதிலாபமுண்டாகும் அல்லது ஜென்மாதிபதி லாபஸ்தானத்திலிருந்தாலும் பார்க்கப்பட்டாலும் எத்தொழில் செய்தாலும் நிலம், பூமி, முதலியவைகளிலிருந்து நவதான்யம் விளைச்சலும் தக்க பலனைத் தரும்.

பதினோராம் பாவம் முடிவு

---

### பன்னிரெண்டாம் பாவம்

## சோதிட களஞ்சியத்தில் கூறுகிறது

கூறிய விடத்திற் காரி சனிகதிர்
மதிகுரு சேய் வெள்ளி
ஏறிடில் குழலியன்னை
பிதாமகன் துணைவரில்லான்
ஆறுபேர்க்கயாட்டமப்
பதி சர மேற்றிதாம்
மாறிலா அவர் வீடுச்ச

பன்னிரண்டாம் பாவத்தில் சனி, சூரியன் சந்திரன் வியாழன் செர்வ்வாய், இருந்தால் மாதா பிதா சகோதரர்கள் மனைவி இவ்வாறு பேர்களுக்கும் அரிட்டமாம் அவர்களிருந்த வீடு சாரராசியானால் கெடுதலே யுண்டாகும், அவ் வீடு உச்சமானால் நன்மையுண்டு

ஜாதகனுக்கு தீர்க்க புத்தி அங்கவீனம், குருடு அல்லது அக்கியானம் நீச்சருடைய உறவு செய்கை, மூர்க்கத்தனம் தனம் முதலியவற்றை உச்சம் பகை, மித்துரு சுய க்ஷேத்திரம் முதலியவைகளைப் பன்னிரண்டாம் பாவத்திலுள்ள, கிரகாதிபதிகளைக் கொண்டுதெரிந்து கொள்ளவும்.

பன்னிரண்டாம் பரவத்தில் சூரியனிருந்தால் ஜாதகன் தன் மனைவி சொற்படி தவறமாட்டான் சரீரம், வயறு சற்று பெரிதாக இருக்கும் விதவை ஸ்ரீ நட்புடையவன் திருட்டு குணம் படைத்தவன், கண்நோயினால் அடிக்கடி துயருவான். செலவு அதிகமாக இருக்கும் தன் பிதாவுக்குத் தோஷமுண்டு, ஜாதகன் தன் தந்தையுடன் விரோதமாக வேயிருந்து காலங்கழிப்பான்.

பன்னிரண்டாமிடத்தில் சந்திரனிருந்தால் ஜாதகன் துர்ப் போதனை துர்நடத்தை ஸ்திரிரோகம், திரேகவூனம் மந்திராதி பதியுடன் நட்பு, தந்திரகுணமுள்ளவன், அன்னியநாடு கற்றித்திரிவான், தரித்திரகுணமுள்ளவன்.

பன்னிரண்டாம் பாவத்தில் அங்காரனிருந்தால், தனலாபம் வாதசீரம், சத்துருக்கள் சொற்ப புத்திரர்கள் களத்திரபீடை சகோதர தோஷப், மதுபானப்பிரியன் நீச்சருடைய நட்புடையவன். ஆனால் செவ்வாய் தன் சொட்க்ஷேத்திரத்தில் சுபர்களுடன் கூடி ஆட்சி பெற்றிருந்தால் ஜாதகன் சற்று நல்லவழில் திருத்தி, நல்ல நடத்தையுடையவனாக வாழ்வான்.

பன்னிரண்டாம் பாவத்தில் புதனிருந்தால், ஞானவான் பலவிதமான யோசனையை யுடையவன். சூரியபுத்தியுடையவன். அன்னியர்களுடைய வீட்டில் கஞ்சாரம் செய்பவன் காமவிகாரமுடையவன். மாதுருபீடைபந்துக்கள் விரோதமுண்டு எப்போதும் கடன்காரனாக இருப்பான்.

பன்னிரண்டாம் பாவத்தில் குரு இருந்தால் தன் மனைவியின் புத்தியைக் கேட்டு நடக்கக் கூடியவன் தயவில்லாதவன் அன்னிய நாடு வாசமுடையவன்.

பன்னிரண்டாம் பாவத்தில் சுக்கிரனிருந்தால், பந்து ஜன விரோதி தனவந்தன்.

பன்னிரண்டாம் பவேத்தில் சுக்கிரனிருந்தால் ஜாதகன் எக்காரியத்தையும் சாமர்த்தியத்துடன் சாதிக்ககூடியவல்லமை யுடையவள்.

பன்னிரண்டாம் பாவத்தில், ராகு கேது இவர்களிருந்தால் நேத்திரயோகம், கண்ணில் பூ உணடாகுதல் புத்திர தோஷமுடையவன் அற்ப ஆயுளுடையவன்,

பன்னிரண்டில் சந்திரனிருக்க அங்காரகன் ஏழில்நிற்க இரண்டில் சூரினிருந்தால் ஜாதகன் அடிக்கடி உஷ்ண சம்மதமான வியாதியினால் துன்படைவான்.

இலக்கினத்திற் 7 8-ல் சூரியனுடைய வீட்டில் சந்திரனும் சத்தினுடைய வீட்டில் சூரியனும் பத்தாமிடத்திற்கு அதிபனும் சேர்ந்திருந்தால், ஜாதகன் பதினாறு வயது முதல் ஆயுள் பரியந்தம் நரவாகன ஏறுவான் நடுவயதில் தன் மதம் விட்டு வேறு மதம் மாறுவான்.

இலக்கினாதிபதியும் சந்திரனும் ஒருவர்க்கொருவர் பார்க்காவிடில், தாயும் பிள்ளையும் எக்காலத்திலும் அடிக்கடி விரோதமாகவே இருந்து வாழ்வார்கள்.

### சோதிடக் களஞ்சியம் கூறுகிறது

வஞ்சயே பத்ததிபதி பாவனாம்
விஞ்சியே பலனன்றி வியத்துறில்
அஞ்சியைம்ப தாம் வயதாவன்
தஞ்சமான தனங்கள் வழுவுமே

பத்துக்குடையோன் பாவியாகி பலனற்றுப் பன்னிரண்டாம் பாவத்திலிருந்தால், ஜாதகனுடைய ஐம்பதாவது வயதில் அவனுடைய செல்வங்கள் அழிந்துபோகும்.

### பன்னிரண்டாம் பாவம் முற்றிற்று

---

பொதுவிதி மொத்தம் பாவமென்பது கீழ் கண்டவாறு பன்னிரண்டு பாவங்களுக்கும் குறிக்கப்பட்டிருக்கிறது. இது உள்பாவப் பிரிவு பன்னிரண்டு.

| நெ. | இலக்கின பாவம் | நெ. | இரண்டாம் பாவம் |
|---|---|---|---|
| 1 | நிறம் | 1 | குடும்பம் |
| 2 | தேகம் | 2 | தனம் |
| 3 | சிரசுவாதம் | 3 | நேத்திரம் |
| 4 | 5, புலன் பொறி | 4 | வித்தை |
| 5 | நினைப்பு | 5 | பூ. செல்வம் |
| 6 | கிலேசம் | 6 | வாக்கு, சத்தியம் |
| 7 | கீர்த்தி கமனம் | 7 | சாஸ்திரம் பரிசயம் |
| 8 | கடவுள் வணக்கம் | 8 | கவனம் |
| 9 | சுபமங்களம் | 9 | உத்தேசம் |
| 10 | சந்தோஷம் | 10 | பொற்பணம் |
| 11 | வயது | 11 | நவரத்தினம் |
| 12 | நாளாவது ஜன்மம் | 12 | யோக விஷயம் |

| நெ. | மூன்றாம் பாவம் | நெ. | நான்காம் பாவம் |
|---|---|---|---|
| 1 | போகம் | 1 | மாதுரு விஷயம் |
| 2 | அடிமையாள் | 2 | வித்தை (கல்வி) |
| 3 | காணவித்தை | 3 | வாகனம் |
| 4 | வீரியதைரியம் | 4 | சுபம் |
| 5 | சகோதரம் | 5 | வியாபாரம் |
| 6 | கர்ன நோய் | 6 | இல்லிடம் (வீடு) |
| 7 | கடுக்கன் ஆபரணம் | 7 | ஜய மன்மை |
| 8 | போஜனப்பாத்திரம் | 8 | சுகசௌக்கியம் |
| 9 | தெய்வபக்தி | 9 | நிக்ஷேபம் |
| 10 | ஜயம் பெறுதல் | 10 | பரவிஷயம் |
| 11 | ஆயுள் | 11 | பாலுள்ள, பசுமாடு |
| 12 | கடன் | 12 | தேவஸ்தானம் கமனம் |

| நெ. ஐந்தாம் பாவம் | நெ. ஆறாம் பாவம் |
|---|---|
| 1 தாய்ப்பாட்டன் | 1 வியாதி |
| 2 தாய்மாமன் | 2 பீடை |
| 3 பூர்வபுண்யம் | 3 ஆயுத விதரணம் |
| 4 தமிழ் வித்வான் | 4 சத்துரு |
| 5 புத்திரர்கள் [சாகித்யம் | 5 ஜலகண்டம் |
| 6. கர்ப்பம் | 6 ஞாயவிரோதம் |
| 7 வித்தைமந்திரம் | 7 தேகவாதை மரண வாதை] |
| 8 விதரணம் | 8 ரெணம் |
| 9 புத்தி | 9 கள்ளர்பயம் |
| 10 சகோதரம் | 10 பெண்ரோகம் |
| 11 மேல்வரும் ஜென்மம் | 11 விஷபாதை |
| 12 யோகப்பியாசசாதனம் | 12 இறைகள் |

| நெ. ஏழாம் பாவம் | நெ. எட்டாம் பாவம் |
|---|---|
| 1 பந்து ஜனக்கூட்டம் | 1 யுத்தக்கள மரணம் |
| 2 கமணத்துவம் பச்சிமதி | 2 கூட்டத்தால் பீடை |
| 3 களத்திரம் | 3 பொருப்பு உயரத்தின் [மேல் இருந்து விழுதல் |
| 4 கலியாணம் | 4 நீண்ட வியாதி |
| 5 விவாத வாச்சியம் | 5 முயற்சி கெடுதல் |
| 6 புத்திரராவது. பின் [மனைவியின் கிரியை | 6 கிலேசரொணம் |
| 7 இராஜ சன்மானம் | 7 கெடுதற் செலவு |
| 8 ஒரு தொழிலுமின்றி (யாவரும் வசியம் | 8 கொலையால் மரணம் |
| 9 வியாபாரம் | 9 பகை |
| 10 பின்தாரம் | 10 விஷபயம் |
| 11 மரணம் | 11 காராக்கிரக பிரவேசம் |
| 12 புத்திர விரோதம் | 12 அபஜயம் |

| நெ. | ஒன்பதாம் பாவம் | நெ. | பத்தாம் பாவம் |
|---|---|---|---|
| 1 | பல புண்ணியங்கள் | 1 | பிதாபலன் |
| 2 | சத்கருமஜீவனம் | 2 | பிதாவின் பொருள்கள் |
| 3 | கிராமபூமிக்ஷேத்திர (லாபம் | 3 | தர்மம் |
| 4 | இரக்கம் தயவு | 4 | பாக்கியம் |
| 5 | மெய்ஞ்ஞான பூஜை | 5 | மடம், சத்திரம், விர்த்தி |
| 6 | மனைவீடு | 6 | பாடசாலை |
| 7 | தெய்வ பக்தி | 7 | திருப்பணி |
| 8 | சவுரியம் | 8 | உபதேசம் |
| 9 | பிரதாப கீர்த்தி | 9 | ஜாதகாதி, அஷ்டமா [சித்தி |
| 10 | கருப்பஷன் | 10 | குளம் தடாகம் பிர திஷ்டை |
| 11 | வஸ்திராபரணம் | 11 | ஞானபதம் |
| 12 | தோசாபீனம் வாசம் | 12 | வணம், கிரி, வாசம் |

| நெ. | பதினோராம் வாசம் | நெ. | பன்னிரண்டாம் பாவம் |
|---|---|---|---|
| 1 | மூத்த சகோதரம் | 1 | பூபிரதக்ஷணம் மலை, [நாடு சஞ்சாரம் |
| 2 | ஷ யோகாபயோகம் | 2 | அன்னிய தேசம் உத் [யோகம் |
| 3 | பாதசாரம் யோகம் | 3 | தன விரயம் |
| 4 | பூமியால் விர்த்தி | 4 | சகல விஷயபோகம் |
| 5 | தண்டிகை வாகனம் | 5 | அசன சயனம் |
| 6 | மனோதுக்க நிவர்த்தி | 6 | விவாதம் ராஜதண்டனை |
| 7 | வஸ்திராபரணம் | 7 | போக சுகம் |
| 8 | நாடகச் சங்கீதத்தொழில் | 8 | மந்திராதி பலவகைத் [தொழில்கள் |
| 9 | இராஜவித்தியாபிரபலம் | 9 | கப்பல் வியாபாரம் |
| 10 | ஞான அறிவு | 10 | கருமானுபவம் |
| 11 | இராஜாங்கலிகித அனு [கூலம் | 11 | புண்ணியதியாகம் |
| 12 | ஜலத்தின் மேற்பிரயா [ணம் | 12 | யாக எக்கியம் |

0-சவ்வியமானால் 1-வது நெம்பர் முதல் தலைகீழாகவும் சவ்வியா அபசவ்வியமானால் 3. 4, 5-வது நெம்பரின் பலனும் கண்டு அறிய வேண்டியது.

## கிரக எண் என்பது கிரகங்களின் கிரணங்கள் என்று பெயர் அல்லது (அதன் விபரம்)

## கிரகங்களின் கதரின் விபரம்

| | |
|---|---|
| சூரியனாகில் | 5-ம் |
| சந்திரனாகில் | 21,, |
| செவ்வாயாகில் | 7,, |
| புதனாகில் | 9,, |
| குருவாகில் | 10,, |
| சுக்கிரனாகில் | 16,, |
| சனியாகில் | 4,, |
| இராகுவாகில் | 4,, |
| கேதுவாகில் | 4,, |
| ஆக மொத்தம் | 80 |

இவ்விதக் கணிதத் தொகையை ஒன்று சேர்த்தும் அவரவர்களின் ஐவகைப் பலன்களைக் கண்டறிந்ததில் எவ்வளவு பலனிருக்கிறதோ அந்தத்தொகையுடன் பெருக்கின அந்தத் தொகையை ஓரிடத்தில் எழுதிக்கொண்டு சுக்கிரனுடன் சனிக்கு (2,7) இடத்திலிருக்கிறவர்கள் அல்லது அவ்வதிபதியுடன் கூடியகிரகங்களின் பலாபலனுக்கிடைத்தபடி மேலே கூறிய கணிதம்படிக்கு கிரகங்களுக்குக் கண்ட தொகைகளை ஒன்று படுத்தி மேலே சொல்லிய ஐவகைப் பலன்களில் வருந்தொகைகளை ஒன்று சேர்த்து மேலே கூறிய கிரக கணித தொகைகளை ஒன்று படுத்திப் பெருக்கிக் கொண்டு இவ்விரண்டு தொகைகளை பெருக்கி 100-ல் கொடுத்துவந்த மிச்சம் ஆயுளென்றும் மேலே பெருக்கிய தொகையை8-ல் கழித்தமிச்சம் எத்தனையோ அத்தனாவது திசையில் ஜாதகனுக்கு ஆயுள் முடிவு என்று தெரிய வேண்டும்.

இத்திசை கணக்கை ஜாதகன் சவ்யமானால் மிச்சமான தொகையை எத்தனையோ அத்தனை திசை என்றும் அபசவ்யமானால் மீந்த தொகை போக 9ல் கழித்த சேஷம் எவ்வளவோ அத்தனையாவது திசையில் மாரகமென்றும் கண்டறிய வேண்டியது மேலேகூறிய வருசமும் இப்படியே

யறிந்து வயதுகாண வேண்டியது அவ்வித திசைகளையும் ஒட்டிக்கொண்டபின் ஈவுத்தொகையை 4-ல் பெருக்கி 12-ல் கழித்த மிச்ச எண்ணை மேஷ முதல் எண்ணிக் கொண்ட இராசியில் ராகு அல்லது கேது வருங்காலம் மாரகமென்றும் மேலே வந்த ஈவைப்பெருக்கி 12-ல் கழித்த மிச்ச இராசியில் குரு வருங்காலமான வருஷத்திலும் வந்த ஈவுத்தொகையை 6ல் பெருக்கி வந்ததை 12ல் கழித்து இராசியில் சூரியன் காலத்தில் மாரகமாகவும் ஈவுத்தொகையை 24-ல் பெருக்கி 1,7ல் கழித்த மிச்சம் நட்சத்திரம் மூன்றாம் ஈவுத்தொகையை 26ல் பெருக்கி 60ல் கழித்த மிச்சம் கடிகை என்றும் மரண காலங் கணிதங்களை அறியவேண்டியது.

இவ்விதமே ஒவ்வொரு இலக்கினங்களுக்குக் கூடிய கிரகங்களை வைத்து இவ்வித கணிதம் செய்து ஆயுள் மரண காலங்கணிதங்கள் செய்யவேண்டியது இதிலும் கிரக பலா பலன்களை மெத்தயூகித்ததின் பேரிலும் உணர்ந்து கணிதஞ் செய்யாவிடில் யாவும் பிறண்டு விடுமென்று அறிய வேண்டியது ஆகையினால் அஸ்திபாரத்தை மிகவும் உணர்ந்து நிதானித்தல் வேண்டும் என்று அறிய வேண்டியது.

இராசி கணித எண்களென்பது கிரகங்கள் கூடி நின்ற இராசி தான் என்று தெரிய வேண்டியது

| | |
|---|---|
| மேஷம் துலாமாகில் | 7-லும் |
| ரிஷபம் சிங்கமாகில் | 10 ,, |
| மிதுனம் விருச்சிகமானால் | 8 ,, |
| கடகமாகில் | 4 ,, |
| கன்னி மகரமாகில் | 5 ,, |
| தனுசுவாகில் | 9 ,, |
| கும்பமாகில் | 10 ,, |

மீனமாகில் 12-னும் பெருக்கி வைத்துக் கொள்ளவும்: மேலே சொல்லிய இராசி கிரக எண்களில் மூலமாய் ஒவ்வொரு பாவப்பலன்களையும் கண்டறிய வேண்டியது

## ஆயுர் பாவகணித நிர்ணயம்

ஆயுள் பாலகணித நிர்ணயமென்பது லக்கினாதிபதிகளாகிய ஒன்றாம் இடத்திற்கதிபதியும் எட்டாமிடத்திற்கதிபதியும் ஒன்பதாமிடத்திற் கதிபதியும் பத்தாமிடத்திற்கதி சனிக்கு அஷ்டமாதிபதியும் இவர்களை அறிவவற்கு முன்னமே ஒவ்வொரு பாவங்களுக்கும் ஜீவசரீர கற்பனைசெய்து கொண்டவர்களுக்கு ஸ்தான பலன் பஞ்சு பலன் கேந்திர பலன் திருஷ்டிப்பலன் சம்மந்தபலன் இந்த ஐந்து வகைப்

18.

பலன்களையும் சுபாகப்படிக்குக் கண்டறிந்தும் சுபபலன் க்ளை மாத்திரம் எடுந்து அவரவர்களின் பலனுக்கிசைந்த எண்களாக இராசிஎண்களைப்பெருக்கியும்ஜீவசரீரங்களுக்கும் தனித்தனிக்கூடிய கிரக முதலிய பலனால் வந்த சுப எண்களை யெடுத்துக் கொண்டு சரீரத்துக்கு எடுத்த பின் ஜீவனுக்கு எடுத்துக்கொண்ட எண்ணை ஜீவனம் அதிகமக சரீர என்று அதிகமா என்று அறிந்திடில் ஜீவனதிகமும் சரீர அற்பமு மானால் சரீரகாப்பாற்றுதலகிகத்தின் மேல்வுதியைத் தள்ளும் ஆயுளையுடையவன் அவை சுக்கிலபக்ஷசவ்யத்துக்கும் அபசவ்யமானால் மறு ஜென்மமுண்டு சவ்ய அபசவ்யமானால் முழு ஜென்மத்தில் பாதிவயதான படியால் இந்த ஜென்மத்தில் வயதிலேயே முடிவாகும் பூர்ண அபசவ்யமானால் பால்யத்திலேயே ஆயுள் முடிவாகும்.

இவ்விதங் கண்டறிந்தால் கிருஷ்ணபக்ஷத்துக்கு இறையே மாறிப்பார்த்துக் கொள்ள வேண்டியது மேலே கண்ட ஜீவசரீர எண்களை ஓரிடத்தில் குறிப்பிட்டு எழுதிக்கொண்டும் முன் எழுதிய லக்கினாதிபதி ஸ்தானத்திலும் உரியகிரகங்களுக்கு மேலே சொல்லிப ஸ்தானாதி ஐவகைப் பலன்களில் தனித்தனி ஒவ்வொரு கிரகங்களுக்கும் உண்டான சுபாசுப பலன்களை யெடுத்துக்கொண்டு அவரவர்களின் எண்களை அந்தந்த ராசி எண்களால் பெருக்கிக் கணக்கிட்ட ஜீவத் தொகையால் பெருக்கிச் சரீரத் தொகையால் அறிந்தால் ஆயுளென்றும் கண்டறிய வேண்டும் வந்த மீதியை 7ல் பெருக்கி 12-ல் கழித்து வந்த மீதி மாதமொன்றும் வந்த மீதியை 27-ல் பெருக்கி 60 கழித்து வந்த மீதிதான் என்றும் இவைகளை எல்லாம் சவ்யம் 4-ன் மூலமாகக் கண்டு தெரிந்து கொள்ள வேண்டியது.

விசேஷ. ஆயுர்தாய கணிதங்களென்பது ரிஷபம் கடகம் துலாம் மீனம் இந்த நான்கு இலக்கினங்களிலுள்ளவர்களுக்கு சவ்வியமானால் சாதகமாகியும்அபசவ்வியமானால் கணிதங்கண்டு சுபக்கிரகங்களின் இடமும் அவைகளின் பார்வையும் இருக்கும் இடம் உச்சமா ஆட்சியா பகையா எனத்தெரிந்து கொள்ள வேண்டியது.

குரு சுவர் ஸ்தானத்தில் இருந்தால் ஸ்தானபலன் கேந்திர பலம் பஞ்சமபலம் திருஷ்டிபலம் சம்மந்தபலம் அவ்வை துஸ்தானங்களிலும் குருசுபர்கள் வீட்டில் இருக்கிறாரா இல்லையா என்று பார்த்தபிறகே ஆயுர்தாயகணிதம் செய்யவேண்டியது இதுதான் நல்ல முறையாகும் சுக்கிரன்
ப

ஐந்துக் குட்பட்டதாயின் சகஸ்திர வருடந்துருவமும் 34 குள்ளதாகில் சதவருடத்துருவமும் என்றும் சந்திரன் 5க்குட் பட்ட பலனாகில் சதவருடத்துருவமும் 8க்குள் பட்டதாகில் தசவருடக்கணிதத்துருவம் என்றும்பலன் அறியவேண்டியது

புதனாகில் 5, பலனானால் தசவருடக் கணிசத்த துரு வம் என்றும் 8-க்கு கீழ்திரி வருடக் கணிதத்துருவம் என்றும் 1,8,9,10, இவ்வித நான்கு ஸ்தானாதிபர்களும் பூர்ண ஏற் பட்ட சுபாசுப பலன்களில் இராசி எண்ணால் பெருக்கி மேலே சொல்லிய ஸ்தானங்களில் உள்ள பலாபலன்களை சொல்ல வேண்டியது ஆயுள் பாவத்திற்கு இவ்விதமே 12 பாவங்களையும் நிச்சயம் செய்து கொண்டு சுபாசுப பலன் களை மட்டும் டுந்துக்கூற வேண்டியது.

மனைவி சகோதரர்கள் புத்திரர்கள் இவர்களின் கணி தம் நிச்சயம் செய்யும் முறை அந்தந்த இடங்களிலுள்ள பாவக்கிரகங்களுக்கும் பாவர்கள் இருந்தஇடத்திற்கும் இந்த விதமாக பாவக்கிரகங்கள் எந்த வீட்டில் இருக்கின்றார் களோ அந்தக்கிரகமே இராசி ஜீவன் என்றும் பாவக்கிரகங் கள் இருந்தவீடு ஜீவசரீர மென்றும் பெயர் அவரவர் ராசிக் குறிய எண்களால் பெருக்கி அந்த எண்களிற் கொடுத்த மீதி பாவ சம்மந்தமான ராசிகளிற் சேர்ந்து பகை நீச்சம் இந்த வீடுகளில் இருந்தால் நல்ல பலனைக் கொடுக்கமாட் டார்கள் ஒவ்வொரு கிரகங்களின் தொகைகளைக் கண்டு தெரிந்து அதிலிருந்து கிடைத்த மீதி எண் அந்தந்த பாவாதிபர்களுக்கும் சுபர்களுக்கும் தெரிந்தால் ஜாதகனு டைய எவ்வளவு பலமுள்ளதாகவும் அவன் எத்தனை வரு டம் கல்ல வாழ்வு நடத்தி ஜீவித்து வருவான் என்பது நன்கு புலப்படும் இது போலவே ஸ்திரீ புருஷ கிரகங்களைக் கண்டறிந்து பலன் கூறவேண்டும்.

## பீமகவி; பாரிஜாதபரிகணத்திலும் கூறுகிறது

கெண்டாந்ததோஷமசு விக்கிலாட்டமாகும்
கேட்டையந்த தனக்கொன்றாகும் மாதுக்கோ
(ரெட்டாகும்

தண்டார் சித்திரை மூலம் நாலாண்தாகும்
சாற்றிய வாயில்யம் வருடமிரண்டென்பார்
கண்டாருத்திரவாத இரண்டாகும் பூசம்
கருது திங்கள் மூன்றாகும் பூராடந்தனக்கே
கொண்டாடு மாதமொன்பான் தன்னிலே பிறந்தோர்க்கு
கொடிதாகுமரிட்ட மெனக்கூறினர் கற்றுணர்ந்தோர்

இக்கவியினில் அசுவனி ஆயில்யம் மகம் கேட்டை மூலம் ரேவதி இந்த நட்சத்திரங்களிலும் சந்திகளிலும் மத்தியிலும் ஜெனனமான குழந்தையினுடைய தந்தைக்கு அரிஷ்டமாம் இதற்கு ஜெபமந்திரம் நவக்கிரகபூசைசெய்துவருவது நலம்.

இதுவல்லாமல் உத்திரம் அனுஷம் முதற்பாகத்திலும் உத்திராடம். ரேவதி இரண்டாம் பாதத்திலும் ஆயில்யம் பூராடம் மூன்றாம் பாதத்திலும் அவிட்டம் நான்காம் பாதத்திலும் பிதுர்க் குழந்தையின் தந்தைக்கும் பூசம், ஆயில்யத் மகம் சித்திரை, பூரடம் உத்திராடம். ரேவதி முதற்பாகம் திலும் உத்திரம் விசாகம் இரணடாம் பாதத்திலும் மூலம் நான்காம் பாமத்திலும் ஜெனித்த குழந்தையின் தாய்க்கும் பூசம் தித்திரை பூராடம் மூன்றாம் பாதத்திலும் ஜெனித்த குழந்தைக்கும் கெண்டம் என்றும் சதயம் பூரட்டாதி முதற்பாதத்திலும் மகம் இரண்டாம் பாதத்திலும் அனுஷம் மூலம் மூன்றா பாதத்திலும் பூராடம் நான்காம் பாதத்திலும் குழந்தையின் தாய் மாமனுக்கு அரிஷ்டமாம், மகம் உத்திரம் மூலம், முதற்பாகத்திலும் கேட்டை நான்காம் பாவத்திலும்குழந்தையின் தாயைப்பெற்றதந்தைக்கும் (பாட்டன்)

சித்திரையின் முதற்பாதத்திலும் விசாகம் அனுஷம் மூலம்நான்காம் பாதத்திலும் ஜெனித்த குழந்தையின் பாட்டன் பாட்டிக்கும் அரிஷ்டம் ஆயில்யம் இரண்டாம் பாதத்தில் ஜெனித்த சிசுவின் மூத்தவனுக்கும் (அண்ணன்) மூலம் முதற் பாதத்தில் ஜெனித்த குழந்தையின் சிறிய தகப்பனாருக்கும் தோஷமுண்டு என்று கூறவும்

| | |
|---|---|
| அசுவனி<br>மகம்<br>மூலம் | 1-ல் குழந்தைக்கு தோஷம் |
| அசுவனி<br>மகம்<br>மூலம் | 2-ல் மாதாவுக்கும் தோஷம் |
| | 3-ல் புத்திரதோஷம் |
| ,,<br>ஷை | |
| | 4-ல் நன்மையுண்டாகும் |
| ,,<br>ஷை | |

## சோதிடக் களஞ்சியத்தில் கூறுகிறது

தேறுங்கேட்டையொன்றாகிற்றாய் பாட்டியும்
செப்பிரன் டிலிற்றாய் பாட்டன் மூன்றினிற்
கூறுமாமன் நாலைந்தினிற் மைந்தர்போம்
குலவுமாறிற் பொருட்சேதம் ஏழினில்
மீறுவங்கிஷஞ்சேதமா மெட்டினில்
மிக்கமூத் தமக்கைமரிக்குமே
சீறுமொன் பதிற்பாரியின் தந்தைநாசம்
செய்யபத்தாறிற் சகலமும் தந்தையே என்பதாம்

கேட்டை நட்சத்திரம் ஆதியந்தபரம நாழிகை 60ஐயும் பத்து பங்கு செய்தால் பங்கு ஒன்றுக்கு 6 நாழிகை ஆகின்றது அதில்.

## குழந்தையினுடைய ஜெனனம்

| | | |
|---|---|---|
| 1— | முதற்பங்கானால் | தாயைப்பெற்ற பாட்டியும் |
| 2— | ,, | தாயைப்பெற்ற பாட்டனும் |
| 3— | ,, | தாய்மாமனும் |
| 4— | ,, | தாயும் |
| 5— | ,, | குழந்தையும் |
| 6— | ,, | வம்சத்தையும் பொருளையும் |
| 7— | ,, | இருவர் வம்சத்தையும் |

8— " மூத்த சகோதரர்களையும்
8— " பெண்கொடுத்த மாமனையும்
10— " தன் தந்தையும் சகலத்தையும்
(நாசம் செய்யும்

இந்தக் கண்டத்திற்கும் பரிகாரம் ஸ்ரீ பார்வதி தேவிக்கு அபிஷேகம் செய்து தீபம் ஏற்றி அர்ச்சனை செய்வதுமிகவும் உத்தமம்.

சோதிட களஞ்சியத்தில் கூறுகிறது

சாற்றுமாயிலியம் முதற்கால் நலம்
தனமாறும் ரெண்டின் மூன்றிற்றாய் தந்தைகால்
ஏற்றரேவதி நாற்காலிற் தந்தைநோய்
இனியவுத்திரம் முன் காற்பிதாவும்
தேற்றுங்கௌவை பரணீகான் முன்றினிற்
செய்யவான் பிதா பெண் பெற்றிறாற்நோய்
போற்றுங்கற்கோட்கள் நோக்கிடிற்கேடில்லை
புனிதர் நந்தொடுக் காடர்புரிந்ததே

ஆயில்யம் முதற்பாதமானால் யாவருக்கும் நன்மை இரண்டாம் பாதமானால் பணக்கஷ்டம் மூன்றாம் பாதமானால் மாதுர்கண்டம் நான்காம் பாதமானால் பிதுர்கண்டம் என்று அறிய வேண்டியது.

ஆயில்யம், பரணி மூன்றாம்பாதம் பெண் ஜெனனமானால் மாதுர்கண்டம் மூன்றாம் ஆண் ஜெனனமானால் பிதுர் கண்டம் மூல நட்சத்திரம் ஆதியந்தமான பரம நாழிகை 60யும் 42 பாகம் செய்தோமானால் பங்கு 1க்கு 5 நாழிகை ஆகிறது.

1—முதற்பங்கானால் தந்தைக்குத்தோஷம்
2— " தாய்க்குத்தோஷம்
3— " தனயனாருக்குத்தோஷம்
4— " தமக்கையாருக்குத்தோஷம்
5— " மாமனாருக்குத்தோஷம்
6— " சிறிய தந்தை பெரியதந்தை
(இவர்களுக்குத் தோஷம்

ஏழாம்பங்கானால்-சிறியதயார் பெரியதாயார் இவர்
(களுக்குத்தோஷம்

எட்டாம் பங்கானால்-சம்பத்துக்கும்
ஒன்பதாம் பங்கானால்-குழந்தைக்கும்
பத்தாம் பங்கானால்-தரித்திரம்
பதினோரரம்பங்கானால்-இராச்சியம் புதன் இருப்பிடம்
பன்னிரெண்டாம் பங்கானால் நல்ல சம்பந்தையுண்
(டாக்கும்

பூசம், பூராடம், முதற்பாகம் தந்தைக்கும்
,, ,, 2ம் பாதம் தாயாருக்கும்
,, ,, 3ம் பாதம் தாய்மாமனுக்கும்
,, ,, 4ம் பாதம் பிறந்த குழந்தைக்கும்
(தோஷமுண்டு

பரணி கார்த்திகை திருவாதிரை மகம் பூரம் விருச்சிகம் இந்த நட்சத்திரங்கள் ஒன்றில் நான்காம்பாதம் முதலில் ஐந்து நாழிகை வரையில் மாதுரு கண்டமெண்று அறியவும்

| | | |
|---|---|---|
| உத்திரம் | முதற்பாகம் | பிதுர்கண்டம் |
| அசுவனி | | |
| ஆயில்யம் | நான்காம் பாதம் | |
| ரேவதி | | |

சித்திரை முதற்பாதத்திலும் இரண்டாம் பாதத்திலும் பூசம் இரண்டாம் பாதத்திலும் பெண் பிறந்தால் மாதுர் கண்டம்

உத்திரம் இரண்டாம் பாதத்திலும் பூராடம்மூன்றாம் பாதத்திலும் ஆண்குழந்தை ஜெனனமால் பிதுர்கண்டம் என்று அறியவும்

## வெண்பா

பூராடம் முக்காலும் பூசத்திடையிரண்டும் சிராகச்சித்தி
ரையிற் செல்வரையும் நேராக
உத்திரத்துக்காலும் உயிரிழப்பர் தந்தையாய்
புத்திரனைப் பெற்றெடுத்தபோது

ரோகணி மாமனுக்காகாது ஆயில்யம் மூலம் மாமிக்காது.
விசாகம் மைத்துனனுக்காகது கேட்டைதமையனுக்காகாது

✽ குறுப்பு:-இப்பஸ்ககம் முதற்பாகத்தில் 79-ம் பக்கத்தில் குழந்தை ஜெனன காலத்தில் கண்டம் கொடுக்கும் நட்சத்திரங்கள் என்று எழுதியதில் தெளிவான முறையில் எழுதாமல் சில நட்சத்திரங்களின் பாதபலன் தவறி இருப்பதினால் இரண்டாம் பாகத்தில் குழ்ந்தையின் ஜெனனகாலம் நன்றாக புரியும் படி எழுதப்பட்டிருக்கிறது இதன் விபரம் அறியவும்.

அஸ்தம், பரணி:—மூன்றாம் பாதமாகில் இரவில் குழந்தை பிறந்தால் மாதுர் கண்டம்,

ஆயில்யம், கேட்டை, ரேவதி:-4-ம் பாதமாகில் இரவிற்குழந்தைபிறந்தால் பிதுர்கண்டம் சந்ததியானால் குழந்தைக்குக் கண்டம்.

அசுபதி. மகம், மூலம், கார்த்திகை. உத்திரம், உத்திராடம் பூசம் பூராடம் சித்திரை:-இந்த ஒன்பது நட்சத்திரங்களில் எந்த நட்சத்திரமாகிலும் முதற்பாகமாகில் இரவில் குழந்தை பிறந்தால் தந்தைக்குக் கண்டம் பகல் நாழிகை 29,39 அரை 2 க்குப் பிறந்தால் குழந்தைக்குக் கண்டம்.

அமாவாசை நாள் குழந்தை பிறந்தால் இந்தநாள் பகலிரவு 60-நாழிகையும் 6-பங்கு செய்தால் பங்கு ஒன்றுக்கு 10-நாழிகை ஆகிறது குழந்தையின் ஜெனனம் முதற்பங்கானால் ஜெனித்த குழ்ந்தைக்குத் தோஷம் இரண்டாம் பங்கானால் தாய்க்குத் தோஷம் மூன்றாம் பங்கானால் பிதாவுக்குத் தோஷம் நான்காம் பங்கானால் மாமனுக்குத்தோஷம் ஐந்தாம் பங்கானால் குழந்தைக்குத் தோஷம் ஆறாம்பங்கானால் நன்மை என்று அறியவும்.

ஆயில்யம் கேட்டை, ரேவதி மூன்றுமாதம் பரணி உத்திரம் சித்திரை ஆறுமாதம் அஸ்தம் பூசம் உத்திராடம் ஒரு வருஷம் மூலம் கார்த்திகை பூராடம் நான்கு வருடம் மகம் எட்டு வருடம் அசுபதி பதினாறு வருடம் இவ்விதம் வருடம் மாதம் கடந்தபின் குழந்தைக்கு ஆயுள் தீர்க்காயுள் என்று அறியவும.

நந்தி வாக்கியத்தில் கூறுகிறது

ஐந்து பத்து நவம் பனிரண்டினில்
அருக்கனேக அவன் பிதா தோஷமாம்.

அஞ்சு நாலெட்டுப் பத்து பனிரெண்டில்
இந்துவுஞ் செந்திவண்ணனுஞ் சேர்த்திட
மிஞ்சிமா துருவர்க்கமுந் தோஷமாம்
மேவு மூன்றாலும் எட்டுப் பன்னிரண்டில்
கெஞ்சுடாப்பானு சேயுடன் சேர்ந்திடச்
சிறந்த சோதரர் சேதமதாகுமே

உதயத்தில் சனியும் நான்காமிடத்திற் அங்காரகனும் ஏழாமிடத்திற் சூரியனும் இருக்க இவர்களைச் சுபக்கிரகங்கள் பார்க்காவிடில் குழந்தை பிறந்தவுடனே மரணமாகும்.

ஒரு வருஷம் முதல் பன்னிரெண்டு வருஷம் வரையில் பாலா அரிஷ்டம் பதிமூன்றுவருஷம் முதல் இருபது வருஷம் வரையில் யவ்வன அரஷ்டம் இருப்பத்தோரு வருஷம் மூதல் முப்பத்தி இரண்டு வருஷம் வரையில் கௌமாரக அரிஷ்டம் முப்பத்து மூன்று வருஷம் வரையில் விருத்தாரிஷ்டம் எழுபத்து ஒன்று முதல் நூறு தரை பூரண ஆயுள் என்று அரிஷ்டம் அறியவேண்டியது.

வெண்பா

பிறந்திடும் பிள்ளையெல்லாம் பேருலகதனில் நன்றே
இறந்திடுமிது தப்பாது எட்டில் காற்ராறெட்டில்
அறைந்திடுநிலத்துச் சோமனர்ந்திட அவன் பாட்டியார்
உறைந்திடபிறந்தபிள்ளை சடலம்விட்டோடிப்போமே

இலக்கின சத்தமங்களுக்கு இருபுறமும் 2, 12, 6, 8-ல் பாவக் கிரகங்களிருந்தாலும் அரிஷ்டமாம்.

சுக்கிலபட்சம் பாட்டியமை முதல் பத்து நாள் வரைமத்திய சந்திரனென்றும் பின் பத்து நாள்வரை ஹீனசந்திரனென்றும் மீதியுள்ள பத்து நாட்களும் பூரணச் சந்திரன் என்றும் அறிய பேிண்டும் சந்திரன் 1 7 8 2 இந்த இடங்களில் பாவர்களுடன் கூடி யேந்திரத்திற்கு நேர் விரோதமான ஸ்தானங்களில் இருந்தாம் அரிஷ்டமுண்டாகும் 2 3 5 6 8 9 11 12 இந்த இடங்கள் கேந்திரத்திற்கு நேர் விரோதமான இடங்களாம்

## காலச் சக்கர தசாபுத்திகள். வலவோட்டுக் கிராமத்தில் தசா ௵ 1 8க்கும், புத்திகள் – 108

### முதல் பாதத்திற்கு

முதல் நாள் அசுவனி புனர்பூசம் அஸ்தம்மூலம் நட்சத்திரம் பூரட்டாதி இவை ஐந்துக்கும்

| மேட செவ்வாய் தசை வருடம் 7 புத்தி விபரம் | வருஷம் | மாதம் | நாள் | நாழிகை |
|---|---|---|---|---|
| மேட செவ்வாய் | 0 | 5 | 23 | 24 |
| இடப சுக்கிரன் | 1 | 1 | 19 | 12 |
| மிதுன புதன் | 0 | 7 | 16 | 8 |
| கடக சந்திரன் | 1 | [illegible] | 19 | 12 |
| சிங்க சூரியன் | 0 | 4 | 5 | 0 |
| கன்னி புதன் | 0 | 7 | 17 | 48 |
| துலா சுக்கிரன் | 1 | 1 | 13 | 12 |
| விருச்சிக செவ்வாய் | 0 | 5 | 26 | 24 |
| தனுசு குரு | 0 | 8 | 12 | 0 |

### சிங்க சூரிய தசை வருஷம் 5

(இடை நாள்) பரணி பூசம் சித்திரை பூராடம் உத்திரட்டாதி நட்சத்திரம் ஆகிய இவ்வைந்திற்கும்

| புத்தி | வருஷம் | மாதம் | நாள் | நாழிகை |
|---|---|---|---|---|
| விருச்சிக செவ்வாய் | 0 | 4 | 6 | 0 |
| துலா சுக்கிரன் | 0 | 9 | 18 | 0 |
| கன்னி புதன் | 0 | 5 | 12 | 0 |
| கடக சந்திரன் | 1 | 0 | 18 | 0 |
| சிங்க சூரியன் | 0 | 3 | 0 | 0 |
| மிதுன புதன் | 0 | 5 | 12 | 0 |
| இடப சுக்கிரன் | 0 | 9 | 18 | 0 |
| மேட செவ்வாய் | 0 | 4 | 6 | 0 |
| மீன குரு | 0 | 4 | 0 | 0 |

(கடை நாள்) கார்த்திகை ஆயில்யம் சுவாதி உத்திராடம் ரேவதி நட்சத்திரம் இவ்வைந்திற்கும்

| தனுர் குரு தசை வருஷம் 10-க்கு விபரம் | வருஷம் | மாதம் | நாள் | நாழிகை |
|---|---|---|---|---|
| மேட செவ்வாய் | 0 | 8 | 12 | 0 |
| இடப சுக்கிரன் | 1 | 7 | 6 | 0 |
| மிதுன புதன் | 0 | 10 | 24 | 0 |
| கடக சந்திரன் | 2 | 5 | 6 | 0 |
| சிங்க சூரியன் | 0 | 6 | 0 | 0 |
| கன்னி புதன் | 0 | 10 | 24 | 0 |
| துலா சுக்கிரன் | 1 | 7 | 6 | 0 |
| விருச்சிக செவ்வாய் | 0 | 7 | 12 | 0 |
| தனுர் குரு | 1 | 0 | 0 | 0 |

# இடப சுக்கிர தசை வருஷம் 16

| நட்சத்திரம் | இரண்டாம் பாதத் திற்கு புத்தி 85 | வருடம் | மாதம் | நாள் | நாழிகை | விநாடி |
|---|---|---|---|---|---|---|
| (முதல் நாள் அசுவனி புனர்பூசம் ஆயில்யம் பூராட்டாதி, மூலம் இவைகளுக்கு | மகர சனி | 0 | 9 | 1 | 3 | 32 |
| | கும்ப சனி | 0 | 9 | 1 | 3 | 32 |
| | மீன குரு | 1 | 10 | 7 | 38 | 49 |
| | விருச்சிக செவ்வாய் | 1 | 3 | 24 | 21 | 11 |
| | துலா சுக்கிரன் | 3 | 0 | 3 | 14 | 7 |
| | கன்னி புதன் | 1 | 8 | 9 | 52 | 56 |
| | கடக சந்திரன் | 3 | 11 | 13 | 3 | 32 |
| | சிங்க சூரியன் | 0 | 11 | 8 | 49 | 25 |
| | மிதுன புதன் | 1 | 8 | 9 | 52 | 56 |

| நட்சத்திரம் | கன்னி புத தசை வருடம் 6க்கு | வருடம் | மாதம் | நாள் | நாழிகை | விநாடி |
|---|---|---|---|---|---|---|
| (இடை நாள்) பரணி, பூசம், சித்திரை, பூராடம், உத்திரட்டாதி இவைகளுக்கும் | கும்ப சனி | 0 | 5 | 2 | 28 | 14 |
| | மகர சனி | 0 | 5 | 2 | 28 | 14 |
| | தனுர் குரு | 1 | 0 | 21 | 10 | 35 |
| | மேட செவ்வாய் | 0 | 8 | 6 | 49 | 25 |
| | இடப சுக்கிரன் | 1 | 8 | 9 | 53 | 56 |
| | மிதுன புதன் | 0 | 11 | 13 | 3 | 32 |
| | கடக சந்திரன் | 2 | [illegible] | 20 | 28 | 14 |
| | சிங்க சூரியன் | 0 | 6 | 10 | 35 | 18 |
| | கன்னி புதன் | 0 | 11 | 13 | 3 | 32 |

## மகர சனி தசை வருடம்4—க்கு

| நட்சத்திரம் | புத்தி | வருடம் | மாதம் | நாள் | நாழிகை | விநாடி |
|---|---|---|---|---|---|---|
| (கடை நாள்) கார்த்திகை, ஆயில்யம், சுவாதி, உத்திராடம், ரேவதி இவைகளுக்கும் | மகர சனி | 0 | 2 | 7 | 45 | 53 |
| | கும்ப சனி | 0 | 2 | 7 | 45 | 53 |
| | மீன குரு | 0 | 5 | 19 | 24 | 42 |
| | விருச்சிக செவ்வாய் | 0 | 3 | 28 | 35 | 18 |
| | துலா சுக்கிரன் | 0 | 9 | 1 | 3 | 32 |
| | கன்னி புதன் | 0 | 5 | 2 | 23 | 14 |
| | கடக சந்திரன் | 0 | 11 | 25 | 45 | 58 |
| | சிங்க சூரியன் | 0 | 2 | 24 | 42 | 21 |
| | மிதுன புதன் | 0 | 5 | 2 | 28 | 14 |

## மிதுன புதன் தசை வருடம் 9—க்கு

முதல் நாள் அசுவனி புனர்பூசம் அஸ்தம்மூலம் நட்சத்திரம் பூரட்டாதி இவைகளுக்கும்

| 3-ம் பாதத்திற்கு 85-க்கு | வருஷம் | மாதம் | நாள் | நாழிகை | விநாடி |
|---|---|---|---|---|---|
| இடப சுக்கிரன் | 1 | 8 | 24 | 34 | 42 |
| மேட செவ்வாய் | 0 | 9 | 3 | 15 | 11 |
| மீன குரு | 1 | 1 | 0 | 21 | 41 |
| கும்ப சனி | 0 | 5 | 6 | 8 | 40 |
| மகர சனி | 0 | 5 | 6 | 8 | 40 |
| தனுர் குரு | 1 | 1 | 0 | 21 | 41 |
| மேட செவ்வாய் | 0 | 9 | 3 | 15 | 11 |
| இடப சுக்கிரன் | 1 | 8 | 24 | 34 | 22 |
| மிதுன புதன் | 0 | 11 | 21 | 19 | 32 |

## மூன்றாம் பாதத்திற்கு

(இடை நாள்) பரணிபூசம் சித்திரை பூராடம் உத்திரட்டாதி நட்சத்திரம் இவைகளுக்கும்

| துலாம் சுக்கிர தசை வருடம் 16 புத்தி | வருஷம் | மாதம் | நாள் | நாழிகை | விநாடி |
|---|---|---|---|---|---|
| துலா சுக்கிரன் | 3 | 1 | 0 | 2 | 41 |
| விருச்சிக செவ்வாய் | 1 | 4 | 5 | 46 | 49 |
| தனுர் குரு | 1 | 11 | 3 | 58 | 33 |
| மகர சனி | 0 | 9 | 3 | 5 | 26 |
| மீன குரு | 1 | 11 | 3 | 58 | 33 |
| கும்ப சனி | 0 | 9 | 3 | 5 | 26 |
| விருச்சிக செவ்வாய் | 1 | 4 | 5 | 46 | 59 |
| துலா சுக்கிரன | 3 | 1 | 0 | 2 | 41 |
| கன்னி புதன் | 1 | 8 | 24 | 2 | 42 |

## கும்பதசை வருடம் 4—க்கு

(கடை நாள்) கார்த்திகை ஆயில்யம் சுவாதி உத்திராடம் ரேவதி நட்சத்திரம் இவைகளுக்கும்

| | வருஷம் | மாதம் | நாள் | நாழிகை | விநாடி |
|---|---|---|---|---|---|
| இடப சுக்கிரன் | 0 | 9 | 7 | 35 | 25 |
| மேட செவ்வாய் | 0 | 4 | 1 | 26 | 45 |
| மீன குரு | 0 | 5 | 23 | 29 | 38 |
| கும்ப சனி | 0 | 2 | 9 | 23 | 52 |
| மகர சனி | 0 | 2 | 9 | 23 | 52 |
| தனுர் குரு | 0 | 5 | 23 | 29 | 38 |
| மேட செவ்வாய் | 0 | 4 | 1 | 26 | 45 |
| இடப சுக்கிரன் | 0 | 9 | 7 | 33 | 25 |
| மிதுன புதன் | 0 | 5 | 6 | 8 | 40 |

## நான்காம் பாதத்திற்கு 86

| நட்சத்திரம் | கடக சந்திர தசை வருடம் 21½ புத்தி | வருடம் | மாதம் | நாள் | நாழிகை | விநாடி |
|---|---|---|---|---|---|---|
| (முதல் நாள்) அசுவனி புனர்பூசம் அஸ்தம் பூரட்டாதி, மூலம் இவ்வைந்துக்கும் | கடக சந்திரன் | 5 | 1 | 16 | 2 | 48 |
| | சிங்க சூரியன் | 1 | 2 | 19 | 32 | 6 |
| | கன்னி புதன் | 2 | 2 | 11 | 9 | 46 |
| | துலா சுக்கிரன் | 3 | 10 | 26 | 30 | 42 |
| | விருச்சிக செவ்வாய் | 1 | 8 | 15 | 20 | 56 |
| | தனுசு குரு | 2 | 5 | 9 | 4 | 11 |
| | மகர சனி | 0 | 11 | 21 | 37 | 40 |
| | கும்ப சனி | 0 | 11 | 21 | 37 | 40 |
| | மீன குரு | 2 | 5 | 9 | 9 | 11 |

## விருச்சிக செவ்வாய்

| நட்சத்திரம் | கன்னி புத தசை வருடம் 6க்கு | வருடம் | மாதம் | நாள் | நாழிகை | விநாடி |
|---|---|---|---|---|---|---|
| (இடை நாள்) பரணி, பூசம், சித்திரை, பூராடம், உத்திரட்டாதி இவ்வைந்துக்கும் | கடக சந்திரன் | 1 | 8 | 15 | 20 | 56 |
| | சிங்க சூரியன் | 0 | 4 | 26 | 30 | 42 |
| | மிதுன புதன் | 0 | 8 | 23 | 43 | 15 |
| | இடப சுக்கிரன் | 1 | 8 | 18 | 50 | 14 |
| | மேட செவ்வாய் | 0 | 6 | 25 | 0 | 59 |
| | மீன குரு | 0 | 9 | 23 | 1 | 24 |
| | கும்ப சனி | 0 | 8 | 27 | 12 | 33 |
| | மகர சனி | 0 | 8 | 27 | 12 | 33 |
| | தனுர் குரு | 0 | 9 | 23 | 1 | 24 |

| நட்சத்திரம் | மீன குரு தசை ௵ 10 புத்தி | வருடம் | மாதம் | நாள் | நாழிகை | விநாடி |
|---|---|---|---|---|---|---|
| (கடை நாள்) கார்த்திகை, ஆயில்யம், சுவாதி, உத்திராடம், ரேவதி இவ்வைந்துக்கும் | கடக சந்திரன் | 2 | 5 | 9 | 4 | 10 |
| | சிங்க சூரியன் | 0 | 6 | 29 | 18 | 8 |
| | கன்னி புதன் | 1 | 0 | 16 | 44 | 39 |
| | துலா சுக்கிரன் | 1 | 10 | 9 | 46 | 3 |
| | விருச்சிக செவ்வாய் | 0 | 9 | 23 | 1 | 24 |
| | தனுர் குரு | 1 | 1 | 28 | 36 | 17 |
| | மகர சனி | 0 | 5 | 26 | | 31 |
| | கும்ப சனி | 0 | 5 | 26 | | 30 |
| | மீன குரு | 1 | 1 | 36 | | 17 |

*—கால சக்கர தசாபுத்திகளில்' வலவோட்டுக் கிரமத்தில் திசா வருஷம் 118-க்கும்புத்திகள் 10. 8 இது போலவே இடவோட்டு கிரமத்தில் தசாபுத்திகள் 118 வருஷத்திற்கும் புத்திகள் 108 இதை வலவோட்டுக் கிரமத்தில் தசா புத்திகள் வருஷம் 118-க்கு புத்திகள் 1 8-க்கு மாற்றிப் பார்த்துக் கொள்ளவும் நட்சத்திரங்கள் எந்தப்பாகத்தில் எந்தப்புத்தியில் இருக்கிறது என்று பார்த்துப் பலன் சொல்ல வேண்டும் இதற்காக 7 நட்சத்திரங்களின் பலனை எழுதப்பட்டிருக்கிறது. அப்பலனைப் பார்த்தும் தெரிந்து பலன் சொல்லலாம்.

## நட்சத்திரப் பாத பலன்
## அசுவனி

அசுவனி நட்சத்திரத்தில் முதல் பாதத்தில் பிறந்தவன் கோள்சொல்வோன் மனச்சஞ்சலமுடையோன்பாவி, நல்லரூப மில்லாதவன். அன்னியரிடத்தில் பிரீதியுடையவன் இரண்டாவது பாதத்தில் பிறந்தவனும் பிறருடைய மனதறிந்து நடக்குங் குணமுடையவன். அழகுடையவன், நன்மை செய்பவன்.

மூன்றாம் பாவத்தில் பிறந்தவன் சோதிட வித்தையில் வல்லவன் நல்ல புத்திசாலி மூல ரோகமுள்ளவன், நாலாம் பாதத்தில் பிறந்தவன் போர் செய்தல்வலுவுடைய உடம்புடையவன் வெகு அறிவுடையவன் போகப்பிரியமுடையவன்.

## பரணி

பரணியில் முதல் பாதத்தில் பிறந்தவன் சிவப்பு நிறமுடையவன் பலசாலி பராக்கிரமம் உடையவன் நீதியுள்ளவன்சொன்ன சொற்படி நடக்கும் தன்மையுள்ளவன் இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் மானமுள்ளவன் நிபுணன் ஆலசியக்காரன் நல்லகுணமுடையவன்மூன்றாம்பாதத்தில் பிறந்தவன்கோபிவட்டமான நேத்திரமுடையவன் பலமுடையவன் நாலாம்பாதத்தில் பிறந்தவனுஸ்தூல சரீரமுடையவன் கோபமுடையவன் துஷ்டகுணமுடைய சகவாசமுடையவன்.

## கார்த்திகை

கார்த்திகை நட்சத்திரத்தில் முதல் பாதத்தில் பிறந்தவன் ஆசார முள்ளவன் வித்துவான், பிரபு இலாப சேகரன் சூரன் பசும் பிரீதி யுள்ளவன் இரண்டாம் பாதத்தில் பிறந்தவன், ஆசரா வீனத்துவ முடையவன் கோபி ஜெயசாலிகளைச் சிநேகிதராகச்சேர்த்துக் கொள்ளுவான், சாஸ்திரங்களைப் படிக்கும் குணமுடையவன், மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் துஷ்டப் பெண்களைச் சேருபவன் புத்தியில்லாதவன் மிகுந்த சூரன் கோபமுடையவன் எப்போதும் தீமையே செய்யுங் குணமுடையவன், நான்காம் பாதத்தில் பிறந்தவன் வறுமையுடையவன் கல்வியில்லாதவன் மனஸ்தாபமுடையவன் பொறுமை இல்லாதவன் சதா துக்கமுள்ளவன் ரோகியுமாவான்.

## ரோகணி

ரோகிணியின் முதற்பாதத்தில் பிறந்தவன் பொருளுடையவன் அழகுடையவன் அலைச்சலுற்றவன் அன்னியர்களுக்குத் துன்பஞ் செய்வோன் பொறுமையுற்றவன் ராகமுள்ளவன் இரண்டம் பாதத்தில் பிறந்தவன் கிருபையுள்ளபன் உயர்ந்த குண்மும் பொறுமையும் சாந்தகுணமும் ஆசாரமு முடையவன் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் கணிதவித்தைரிவடயவன் சங்கீதப்பயிற்சியுடையவன மந்திரவாதி பஞ்ச காவியங்கள் அறிவோன் நான்காம் பாதக்கில் பிறந்தவன் உண்மையான அறிவோம் உடையவன் அன்னியருடைய பொருளில் ஆசையுடையவன் போகப் பிரியன்.

## மிருக சீரிடம்

மிருகசீரம் முதற்பாதத்தில் பிறந்தவன் எங்தும் புகழப்பெற்றகனவான் சத்துருக்களை வெல்லுபவன் எதிரிகள் நெருங்க மாட்டார்கள் கோபமுடையவன் ஸ்தூல சரீர முடையவன் இரண்டம் பாதத்தில் பிறந்தவன் வழக்குரைப்பவன் சாது பொறுமையுடையவன் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் உதாரணகுணமுடையவன் ஸ்திரீலோலன்

சந்தோஷமுள்ள மனதுடையவன் நான்காம் பாதத்தில் பிறந்தவன் புத்திமான் நான்காம் பாதத்தில் பிறந்தவன் மெய்பேசும் குணமுடையவன் எக்காரியத்தையும் தைரியமாகச் செய்யக்கூடியவன்.

## திருவாதிரை

திருவாதிரையில் முதற்பாதத்தில் பிறந்தவன் நற்குணமுடையவன் நல்ல நண்பர்களின் நட்புக்கொள்ளுபவன் பெண்களுக்கு இனிமையுடையவன் இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் பேசுவதில் வல்லவன் நிஷ்டுரமமன குணங்களுடையவன் யாருடனும் தர்க்கமாகப்பேசும் தன்மையுடையவன் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன். தாதரோகமுடைய சரீரமுள்ளவன் தயை தாட்சண்ணியமில்லாதவன் நான்காம் பாதத்தில் பிறந்தவன் விவேகி அறிவு ஞானம் கல்வி சாஸ்திரம் இவைகளில் தேர்ச்சியுள்ளவன் ஆனால் அற்பபுத்தி அடிக்கடி தோன்றும் சதா காலமும் அழுக்கான உடைகளையே அணியக் கூடியவன்,

## புனர்பூசம்

புனர்பூசம் முதற்பாதத்தில் பிறந்தவன் ஸ்தூலசரீரமுடையவன் பெண்களிடத்தில் பிரீதியுள்ளவன் காமிசற்று செவியுடன் பன்றி மயிர்போல் சரீரத்தில் ரோம முள்ளவன் இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் பித்த சரீரமுடையவன் உஷ்ண சம்மந்தமான வியாதியினால் பிடிக்கப்படுவான் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் குஷ்ட நோயினால் வருந்துபவன் அலைச்சல் அகாலபோஜனம் தொழிலற்றவன் நான்காம் பாதத்தில் பிறந்தவன் தந்தரோகமுடையவன் காவியவறியாதவன் நற்காரியங்களின் பிரீதியுள்ளவன் கோபி வஞ்சக நெஞ்சமுடைவன் காமத்தில் மிகுந்த பிரீதி உள்ளவன் பார்வை லக்ஷணமாக உள்ளவன்.

## பூசம்

பூசநட்சத்திரத்தில் முதல் பாதத்தில் பிறந்தவன் குலையோயுடையவன் நிஷ்டுரமான வார்த்தையுடையவன் தருமகுணமுடையவன் இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் பிரபு சர்வ அதிகாரி கோபி தீர்க்காயுளுடையவன் இரண்டாவது

பாதத்தில் பிறந்தவன் பொது ஜனங்களுக்குத் துன்பத்தைக் கொடுப்போன் நிதானமுள்ளவன மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் சுற்றத்தாருக்கு இனியவன் புத்திசாலி ஞானி நான்காம் பாதத்தில் பிறந்தவன் கலகம் சண்டை இவைகளுக்கு முதலாக நிற்பவன் பெண்களிடத்தில் மிகுந்த பிரியமுள்ளவன்.

## ஆயில்யம்

ஆயில்ய நட்சத்திரத்து முதற் பாதத்தில் பிறந்தவன் மிகுந்த செல்வமுடையவனும் பென்ருபஸ்தவனும் நல்ல புத்தியுடையவனும் சந்தோஷ சித்தனும் பற்பல வேலைகளைச் செய்பவனுமாவான் இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் அந்நியர்களிடும் வேலையைச் செய்வோனும் அழகுள்ளவனும் ஏக்கமுடையவனும் ஆசாரமுடையவனும் தீயவழியில் நடப்பவனும் துர்புத்தியுடையவனுமாவான் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் கோபியும் மனைவியை வதைப்பவனும் ஞானியும் தாமதகுணத்தனும் நிபுணனும் நிலையில்லா சொற்களைப் பேசுபவனுமாவான் நாலாம் பாதத்தில்பிறந்தவன் பொன்னை மிதுதியும் அழிப்பவனும் கொலை செய்பவனும் சுக்கிரனும் தீயவர்கட்கு நல்லவனும் பறைச்சியர் போகம் விரும்புவோனும் ரோகஸ்னுமாவான்.

## மகம்

மகம் முதற்பாதத்தில் பிறந்தவன் எமனைப்போல்பயங்கரமான தன்மையுடையவன் சிவந்த கண்ணும் நீண்ட செவியும் மூக்கும் உடையவன் சரீரத்தில் முழுவதும் ரோமம் நிறைந்தவன் குருரமான பார்வையுடைவன இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் நல்லபுத்திசாலி கல்வி அறிவு சகல விதமான வித்தைகளிலும் தேர்ச்சியுள்ளவன் பூசமுடையவன் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் பலசாலி பேராசையுடையவன் பரிசுத்த முடையவன் காதுநோரிடையவன் நான்காம்பாதத்தில் பிறந்தவன் சீலமுடையவன் பெண்களின் வார்த்தைகளில் அதிகமாக ஈடுபடக்கூடியவன் ரோகமுடையவன் மனைவியாகூல முடைவன் இனிய வார்த்தைகள் பேசக்கூடியவன் அதில் பலன் இராது.

## பூரம்

பூரத்தில் முதல் பாதத்தில் பிறந்தவன் சமர்த்தன் இனிய வசனமுடையவன் சோபம் ஆசாரமான நடத்தை யுடையவன் இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் சிறு வீடு கட்டி வாழ்பவன் செல்வமில்லாதவன் வியாபாரத் தொழில் மூலமாக ஜீவனமுடையவன் மூன்றாம் பாதத்தில் பிறந்த வன் உழுகும் தொழில் மூலம் ஜீவனம் கிலேசமான மனது டையவன் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் நற்குணமுடை யவன் தன் பந்துக்கள் குடும்பம் இவைகளில் அதிகப்பற்று டையவன் நாலாம் பாதத்தில் பிறந்தவன் பிராமணர்களை யும் தெய்வங்களையும் தூஷிக்கும் குணமுடையவன் சரீரத் தில் வடுவுடையவன் துக்கமுடையவன்.

## உத்திரம்

உத்திரம் முதற்பாதத்தில் பிறந்தவன் இனிய வசனமு டையவன், கீர்த்திமான், கண்யமுடையன், சமர்த்தன், சுற்றத்தார் மேல் வஞ்சனையுடையவன் இரண்டாம் பாதத் தில் பிறந்தவன் தரித்திரம் வறுமை தொழில் இல்லாதவன்; கல்வி இல்லாதவ ஹு மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் பிலுக் கன் அற்பக்குண முள்ளவன். விசுவாச மில்லாதவன் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் பொய் பேசக்கூடியவன் ஆசாரமில்லாதவன், மாதாபிதா இவர்களின்மீது பற்று அதிகமில்லாதவன் நாலாம் பாதத்தில் பிறந்தவன் தந்திர வாதி, எத்தொழிலும் தனக்கு நன்மை வரும்படி செய்வானே தவிர பிறத்தியாருக்கு ஒன்றும் செய்யமாட்டான் வாலிபத் திலேயே தன் மாதாபிதாவை இழக்கும் தன்மையுடையவன் தரித்திரமுடையவன்.

## அஸ்தம்

அஸ்தம் முதற்பாதத்தில் பிறந்தவன் கலகஞ் செய்யும் குணமுடையவன் பொய் வார்த்தைகளையே பேசும் குண முடையவன் கர்வமுடையவன். ஆசாரமில்லாதவன் இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் சுகுணன் செய்யும் காரி யங்களை அறிவோடு செய்பவன் வாலிபத்தில் தன்

தாய் இறப்பான். மூன்றாம் பாதத்தில் பிறந்தவன், ஆடல் பாடல்களில் பிரீதியுடையவன் பகைவர்களை ஜெயிப்பான் சிறு வயதில் தகப்பனையும் இழப்பான் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் நல்ல நடத்தையும் கல்வியறிவுடையவர் களிடத்திலேயே அதிகமாகப் பழகும் குணமுடையவன் நாலாம் பாதத்தில் பிறந்தவன், தமையன் மாதா பிதா சுற்றத்தார். இவர்களிடத்தில் அதிக அன்புடையவன். கீர்த்திமான் கல்வியறிவு உடையவன்

## சித்திரை

சித்திரை நட்சத்திரத்து முதற் பாவத்தில் பிறந்தவன் பொல்லாத காரியங்களைச் செய்பவனும் கண்ணோய் காரனும் வியாக்கியானஞ் செய்பவனும்சஞ்சாரியுமாவன் இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் நல்ல வார்த்தையாடுபவனும் தன் தேகத்தைப் பேஷித்துக் கொள்வோனும் தரிகதரனும் நெடியவனும் தபசியும் சஞ்சல சித்தனுமாவான் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் கீர்த்திமானும் பராக்கிரமசாலியும் வித்வானும் ஞானியும் நன்னடத்தையுடையவனும் நல்லறிவுள்ளவானுமாவான் நாலாம் பாவத்தில் பிறந்தவன் பகைவர்களை வணங்கும்படி செய்துகொள்வோனும் சுயபுத்தியுடையவனும் ஜெயசாலியுமாவன்.

## சோதி

சோதிட நட்சத்திரத்து முதற்பாகத்தில் பிறந்தவன் தீரனும் சொப்பனங் காணுவோனும் ஞானியும் பிரபுநேச முள்ளவனும் வித்தியா சாதுர்ய பிரசங்கியும் சாதுவுமாவான் இரண்டாவது பாதத்தில் பிறந்வன் திடவானும் வாய்ச்சாலக்காரனும் புத்திசாலியும் காரியக்காரனும் உண்மை பேசுவோனும் அந்தரங்கக்காரனும் காமியுமாவான் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் வில்வித்தைக்தாரனும் குரூரனும் மூடக்கனும், தீயவழியில் நடப்பவனும் கலகஞ் செம்பவனு மாவான் நாலாம் பாதத்தில் பிறந்தவன் சொல் சாதுரியனும் கோபியும் கலகத்திலாசையுடையவனும் துர்ச்சனனும் சீலமுள்ளவனும் காமியும் சோரனுமாவான்.

## விசாகன்

விசாக நட்சத்திரத்து முதற் பாதத்தில் பிறந்தவன் வஞ்சககம் கல்விமானும் சோதிட முணர்ந்தவனும் சௌபாக்கியவானும் புலவனும் வியாபரியுமாவான் இரண்டாவதுபாதத்தில் பிறந்தவன் தன்னைத்தானே புகழ்ந்து கொள்வோனும் மந்திரவாதியும் காமியும் உண்மை பேசுவோனும் நீதியோடு நடப்பவனும் ரோகியும் சரசக்காரனும் சந்தோஷித்தவனும் நல்லவனுமாவான் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் பல முள்ளவனும் சோரபோகப் பிரியனும் குள்ளனும் நல்ல காரியங்களையெல்லாம் உணர்பவனும் அந்நிய ஸ்திரீ விருப்பமுடையவனும் வாய்ச்சாலக் காரனுமாவான் நாலாம் பாதத்தில் பிறந்தவன் அரியபுத்தி யுடையவனும் யோகியும் செல்வமுடையவனும் ஞானியும் ஒரு தாரமுடையவனும் வாய்ச்சாலக்கானுமாவான்.

## அனுஷம்

அனுஷ நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் பதவியுடையவனும் நியாயக்காரனும் சத்தியவானும் ஆசாரகாரனும் மந்திர சுத்தி சொல்வோனுமாவான் இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் புல்லாங் குழலிசையிற் பிரியமுள்ளவனும் நல்ல வாய்ச்சாலக்காரனும் சிந்தந்க புத்தியுடையவனும் மானியும் காமியுமாவான் மூன்வாம் பாதத்தில் பிறந்தவன் புத்திசாலியும் அழகுடையவனும் மெல்லிய குரலையுடையவனும் வித்திய சாதுரியனுமாவான் நாலாம் பாதத்தில் பிறந்தவன் நச்சுச் சொல்லுடையநும் பரத்து ரோகியும் தையர்களையுடைவனும் மோசஞ் செய்பவனும் தானுபவனும் குடையுடையவனுமாவான்.

## கேட்டை

கேட்டை நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் எழுத வல்லவனும் காவியும் பரிகாசஞ் செய்பவனும் விளையாட்டுச் செய்கையுடையவனும் சந்தோஷித்தவனுமாவான் இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் சங்கீதப் பிரியனும் வாய்ச் சாலக்காரனும் ஈகையுள்ளவனும் சுகவானும் போகி

யும் கல்மனதை யுடையவனும் ரோகியுமாவான் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் கண்ணோயுள்ளவனும் பசுவுடையவனும் கலகக்காரனும் ஈனபுத்தி யுடையவனும் அந்நியர் தொழில்களைத் தனதென்று நினைத்துச் செய்பவனும் சாதுவுமாவான் நாலாம் பாதத்தில் பிறந்தவன் கலகஞ் செய்வதில் பிரீதியுடையவநும் முன் கோபக்காரநும் வஞ்சகநும் குரூரத்தையே கக்ய்பவநும் தன் குலமேன்மையைச் சொல்லிக் கொள்வோநுமாவான்.

## மூலம்

மூல நட்சத்திரத்து முதற்பாவத்தில் பிறந்தவன் கிழங்கு வகைகளிற் பிரியமுள்ளவநும் பாபத் தொழில்களையேசெய்பவநும் ரோகவிதநும் பித்தங் கொண்டவநுமாவான் இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் வித்துவாநும் வயிற்று நோயுடையவநும் பொய் பேசுவோநும் நல்ல புத்தியுள்ளவநும் மாநுயும் யாவரிடத்தில் இன்ப முள்ளவநுமாவான் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் பில்லி சூனியம் இவைகளைக் கற்றுக்கொள்பவநும் அழகுள்ளவநும் சோம்பலுள்ளவநும் கருமியும் நல்ல பழங்களிடத்தில் பிரியங் கொண்டவநுமாவான் நாலாம் பாதத்தில் பிறந்தவன் நல்லபலமுள்ளவநும் காரிய வல்லவநும் பகைவர்களை ஜெயிப்பவநும் கண்டமாலையுடையவநுமாவான்.

## பூராடம்

பூராட நட்சத்திரத்து முதற்பாவத்தில் பிறந்தவன்மிக்க வணக்கமுடையவநும் புத்திரப்பேறே இல்லாதவநும் சச்சரவே உண்டாக்குபவநும் சூரநும் நடுவயது வரைக்கு மிருப்பவநுமாவான் இரண்டாவது பாதத்திற் பிறந்தவன் போகியும் அழகுள்ளவநும் சிநேகிதர்களிருக்கப் பெறாதவநும் அறிவினநும் வேசிலோலநுமாவான் மூன்றாம் பாதத்திற் பிறந்தவன் சுகவாநும் செல்வமுடையவநும் வாலிப தசையில் தாயை இறக்கப் பெறுவநும் பெரிய வியாதிக்காரநும் துற்குணநும் தெளிவுடையவனுமாவான் நாலாம் பாதத்தில் பிறந்தவன் பயமில்லாதவனும் முதுகு நோயுள்ளவனும் திருடனும் அபவாதம் சொல்பவனும் துரோகியும் தந்தையை சிறுவயதிலேயே இறக்கப் பெறுவனுமாவான்.

## உத்திராடம் வேறு

உத்திராட நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் அழகுவாய்ந்த நல்லபுத்தியும் ஈகைக்குணமுடையவனும் பிரபல சர்வ சாஸ்திரங்களையும் அறிபவனும் குருவையும் சரிக்கின்றவனுமாவான் இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் நல்ல வாச்சாதுரியனும் உலோபியும் பிலுக்கனும் திடவானும் மேன்மையான கருமங்களை ரகசியத்தில் நன்றாய்ச் செய்யவனுமாவான் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் காவியும் பெருநோக்காய் பேசுவோனும் குரூரனும் கலங்கிய மனத்தனும் கோபியும் ஸ்தூலதேகனுமாவான் நாலாம் பாதத்தில் பிறந்தவன் வீரியமுடையவனும் தருமஞ் செய்பனும் விசேஷ காரியங்களுள்ளவனும் வியாபாரியும் சுற்றத்தார்களுக்குப் பட்சமுள்ளவனுமாவான்.

## திருவோணம்

திரிகோண நட்சத்திரத்து முதற் பாதத்தில் பிறந்தவன் புத்திசாலியும் தூலதேகியும் பிள்ளைகளில்லாதவனும்போகவானும் நிலைபெற்ற உற்சாகியும் கலகக்காரனும் கர்வியுமாவான் இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் பிரமஞானியும் காமியும் தாட்சண்ணிய மில்லாதவனும் லோபியும் சிநேகித மில்லாதவனுமாவான் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் காமியும் ரோசியும் போகியும் செல்வமுள்ளவனும்உதாரணஸ்நானு மதயவில்லாதவனுமாவான் நாலாம் பாதத்தில் பிறந்தவன் வேசிலோலனும் தனவானும் பயிரிடுபவனுவான்.

## அவிட்டம்

அவிட்ட நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் வகையில்லாதவனும் காமியும் பசிபொறுக்காதவனும் கிலேசம் நிஷ்டுரனும் ஸ்தூலதேகனும் கறுப்பனுமாவான் இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் கெட்டவனும் வஞ்சகனும் சத்தியனும் புத்திமானும் தரித்திரனும் சாத்தியவாதியும் விடா முயற்சியோனும் தருமவானுமாவான் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் குணசீலனும் இளைத்த சரீரமுள்ளவனும் திடவானும் நன்னடத்தை யுடையவனும் செவப்பனுமாவான் நாலாம் பாதத்தில் பிறந்தவன் தனவானும் குரூரனும் தூல தேகத்தனும் காவியும் வஞ்சகனும் மயிர் அழகுடையவனுமாவான்.

## சதயம்

சதயநட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் குணவானும் அழகனும் உதாரனும் சீலனும் பிராமணர் மேலும் பசுக்களிடத்திலும் பிரீதியுள்ளவனுமாவான் இரண்டாம் பாதத்திற் பிறந்தவன் கோபியும் கிலேசியும் வஞ்சகனும் ஆசாரமில்லாதவனும் இழிகுலத்தானுமாவான் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் நல்ல காரியங்களை யெல்லாம் முடிப்பவனும் பசியுள்ளவனும் வயிற்று நோயனும் பித்தனும் சேவகாவிர்த்தி செய்பனும் புத்திசாலியுமாவான் நாலாம் பாதத்தில் பிறந்தவன் நட்டம்தெரிபவனும் உத்தேசியும் மானியும் நினைத்த காரியம் முடிப்பவனும் நல்லவனும் சுகவானுமாவான்.

## பூரட்டாதி

பூரட்டாதி நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் பிராமனனும் அகன்ற முகத்தானும் பலவானும் பெண்சாதி மேற் பிரியனும் யுத்தம் புரிபவனும் நல்லுணர்ச்சியுடையவனும் உத்தேசியச் சுகவானுமாவான் இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் கடவுள் மந்திரமறிவோனும் மனமிளைக்காதவனும் யாவரிடத்தும் வணங்கிக் காரிய முடிப்பவனுமாவான் 3-ம் பாதத்தில் பிறந்தவன் சந்தோஷவானும் பெருமையுள்ளவனும் நல்ல நடையுடையவநும் புலவனும் அந்நியர் வீட்டுந் போஜ்னத்தில் பிரியமுடையவநும் பித்த ரோகியும் புத்திமானுமாவான் நாலாம் பாதத்திற் பிறந்தவன் குணவாநும் சக்தியநும் அழகுள்ளவனும் சிநேகிதமுள்ளவன் நல்ல தொழிலுடையவன் சீமானுமாவான்.

## உத்திரட்டாதி

உத்திரட்டாதி நட்சத்திரத்து முதற்பாகத்தில் பிறந்தவன் கோபியும், சஞ்சலஜம் தாதாவும், மயிர் நிறைந்த தேகநும், சுரேட்டநுமாவான் இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் ரோஷ முடையவநும் சாதுவும் தரித்திரநும் நல்ல குணவாநும் நன்னடையுடையாநும், அறிவுள்ளவனுமாவான் 3-ம் பாதத்தில் பிறந்தன்ன் புத்தியில்லாதவநும் பக்திமாநும் முன்கோபியும் சந்தேக்ஷியும் செம்மயிருடையோநும் கோளுரைப்போநுமாவான் நாலாம் பாதத்தில் பிறந்தவன் புலவர் சொல்லில் வாட்முடையவன் பேதியுடையவநும்குடும்பியும் கோபியும் கிலேசமுள்ளவநுமாவான்

## ரேவதி

ரேவதி நட்சத்திரத்து முதற்பாதந்திற் பிர்ந்தவன் கலகப் பிரியனும், நிபுணனும் வித்துவானும் கிலேசயும் சந்தோஷமுள்ளவனுமாவான் இரண்டாவது பாதத்தில், பிறந்தவன் சோரனும், தீரனும் மெல்லிய சௌக்கியனும், கோபியும் காமியும் சஞ்லனும் மெல்லிய சரீரமுள்ளவனுமாவான் 3-ம் பாதத்தில் பிறந்தவன் புத்தியில்லாதவனும் பாவியும், வஞ்சகனும், தரித்திர உதாரனும் நற்குணமில்லாதவனுமாவான், நாலாம் பாதத்தில் பிறந்தவன் தீரனும் சத்தியவசனனும் ஈன குலஸ்தனும் சத்துருவை ஜெயிப்பனுமாவான்.

நட்சத்திரப் பாதபலன் முற்றிற்று

—

சவ்வியம், அபசவ்யம் சவ்யம் சவ்யம் சவ்வியம் இந்த நான்கின் விதியெப்படியெனில், சுக்கில பக்ஷத்தில் மேஷம் மிதுனம் சிம்மம், துலாம் தனுசு குடும்பம் இந்த ஆறு ராசிகளில், சந்திரன் சுக்கிரன் புதன், குரு இவர்கள் இருந்தும் மற்றைய ஆறு ராசிகளில் சூரியன். செவ்வாய் சனி பாம்பு இவர்களிளிந்தும் சுபர்களாகிய மேற்கூறிய, நால்வரும், நேந்திர கோணத்திலிருந்தும் மற்றைய ராசிகளில் பாவிகளிருக்கும் ஜாதகருக்கு, சுபபலன் ஒன்பதும், பாவிகளுடைய பலன் ஒன்பதும். கூடியிருந்தால சவ்விய ஜாதகமென்றும், சுபர்களுடைய பலன் குறைந்து நான்குக்குள்ளாகிமற்றது. அசுபபலன்களாக இருந்தால் அபசவ்விய ஜாதகமென்றும், நாலுக்கு மேற்பட்டு எட்டுக்குள், சுபர்களுடைய பலனாக இருந்தால், அசவ்வியர் சவ்வியமென்றும் நாலுக்கு மேல் எட்டுக்குள்ளிருந்தால் சவ்வியாப சவ்விய ஜாதக மென்றும் பெயராகும்.

கிருஷ்ணபக்ஷத்தில் பிறந்தவர்களுக்கு குரு சுக்கிரன் சந்திரன் புதன், இந்த நால்வருக்குண்டான ரிஷபம் கடகம் கன்னி விருச்சிகம் மகரம், மீனம் இந்த ராசி ஆறிலும் மேற்படி, கிரகங்கள் இருந்தும் மற்றைய இராசி ஆறிலும், சனி முதலியவர்கள் இருந்தும் சுபர்களுடைய பலன் ஒன்பதும் இருந்தால் அபசவ்விய ஜாதகமென்று பெயர். சுப பலன் நான்கிற்குமேல் எச்டுக்குள்ளாக இருந்தால் சவ்வியமென்று பெயராகும். கீழே காட்டிய சக்கரத்தின்படி இராசி

மண்டலம் நாற்கோணம் துவாதராசி சக்கரத்தில் போட் டிருக்கும் பாவம் பார்க்குங்கதி எண்களின் படிக்கும். பாவ மிடுகுறி யெண்களையும் நிறுத்தி அதன் பலாபலன்களை நன்கு ஆராய்ந்து பலன் சொன்னால் சித்தியாகும்.

சுக்கிலபக்ஷத்து சவ்விய மானால் அவரவர்கள் ஜெனன லக்கின முதல் நேராகப் பாவங்களின் கிரமப்படி 12-ம் ராசியில் அபசவ்வியமானால் இலக்கினத்திற்குப் 2-ம் இடத்தில் இருந்து ஆரம்பித்துத் தலைகீழாக (12-ம்) சவ்வி யமானால் இலக்கினம் முதற்கொண்டு க்ரமப்படி ஆறு பாவர்களும் ஏழாவது இராசியில் ஆரம்பித்து தலைகீழாக 6) பாவமும் அபசவ்வியா சவ்வியமானால் இலக்கினம் 12-வது இராசியாகவும் இது முதல் (6) ராசிவரை தலைகீழாக வும் 7-வது இராசியில் ஆரம்பித்து 1, 2, 3, 4, 5, 6, 7, ஆக வும் வைத்துப் பலாபலன்களைச் சொல்ல வேண்டும்.

சுக்கில பக்ஷத்து சவ்விய மண்டலம் என் கிருஷ்ணபக்ஷ அபசவ்வியத்திற்கும் சுக்கில பக்ஷத்து அபசவ்விய மண்ட லத்திற்கும் இருந்தால் கிருஷ்ணபக்ஷ சவ்விய மண்டலமென் னும் சுக்கில பக்ஷசவ்வியா சவ்வியாப சவ்விய மண்டலபடி கிருஷ்ணபக்ஷ சவ்விய மென்றும் சுக்கிலபக்ஷ மானால் சுக்கில பக்ஷ அபசவ்வியம் என்றும் பெயர். இவ் வித பாவங்களைப் பார்த்து எளிதில் பலன்களைக் கண்ட றியலாம்.

## சுக்கில பக்ஷத்துக்கு உதாரணம்

1-வது சக்கரம்

| | | | |
|---|---|---|---|
| 2 | ல 1 | 2 | 3 |
| 11 | சவ்வியம் மேஷ | | 4 |
| 10 | லக்கின மானால் | | 5 |
| 9 | 8 | 7 | 6 |

2-வது சக்கரம்

| | | | |
|---|---|---|---|
| 1 | ல 1 | 11 | 0 |
| 2 | அபசவ்யம் | | 9 |
| 3 | | | 8 |
| 4 | 6 | 5 | 7 |

௨-வது சக்கரம்

| | | | |
|---|---|---|---|
| 7 | 1 | 2 | 3 |
| 8 | சவ்யாப சவ்யம் | | 4 |
| 9 | | | 5 |
| 10 | 11 | 12 | 6 |

4-வது சக்கரம்

| | | | |
|---|---|---|---|
| 6 | ல 12 | 11 | 50 |
| 5 | | | 9 |
| 4 | | | 8 |
| 3 | 2 | 1 | 7 |

இந்த நான்கு சக்கரங்களும் கிருஷ்ண மண்டல பாவங்களாகும்.

கிருஷ்ண பக்ஷத்துக்கு உதாரணம்

1-வது சக்கரம்

| | | | |
|---|---|---|---|
| 1 | ல 2 | 11 | 10 |
| 2 | சவ்வியம் மேஷ லக்கின மானால் | | 9 |
| 3 | | | 8 |
| 4 | 5 | 6 | 7 |

2-வது சக்கரம்

| | | | |
|---|---|---|---|
| 12 | ல 1 | 2 | 3 |
| 11 | அபசவ்யம் | | 4 |
| 10 | | | 5 |
| 9 | 8 | 7 | 6 |

3-வது சக்கரம்

| | | | |
|---|---|---|---|
| 7 | ல 1 | 2 | 3 |
| 8 | அபசய சக்கரம் | | 4 |
| 9 | | | 5 |
| 10 | 11 | 12 | 6 |

4-வது சக்கரம்

| | | | |
|---|---|---|---|
| 6 | ல 12 | 11 | 10 |
| 5 | சவ்யாப சவ்யமா னால் | | 9 |
| 4 | | | 8 |
| 3 | 2 | 1 | 7 |

இந்த நான்கு சக்கரங்களும் கிருஷ்ண மண்டல விதியின் பாவ சக்கரங்களாகும்

இராஜயோகம் என்றால் என்ன?

ஆசிரிய விருத்தம்

தேற்றிய வுதய ராசியினெதிரே துலங்கிய ராசியின் கோளும் தேற்றிய ராசி யங்குச மிகுந்தாற் றெரிந்திடும் யோகதனின் னும் மாற்றியவெதிரா மிராசி திரிகோணமருவிய வுதய வங்கு சங்கன் போற்றிய வுதயந் திரிகோணந் தன்னிலே

பொருள்:-உதயராசிக் கெதிரே இருக்கும் ராசிகளிலே சுபக்கிரகங்கள் இருந்து அந்தக் கிரகங்கள் இருந்த ராசி அங்குச மேறினால் அந்தக் கிரகங்களின் யோகம் தான் ராஜயோகம் என்று பெயர்.

மேஷராசியில் உதயமாகிய சிங்கராசியில் நின்ற கோன் மேஷ ரங்கிஷ் மேறினாலும் மேஷ திரேக்காண மாகினும் அந்த ஜாதகன் யேககாரன் சிங்க ராசியில் உதயமாகும் சுபக்கிரகங்கள் பார்வையிட்டால் ஜாதகன் யோகக்காரன் இடப ராசியில் உதயமாக மகரத்தில் கோள் நின்று இடப அங்கிஷம் இடப திரேகாணம் ஏறில் ஜாதகன் யோகக் காரன் தான்.

துலா முதயமாக கும்பத்தில் நின்றகோள் துலாத்ரேக் காணம் துலாம் அங்கிஷமானால் ஜாதகன் யோகக்காரன்

மூன்றாம் பாதத்திற்கு

| நட்சத்திரம் | இடப சுக்கிர தசை வருஷம் 16 புத்தி | வருஷம் | மீ | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|---|
| முதல் நாள் ரோகிணி மகம் விசாகம் திருவோணம் ஆகிய இந் நான்கிற்கும். | கன்னி புதன் | 0 | 11 | 11 | 3 | 32 |
| | சிங்க சூரியன் | 0 | 6 | 1 | 35 | 18 |
| | கடக சந்திரன் | 2 | 2 | 2 | 28 | 14 |
| | மிதுன புதன் | 0 | 11 | 13 | 3 | 32 |
| | துலா சுக்கிரன் | 1 | 8 | 0 | 52 | 56 |
| | மேட செவ்வாய் | 0 | 8 | 23 | 49 | 25 |
| | தனுர் குரு | 1 | 0 | 2 | 10 | 35 |
| | மகர சனி | 0 | 5 | 2 | 28 | 14 |
| | கும்ப சனி | 0 | 5 | 2 | 28 | 14 |

மூன்றாம் பாதத்திற்கு

| நட்சத்திரம் | இடப சுக்கிர தசை வருஷம் 16 புத்தி | வருஷம் | மீ | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|---|
| இடைநாள் மிருகசீரிடம் பூரம் அனுஷம் அவிட்டம் ஆகிய இந் நான்கிற்கும் | மிதுன புதன் | 1 | 3 | 9 | 52 | 56 |
| | சிங்க சூரியன் | 0 | 11 | 8 | 49 | 25 |
| | கடக சந்திரன் | 3 | 11 | 2 | 3 | 32 |
| | கன்னி புதன் | 1 | 8 | 9 | 53 | 56 |
| | துலா சுக்கிரன் | 3 | 0 | 4 | 14 | 7 |
| | விருச்சிக செவ்வாய் | 1 | 3 | 4 | 21 | 11 |
| | மீன குரு | 1 | 10 | 7 | 38 | 49 |
| | கும்ப சனி | 0 | 9 | 1 | 3 | 32 |
| | மகர சனி | 0 | 9 | 1 | 8 | 32 |

மூன்றாம் பாதத்திற்கு

| நட்சத்திரம் | தனுர் குரு தசை வருஷம் 4 புத்தி | வருஷம் | மாதம் | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|---|
| கடை நாள் திருவாதிரை உத்திரம் கேட்டை சதயம் ஆகிய இந்நான்கிற்கும் | கன்னி புதன். | 0 | 5 | 2 | 28 | 14 |
| | சிங்க சூரியன் | 0 | 2 | 4 | 42 | 21 |
| | கடக சந்திரன் | 0 | 11 | 5 | 45 | 53 |
| | மிதுன புதன் | 0 | 5 | 2 | 28 | 4 |
| | இடப சுக்கிரன் | 0 | 9 | 1 | 3 | 32 |
| | மேட செவ்வாய் | 0 | 3 | 23 | 35 | 18 |
| | தனுர் குரு | 0 | 5 | 19 | 24 | 45 |
| | மகர சனி | 0 | 2 | 7 | 45 | 53 |
| | கும்ப சனி | 0 | 2 | 7 | 45 | 53 |

4-ம் பாதத்திற்கு (—100

| நட்சத்திரம் | துலா சுக்கிர திசை வருஷம் 16 புத்தி | வருஷம் | மாதம் | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|---|
| முதல் நாள் ரோகிணி மகம் விசாகம் திருவோணம் ஆகிய இந்நான்கிற்கும் | மீன குரு | 2 | 1 | 0 | 0 | 0 |
| | மேட செவ்வாய் | 1 | 5 | 19 | 12 | 0 |
| | இடப செவ்வாய் | 3 | 4 | 9 | 36 | 0 |
| | மிதுன புதன் | 1 | 10 | 20 | 24 | 0 |
| | சிங்க சூரியன் | 4 | 4 | 27 | 36 | 0 |
| | கடக சந்திரன் | 4 | 4 | 27 | 36 | 0 |
| | கன்னி புதன் | 2 | 10 | 20 | 24 | 0 |
| | துலா சுக்கிரன் | 3 | 4 | 9 | 36 | 0 |
| | விருச்சிக செவ்வாய் | 1 | 5 | 19 | 12 | 0 |

கடக சந்திர திசை (ஞ) 21

முதல் பாதத்திற்கு (—54)

| நட்சத்திரம் | மீன குரு தசை வருஷம் 10 புத்தி | வருஷம் | மாதம் | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|---|
| [illegible] | தனுர் குரு | 1 | 12 | 8 | 36 | 17 |
| | மகர சனி | 0 | 5 | 17 | 26 | 31 |
| | கும்ப சனி | 0 | 5 | 17 | 26 | 31 |
| | மீன குரு | 1 | 9 | 8 | 36 | 17 |
| | மேட செவ்வாய் | 0 | 12 | 21 | 1 | 24 |
| | இடப சுக்கிரன் | 1 | 10 | 9 | 46 | 3 |
| | மிதுன புதன் | 1 | 0 | 16 | 44 | 39 |
| | சிங்க ரியன் | 0 | 6 | 29 | 18 | 8 |
| | கடக சந்திரன் | 2 | 6 | 9 | 4 | 10 |

இரண்டாம் பாதத்திற்கு

| நட்சத்திரம் | துலா சுக்கிர திசை வருஷம் 16 புத்தி | வருஷம் | மாதம் | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|---|
| [illegible] | கன்னி புதன் | 1 | 8 | 24 | 34 | 42 |
| | துலா சுக்கிரன் | 3 | 1 | 0 | 21 | 41 |
| | விருச்சிக செவ்வாய் | 1 | 4 | 3 | 46 | 59 |
| | மீன குரு | 1 | 11 | 5 | 58 | 23 |
| | கும்ப சனி | 0 | 9 | 7 | 35 | 26 |
| | மகர சனி | 1 | 4 | 11 | 58 | 33 |
| | தனுர் சனி | 1 | 4 | 5 | 46 | 59 |
| | விருச்சிக செவ்வாய் | 1 | 4 | 5 | 46 | 59 |
| | துலா சுக்கிரன் | 3 | 1 | 0 | 21 | 41 |

## முதல் பாதத்திற்கு

| நட்சத்திரம் | மிதுன புத தசை வருஷம் 9 புத்தி | வருஷம் | மாதம் | நாள் | நாழிகை | விநாடி |
|---|---|---|---|---|---|---|
| இரண்டாம் நாள் மிருகசீரிடம் பூரம் அனுஷம் அவிட்டம் ஆகிய இந் நான்கிற்கும் | மிதுன புதன் | ப | 11 | 21 | 19 | 32 |
| | இடப சுக்கிரன் | 1 | 8 | 24 | 34 | 42 |
| | மேட செவ்வாய் | 0 | 9 | 3 | 15 | 11 |
| | தனுர் குரு | 1 | 1 | 0 | 21 | 41 |
| | மகர சனி | 0 | 5 | 6 | 8 | 40 |
| | கும்ப சனி | 0 | 5 | 9 | 8 | 40 |
| | மீன குரு | 1 | 1 | 0 | 21 | 41 |
| | மேட செவ்வாய் | 0 | 9 | 3 | 15 | 11 |
| | இடப சுக்கிரன் | 1 | 8 | 24 | 34 | 42 |

## இரண்டாம் பாதத்திற்கு

| நட்சத்திரம் | கும்ப சனி தசை வருஷம் 4 புத்தி | வருஷம் | மாதம் | நாள் | நாழிகை | விநாடி |
|---|---|---|---|---|---|---|
| கடை நாள் திருவாதிரை உத்திரம் கேட்டை சதயம் ஆகிய இந்நான்கிற்கும் | கன்னி புதன் | 0 | 5 | 6 | 8 | 40 |
| | துலா சுக்கிரன் | 0 | 9 | 7 | 35 | 25 |
| | விருச்சிக செவ்வாய் | 0 | 4 | 1 | 26 | 45 |
| | மீன குரு | 0 | 5 | 3 | 29 | 38 |
| | கும்ப சனி | 0 | 2 | 9 | 23 | 52 |
| | மகர சனி | 0 | 2 | 9 | 23 | 53 |
| | தனுர் குரு | 0 | 5 | 23 | 29 | 38 |
| | விருச்சிக செவ்வாய் | 0 | 4 | 1 | 26 | 45 |
| | துலா சுக்கிரன் | 0 | 9 | 7 | 35 | 25 |

கடக ராசியில் உதயமாக விருச்சிக முதயமாகி பகை இல்லாமல் விருச்சிக ராசியில் சுபர்கள் இருந்து கடகராசியில் இருந்த கோள்கள் சுபர்களால் பார்க்கப்பட்டால் ஜாதகன் யோகவான்.

கும்பத்துக்கும் துலாத்திற்கும் இதே முறையாக நின்றால் யோகக்காரன் மகரம் கன்னி இந்த ராசி விடுகளில் சுபர்களுடன் கூடியிருந்தால் ஜாதகன் யோகவான்.

ஆறாமிடத்திற்குடையோனும் சுபர்களுடன் கூடி தன்னுடைய விட்டில் ஆகியிருந்தால் ஜாதகன் பிரபல யோகமுள்ளவன் ஆறாமிடத்தில் பசுவிகள் நின்று அவர்களாலே மற்றக்கோள்கள் பார்க்கப்பட்டால் ஜாதகன் பெரும் பாவியென்றே கூறவேண்டும்.

சனியும் அங்காரகனும் யோக நாதர்களுடன் கூடியிருந்தால் ஜாதகன் மலை காடு மேடு பள்ளங்களுண்டான பூமிக்கு அரசனாவான் சுக்கிர சந்திரன் பார்த்தால் தண்ணீர் நிறைந்த பூமிக்கு அரசனாவான் வியாழனும் சந்திரனும் பார்த்தால் நல்ல ஜலமுள்ள பூமியில்விவசாயம் செய்து ஜிவிப்பான்.

ஆறாமிடத்திற்கு உடையவன் கேந்திரங்களில் நிற்கஏர் உழவினால் பாக்கியவானாவான் அவன் 5, 9 இடங்களில் லாபஸ்தானாதிபதியுடன் கூடி சுபர்களால் பார்க்கப்பட்டால் ஜாதகன் பூமி பாலகன் என்றே கூறவேண்டும். பத்துக்குடையவனோடு சுபர்கள் நிற்கஜாதகன் உத்தியோகத் துறையில் ஈடுபடுவான் இதன் மூலம் ஜிவனம் நடக்கும்.

ஏழாமிடத்திற்குடையவன் தன்னுடைய விட்டிலேயே கூடி ஆட்சி செய்தால் ஜாதகன் போகக்காரன் பன்னிரண்டாமிடத்திற்குடையவன் சனி, குரு கேது இவர்களுடன் இருந்தால் ஜாதகன் பிரபல வியாபாரியாவான் 8-ம் இடத்திற்குடையவன் பாவிகளிடன் கூடி மேஷம், ரிஷபம் மிதுனம் இந்த ராசிகளில் சந்திரன், அங்காரகன், ராகு இவர்களுடன் கூடி இருந்தால் ஜாதகனுக்கு ஜெயில் தண்டனை கிடைக்கும் நான்கிற்குடையவன் சுபர்களுடன் கூடி இருந்தால் ஜாதகனுக்கு ஜெயில் தண்டனை கிடைக்கும்நான்கிற்குடையவன் சுபர்களுடன் கூடி குரு ந்திரன், இவர்களால் பார்க்கப்பட்டால் ஜாதகனுக்குப் பல குழந்தைகள் பிறக்கும் பெண்களால். அதிர்ஷ்டமுண்டாகும்.

எட்டாமிடத்தில் செவ்வாய் இராகு நின்று சுபர்களால் பார்க்கப்பட்டால் ஜாதகன் தலையாரி உத்தியோகம் செய்பான் சூரியன் சனியும் எட்டாமிடத்தில் கூடி பசுவிகளால் வார்க்கப்பட்டால் வேலை ஒன்றும் இல்லாமல் அலைவான்.

யோகாதிபதிக்கு எட்டாமிடத்தில் செவ்வாய் நின்று பாவிகளைப் பார்த்தால் கிருமியினால் நோயுண்டாகும். சரீரத்தில் நாற்றமெடுத்த புண்ணுமுண்டாகும் யோககாரன் 11-க்குடையவனொடு சேர்ந்து ராகு கேது, சுக்கிரன் இவர்களால் பார்த்தால் ஜாதகன் பெரிய வர்த்தக வியாபாரியாவான் இவர்கள் பாவிகளுடன் கூடி நின்றால் யோகமில்லை என்று கூற வேண்டும்

காலச் சக்கர தசா புத்திகள்:—இடவோட்டத்தில் தசா வருஷம் 1 8-க்கும் புத்திகள்:-108

முதல் பாதத்திற்கு (—86)

| நட்சத்திரம் | விருச்சிக செவ்வாய் தசை ௵ 7 | வருஷம் | மீ | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|---|
| முதல் நாள் ரோகிணி மகம் விசாகம் திருவோணம் ஆகிய இவைகளுக்கும் | தனுர் குரு | 0 | 9 | 28 | | 24 |
| | மகர சனி | 0 | 8 | 27 | 12 | 33 |
| | கும்ப சனி | 0 | 8 | 27 | 12 | 33 |
| | மீன குரு | 0 | 9 | 28 | 12 | 4 |
| | மேட செவ்வாய் | 0 | 6 | 25 | 6 | 59 |
| | இடப சுக்கிரன் | 0 | 2 | 18 | 50 | 14 |
| | மிதுன புதன் | 0 | 8 | 23 | 48 | 15 |
| | சிங்க சூரியன் | 0 | 4 | 26 | 30 | 42 |
| | கடக சந்திரன் | 0 | 8 | 15 | 20 | 56 |

மீன குருதசை ௵ 10

| நட்சத்திரம் | சிங்க சூரியன் வருஷம் 5 புத்தி | வருஷம் | மீ | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|---|
| இடை நாள் மிருகசீரிடம் பூரம் அனுஷம் அவிட்டம் ஆகிய இந்நான்கிற்கும் | மீன குரு | 0 | 6 | 29 | 18 | 8 |
| | கும்ப சனி | 0 | 2 | 23 | 48 | 15 |
| | மகர சனி | 0 | 2 | 23 | 48 | 15 |
| | தனுர் குரு | 0 | 6 | 29 | 18 | 8 |
| | விருச்சிக செவ்வாய் | 0 | 4 | 26 | 30 | 42 |
| | துலா சுக்கிரன் | 0 | 14 | 4 | 58 | 2 |
| | கன்னி புதன் | 0 | 6 | 8 | 22 | 20 |
| | சிங்க சூரியன் | 0 | 8 | 14 | 39 | 4 |
| | கடக சந்திரன் | 1 | 2 | 19 | 32 | 6 |

## 4-ம் பாதத்திற்கு

| நட்சத் திரம் | மேட செவ்வாய் தசை வருஷம் 7 புத்தி | வருஷம் | மாதம் | நாள் | நாழிகை | விநாழிகை |
|---|---|---|---|---|---|---|
| இடைநாள் மிருகசீரிடம் சித்திரை அவிட்டம் ஆகிய இந்நாள்களுக்கும். | தனுர் குரு | 0 | 8 | 12 | 0 | 0 |
| | விருச்சிக செவ்வாய் | 0 | 5 | 26 | 24 | 0 |
| | துலா சுக்கிரன் | 1 | 1 | 18 | 12 | 0 |
| | கன்னி புதன் | 0 | 7 | 16 | 48 | 0 |
| | சிங்க சூரியன் | 0 | 4 | 6 | 0 | 0 |
| | கடக சந்திரன் | 1 | 5 | 19 | 12 | 0 |
| | மிதுன புதன் | 0 | 7 | 16 | 48 | 0 |
| | இடப சுக்கிரன் | 1 | 1 | 18 | 12 | 0 |
| | மேட செவ்வாய் | 0 | 5 | 26 | 24 | 0 |

## 4-ம் பாதத்திற்கு

| நட்சத் திரம் | தனுர் குரு தசை வருஷம் 10 புத்தி | வருஷம் | மாதம் | நாள் | நாழிகை | விநாழிகை |
|---|---|---|---|---|---|---|
| கடைநாள் புனர்பூசம் விசாகம் பூரட்டாதி ஆகிய இந்நாள்களுக்கும். | மீன குரு | 1 | 0 | 0 | 0 | 0 |
| | மேட செவ்வாய் | 0 | 8 | 12 | 0 | 0 |
| | இடப சுக்கிரன் | 1 | 7 | 6 | 0 | 0 |
| | மிதுன புதன் | 0 | 10 | 24 | 0 | 0 |
| | சிங்க சூரியன் | 0 | 6 | 0 | 0 | 0 |
| | கடக சந்திரன் | 1 | 7 | 6 | 0 | 0 |
| | கன்னி புதன் | 0 | 10 | 24 | 0 | 0 |
| | துலா சுக்கிரன் | 1 | 7 | 6 | 0 | 0 |
| | விருச்சிக செவ்வாய் | 0 | 8 | 12 | 0 | 0 |

# பெண்களின் ருதுஜெனன கால பலன்கள்

## பெண்களின் பொது அம்சம்

பெண்களின் ஜாதகங்களுக்கு முதலில் பார்க்க வேண்டியது எப்படியெனில் சுக்கிரன், சந்திரன் ஜெனன காலத்தில் இலக்கினாதிபதியுடன் கூடியிருந்து ஆட்சி உச்சம் பெற்றிருந்தால், ஷ கிரகங்களின் பலாபலன்களைக் கொண்டு பலாபலன்களைக் கூறவேண்டும்.

## பெண்களின் உருவ அமைப்பு

அவர்களுடைய சொது அம்சங்கள் ஜெனன காலத்தில் சந்திரன் இருக்கும் ராசியைக் கொண்டும், ஏழாமிடத்தைக் கொண்டும் அவர்களுடைய குணாகுணங்களை ஆராய்ந்து சொல்ல வேண்டும்.

எட்டாமிடத்தைக்கொண்டு அலங்கலியத்தையும் ஏழாமிடத்தைக் கொண்டு சுக துக்கத்தையும் பர்த்தாவினுடைய பலாபலன்களையும், ஒன்பதாமிடத்தைக் கொண்டு புத்திர சம்பத்து முதலியவைகளையும் அறிய வேண்டும்.

## வாரப்பலன்கள்

### ஞாயிற்றுக்கிழமையின் பலன்

1 ஞாயிற்றுக்கிழமையில் ஜெனனமானாலும் ருதுவானாலும், உஷ்ண சரீரமுடையவள் நாமப்பிரீதியுடையவள் கணவனுக்கு அன்புடையவள் புத்திசாலித்தனமாக நடந்து கொள்வாள் படபடப்புடையவள், மாநிறமான சரீரமுடையவள் சரீரத்தில் வலதுபுறத்தில் மருவுடையவள்.

### திங்கட்கிழமை பலன்

2 திங்கட்கிழமை ஜெனனமானாலும் ருதுவானாலும், அழகான சரீரமுடையவன் சரீரத்தில் இடங்களில் ரோமம் சுருண்டு செம்பட்டை நிறமாக இருக்கும் கணவனுக்கு

கூடியரோக வியாதியுண்டு அதனால் பெண்ணுக்கும் பாதிக்கும் வாசனைத்திரவியங்கள், நல்ல வாசனையுள்ள புஷ்டம் இவைகளினால் தன்னை அலங்காரம் செய்துகொள்வாள்.

## செவ்வாய்க்கிழமையின் பலன்

3. செவ்வாய்க்கிழமையில் ஜெனனமானாலும் ருதுவானாலும் அழகான வர்ணப்புடவைகளில் பிரியமுடையவள் குடும்பத்தில் பிணியினால் செலவு ஏற்படும் கோபமும், சில சமயம் சந்தோஷமும் உடையவளாக இரும்பாள் அற்ப ஆயுளுடையவள் இவளால் கணவனுக்குத்தரித்திரமும் வறுமையுமான வாழ்வே தவிர சந்தோஷமான வாழ்வில் இருக்க முடியாது.

## புதன் கிழமையின் பலன்

4. புதன்கிழமையில் ஜெனன மானாலும் ருதுவானாலும் கணவனுக்கு யோகம் குழந்தைகள், பெருமை கல்வி பெருமை புத்தியுடையவள் சரீரத்தில் அற்ப ரோகம் அடிக்கடி வந்து துன்பமடைவாள் ஆடை ஆபரணம் உடையவள் தன்கணவனுக்கும் குடும்பத்தில் செலவுகள் அதிகம் ஏற்படும்.

## வியாழக்கிழமையின் பலன்

5. வியாழக்கிழமை ஜெனனமானாலும் ருதுவானாலும் தன் கணவனுக்கு இனியவள் கற்புடையவள் தெய்வபக்தியுடையவள். அதிகமான புத்திரசம்பத்துடையவள் குழந்தைகளுக்கு கல்விஞானம் உண்டாகும் உயரமும், அழகுடையவள் கணவனுக்கு நல்வாழ்வு உண்டாகும்.

## வெள்ளிக்கிழமையின் பலன்

6. வெள்ளிக்கிழமை ஜெனனமானாலும் ருதுவானாலும் நல்ல அழகு ஆடை ஆபரணம், வாசனைத்திரவியம் இவை

களில் பிரியமுடையவள் செல்வமுடையவள் புத்திசாலி தன பாக்கியமுடையவள்

## சனிக்கிழமையின் பலன்

7. சனிக்கிழமையில் ஜெனனமானாலும் ருதுவானாலும் மந்தபுத்தி மலடி, புத்திரர்கள் பிறந்துமரிக்கும் கணவனுக்கு அரிஷ்டம் குடும்பத்தில் நஷ்டம், வறுமை இவைகளுண்டாகும்.

## ருது மாதப்பலன்கள்

1 சித்திரைமாதம்-ருவோகில்-கணவனுக்கு ஆகாது
2 வைகாசிமாதம்-ஷ-சுகமுடையவள்
3 ஆனிமாதம்-ஷ-புத்திரசம் பத்துடையவள்
4 ஆடிமாதம்-பஜபுருஷாகளை இச்சிப்பாள்
5 ஆவணிமாதம்- ஷபுத்திர சம்பத்துடையவள்
6 புரட்டாசிமாதம்-மேற்கடி-பதிவிரதை
7 ஐப்பசிமாதம்-மேற்படி-குழந்தை ஜெனனமாகி (மரித்து விதவையாவாள்
8 கார்த்திகைமாதம் மேற்படி கோபி - பல புருஷர்களை (இச்சிப்பாள்
9 மார்கழிமாதம்-மேற்படி புத்திரசம்பத்துடன் வாழ்வான்
10 தைமாதம்-மேற்படி புண்ணியவதி, தெய்வ (பக்தியுடையவள்
11 மாசிமாதம்-மேற்படி-தன, தான்ய சம்பத்துடன் வாழ்வாள்
12 பங்குனிமாதம்-மேற்படி-புத்திரசம்பத்து தீர்க்காயுளுடையவள்

## திதியின் பலன்

1 பிரதமையில்-ருதுவானவள்-சோரமுடையவள்
2 துதிகையில்-மேற்படி-அழகுடையவள்

| | | |
|---|---|---|
| 3 | திருதியையில்— | மேற்படி-இன்பமுடையவள் |
| 4 | சதுர்த்தியில்— | மேற்படி-சத்துருவுடையவள் |
| 5 | பஞ்சமியில்— | மேற்படி-புத்திர சம்பத்துடையவள் |
| 6 | சஷ்டியில்— | மேற்படி-ஆசாரமுடையவள் |
| 7 | சப்தமியில் — | புத்திரசம்பத்துடையவள் |
| 8 | அஷ்டியில்— | மேற்படி-குழந்தை பிறந்து இறக்கும் |
| 9 | நவமியில்— | மேற்படி கிலேசமுடையவள் |
| 10 | தசமியில்— | மேற்படி தருமசிந்தனையுடையவள் |
| 11 | ஏகாதசியில்— | மேற்படி பலமுடையவள் |
| 12 | துவாதசியில்— | மேற்படி கோபமுடையவள் |
| 13 | திரையோதசி— | மேற்படி கற்புடையவள் |
| 14 | சதுர்த்தசியில்— | மேற்படி சோரமுடையவள் |
| 15 | பௌர்ணமியில் | மேற்படி—இடருடையவள் |
| 16 | அமாவாசையில்— | தரித்திரமுடையவள் |

## நஷத்திரப் பலன்கள்

### அசுவனியின் பலன்

அசுபதி நக்ஷத்திரத்தில் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகினும் அவள் அன்னியருக்கு உதவி செய்வாள். குறைசரீர பாவத் தொழிற் செய்வாள் மத்திப வயதிலேயே பர்த்தாவுக்குத் தோஷமடையவள் புத்திர தோஷமானவள். மெல்லிசான சரீரமுடையவள், துர்க்குணியாவள். முன் பொருளையும் சௌக்கியத்தையும் விவாதித்தோரென் அறிக

### பரணியின் பலன்

பரணிநக்ஷத்திரத்தில் ஜெனனமாகினும் அல்லது இருது வாகினும் அவள் சரீர கனமுடையவள் மகாதோஷ முண்டு மாகவு விருத்தி பெறின் பர்த்தாவைப் பாலிப யௌவனத்

தில் இழப்பள் பலவிதவகங்காரி பலவித வெண்ணமாவள் முன் கடை பிரபல யோகமாவள் யாவரையும் நிகரின்றி யெண்ணுவாளென வறிக.

## கார்த்திகையின் பலன்

கார்த்திகை நக்ஷத்திரத்தில் ஜெனனமாகிநும் அல்லது இருதுவாகிநும் அவள் தேகாந்தியுடையதள் புருஷநுக்கு மேலான வதிகாரமும் செல்வமுடையவள் தனமுடையவள் குடும்ப நஷ்டம் மரண துக்கியவள் உஷ்ண சரீரதியாதி மோகியாகிப் புத்தியும் கல்வியும் அல்லது கல்வி மானை இச்சித்தடைவள் சென்ற நாள் முதலே வயோதிகமுடையவள், மகவு அதிக லாபமுடையவளாமென வறிக.

## உரோகணியின் பலன்

உரோகணி நக்ஷத்திரத்தில் ஜெனனமாகிநும் அல்லது இருதுவாகிநும் அவள் நல்ல ரூபியாவள் விழியும் மயிரும் அழகுடையவள் உரிசிற் பிரியமாவள் கோபமில்லாள் செல்வமும் தன் குடும்ப வழியாற் பிரபலமுடையவள் பின்காலத்திற் தன நஷ்டமடைந்து நல்சுகியாவள். கணவநுக்கு இளையாளாவாள் வஸ்திராபரணாலங்காரநிபோகியாகி வாழ்வாளென்றும் மகவு தோஷமுடையவள் பாற் பாக்கிய முதலிய வாகனமுடையவள் எப்பொழுதும் மேலான விச்சையுடன் லபிதமடைவளென வறிக.

## மிருகசீரிடந்தின் பலன்

மிருகசீரிட நக்ஷத்திரத்திற் ஜெனனமாகிநும் அல்லது இருதுவாகிநும் அவள் புத்திரவதிக லாபமுடையவள். பின் ஆயுள் விருத்தி அற்பமாவாள் பர்த்தாவுக் கரிஷ்டமுடையவள் பாற்பாக்கியாதி செல்வமும் விவாத வழக்குடையவள் தான தருமியாவாள் புராணாதி ஞானங்கள் கல்விப் பிரியவதியாவள் சுருண்டமயிரும் முகபம்தச் சுருக்க வழகுடையவளாவள் பிறந்த வம்சாவழி விருத்தியும் பர்த்தாவுக்கு

போகத்தையும் பிரமிக்கும் போகமுடையவள் சீலமுடைய வள் சுகசரீரியா மெனவறிக.

## திருவாதிரையின் பலன்

திருவாதிரை நக்ஷத்திரத்தில் ஜெனனமாகினும் அல்லது ருதுவாகினும் அவள் பர்த்தாவகை நஷ்டமும் பிணியு மடைவள் உரோகி குடும்ப பகையாவள் வயதாக வயதாகப் பொருள் விருத்தி குன்றிநும் சுகமடையவள், கலக்கமுடைய குலேசிபுத்திர விருத்தியில்லாள் சுகமில்லாள் பெண்வழியி னாற் சுகமடைவளென வறிக

## புனர்பூசத்தின் பலன்

புனர்பூச நக்ஷத்திரத்தில் ஜெனனமாகிலும் அல்லது இருதுவாகினும் அவள் செல்வமுடையவள் அதிகமோகி பிறராலுந் தன விருத்தியுடையவள். அதிகாரஞ் செய்பவள் வெண்மைகளிலதிக பிரியமுடையவள் சூடு முதலிய விரண நோயும் விஷநோயமுடையவள் பிறந்தவழி நஷ்டமடைவள் புத்திரதோஷ முடையவளென வறிக.

## பூசநக்ஷத்திரத்தின் பலன்

பூச நட்சத்திரத்தில் ஜெனனமாகிநும் அல்லது ருதுவா நும் அவள் அதிருபமுடையவள். யார் மேலும் பிரியமடை வள், புத்தி விசாலமுஞ் செல்வமும் முகமும் சிரோபாரவழ கும் விருத்தியுடையவள் இரண்டென்நும் பர்த்தா பிதுர் வழிகளின் பிரபல விருத்தியாவள், அனேக வஸ்திராபரண பூஷணமடையள் சிறுவரிசையான மகவுடையவள். மத்திய காலத்திற் துக்கமுடையாள் முன்நும் பின்நுமான வயது களிற் சுகமும் பர்த்தாவுக்கு யோகமு முடையவளெனக் காணல் வேணடுமென வறிக.

## ஆயிலியத்தின் பலன்

ஆயிலிய நட்சத்திரத்தில் ஜெனனமாகிநும் அல்லது இருதுவாகிநும் அவள் புத்திரவிருத்தி கிடையாதவள் கோபி

சத்துருவுடையாள், குடும்ப கலகமும் நஷ்டமும் வம்சக்ஷயமு மடையவள் தேகவிளைப்பும் பிணிபீடையுங்கர்ப்ப தோஷ மும் பர்த்தா வாயு பிடை நஷ்டமுமுடையவளென வறிக.

## மகத்தின் பலன்

மக நட்சத்திரத்தில் ஜெனனமாகிலும் அல்லது இருது வாகிநும் அவள் பாலியத்திலேயே தகப்பன் முதலிய குடும்ப மரணக்கிலேசி திடசரீரியும் குரூரமன முடையவள், யாருக்கு மஞ்சாள்; புத்திர விருத்தியு பார்த்தா விருத்தியு முள்ளவன் செல்வக் குறைவுடன் முன் வயதில் வாழ்ந்து பின் சுகமும் தனத்தையும் படைப்பள் சிலநாள் கஷ்டமுஞ் லேநாட் சுகமும் பெறுவள். மானமற்பமுள்ளவள் மேக சிநாய் முதலிய உதரபீலையுடையவன். தேவதாபாதை யுடையவன்; மனவுறுதியுள்ளவன்சரீரகாத்தரமும் உயர்ந்த சரீரமுடையவளென வறிக.

## பூரத்தின் பலன்

பூர நட்சத்திரத்தில் ஜெனனமாகிநும் அல்லது இருது வாகிநும் அவள் உயர் சரீரமுனைத்த வடிவமும் சிவப்பு நிறமும் போக சகியாகியும் மறுமணமல்லது அகாலபுத்திர விருத்தியுடையவள் செல்வ முன்னநுபவித்துப் பின் சில நாள் கஷ்டமடைவள் பிறந்த குடும்ப சயத்தால் துக்கியா வாளென வறிக.

## உத்திரத்தின் பலன்

உத்திர நட்சத்திரத்தில் ஜெனனமாகிலும் அல்லது இருதுவாகிநும் அவள் பர்த்தாவகை நஷ்டமும் குடும்பச் சேதமும் புத்தியினமும் பெருத்த வலது உயர்ந்த சரீரமும் அதியோகி மோகியாகியும் தனயோகப் பிரபவம் சயோகத்தி லுதித்தவளாவாள் புத்திர விருத்தியுடையாள் பர்த்தாவுக்கு இளளாற் செல்வமோங்குந்தருணியாவாள் பக்தியுங் குணமு மேலாவாளென வறிக.

## அஸ்தத்தின் பலன்

அஸ்தநட்சத்திரத்தில்ஜெனனமாகினும்அல்லது இருது வாகினும் அவள் மானியாவள் உருபவதியுஞ் செல்வமுடைய வள் பர்த்தா விருத்தியடையாள் புத்திரதோஷமும் புருஷ குடும்ப க்ஷயமும் பலவகை வருத்தமடையவள் க்ஷீண சரீர யென்றும் கவலையடயவளாமென வறிக.

## சித்திரையின் பலன்

சித்திரை நட்சத்திரம் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகிலும் அவள் பர்த்தா வம்சாதுக்ஷயமுடையவள விரோதவாதம் புரிபவள், கடூர்கோபி பந்து விரோதியாவள்; ஈனகாரியப் பிரவேசியாவள்: தரித்திராதிப் பீடையும் முன் சுகமும் பின் துக்கமடைவள் ரூபக் குறையுடையவளென வறிக.

## சுவாதியின் பலன்

சுவாதி நட்சத்திரத்தில் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகினும் அவன் ரூபலாவண்ணிய காந்திசந்தோஷித முடையவள் தியாகி புத்திர நஷ்டமுடையவள் தோஷமுள் ளவன் அதிகாரஞ் செய்யுங் குணத்தள், மேலாகி வாழ்வள் புருஷனுக்குவதிகக் கீர்த்தியுஞ் செல்வமுமாவாள். சுகசரிர தெய்வபக்தியும் ஞானமுடையவள் அதிக வேலைகளிலும் முயற்சிகளிலும் பிரியமு மேன்மையுடையவளென வறிக.

## விசாகத்தின் பலன்

விசாக நட்சத்திரத்தில் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகினும் அவள் அநேக மகவுயோகமுஞ் செல்வமு முடையவள் செல்வி ஸ்திரபுத்தி யுடையவள் பர்த்தாவிற் கனுகூலி மிகவும் பிரபலயோக மடைவளென வறிக.

## அனுஷத்தின் பலன்

அனுஷ நட்சத்திரத்தில் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகினும் அவள் பர்த்தாவுக்கு நஷ்டமுடையவள்

தரித்திரமும் பகையுடையவன் தேகரோகமாவன் புத்திர நஷ்டமுண்டாகும் குள்ளமான சரீரமுடையவளாகுமென வறிக,

## கேட்டையின் பலன்

முகட்டை நட்சத்திரத்தில் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகினும் அவள் வம்ச க்ஷயமும் பர்த்தாவரிஷ்ட தோஷமும் வைதவ்யியமடைவள் உரோக முடையவன் கோபி ஈனமுடையவட ாகினும் யோகமுடையவளாக முன் வயசிலடைந்து பின் தரித்திரமடைவள் உருபக்குறைவிடன் வாழ்வாளென வறிக

## மூலத்தின் பலன்

மூல நட்டத்திரத்தில் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகினும் அவள்தேக காந்திபுடையவள் புத்திர விருத்தியும் செல்வமுடையவளாவள் சில காலம் வருந்தியும் பிரி முத வியபுத்திரதோஷமுடையவள் கணவனுக்கும் அவர்களின் பகைக்குந் துக்ரகதி பாத்தியமடைவள் மத்திய காலத்தில் வங்கிலியக்குறைவையடைவா ளெனவறிக.

## பூராடத்தின் பலன்

பூராட நட்சத்திரத்தில் ஜெனனமாகினும் அல்லது இருது வாகினும் அவள் பால் முதலிய பாக்கியஞ் செல்வமு டையவள் தன்வகை நாசமும் பர்த்தாவைப் பிரபலமடைய வள் மிகவும் அதிகாரியாவள் அதிபோகமோகி உருபவதி யும் ஸ்தூல சரீரமுடையவள் தருமப்பிரிய முடையவளா வளென வறிக

## உத்திராடத்தின் பலன்

உத்திராட நட்சத்திரத்தில் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகினும் அவள் தயை முதலிய புத்தி கல்வி யறிவுங் குணமுடையவள் செவ்வப்பெருக்கு மனப்பெருக்கு மத்தி பத்தில் அடைவள் அரசி அல்லது மன்னரைப்போ லொத்த வர்களை மனப்பள் தியாகியாகியும் எவரையும் காப்பாற் றுங்குணம் நல்லருபமும் பயிர் சுருண்டிருக்கும் விழிலக்ஷண விலாசமுடையவ ளெனவறிக.

## திருவோணத்தின் பலன்

திருவோண நட்சத்திரத்தில் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகினும் அவள் தேவதா பக்தியும் புதுநிறமும் உயர

மான சரீரமும் கியாதியும் பெறுவள் வஸ்திராபரணாதிகளின் மேல் பிரியமுடையவள் வாக்கு விருத்தியும் பல தொழிலுஞ் செய்யப் புத்தியுடையவள் கல்விமேன்மையிற் கனமுடையவள் சிலகாலஞ் செல்வமும் சிலகாலஞ் செல்வக்குறைவைப் பொருந்துவள் சஞ்சாரியென வறிக.

## அவிட்டத்தின் பலன்

அவிட்ட நட்சத்திரத்திற் ஜெனனமாகிலும் அல்லது இருந்துவாகியும் அவள் ஜெனனவிடத்தால் தனயோகமடைவள் செல்வமும் பொருளும் பாலியத்தனுபவித்துஞ் சிலகாலஞ் சுகமடைந்தும் சிலகாலம் வரிந்தி இளைப்பள் பர்த்தாமேல் பிரியஞ் சிலகாற்றோன்றும் பிணியற்பமுடையவது மகவைப் பெறுவது ஆகியும் விருத்தியடையாத புத்திரக் கிலேச மாவாளென வறிக.

## சதயத்தின் பலன்

சதய நட்சத்திரத்தில் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகியும் அவள் புத்திரதோஷம் கணவருக்கு அடங்கி நடக்காது மாச்சரியதும் முன் தரித்திரத்தை யனுபவிப்பாள் குடும்ப விருத்திக் குறையும் மோகிபோகியாவது செல்வமுஞ் சுகத்தையும் பின்வயதிலனுபவிப்பது கருமைகலந்த மாநிறமான சரீரமும் கீர்த்தியும் பெற்று வாழ்வாளென வறிக.

## பூரட்டாதியின் பலன்

பூரட்டாதி நட்சத்திரத்தில் ஜெனனமாகியும் அல்லது இருதுவாகியும் அவள பாற்பாக்கியமும் குடும்ப தாய்வழிச் செல்வமடைவத மங்கிலிய விருத்தியும் புத்திரலாபமும் பிரபலமாகவடைவது தனயோகசாலியாவது யாவருக்கும் மேலான விருத்தியுங் கல்வி மேன்மையிற் பிரியமுடையது வஸ்திராபரண பூஷணமுடையவளென வறிக.

## உத்திரட்டாதியின் பலன்

உத்திரட்டாதி நட்சத்திரத்தில் ஜெனனமாகியும் அல்லது இருதுவாகியும் அவள் சமசரீர தேக காந்தியுடையவது பாலியங்களிற் செல்வமும் ஜெனன ஸ்தானத்தினாற் தனலாபமுஞ் செல்வமும் பாற்பாக்கியமுடையது புத்தி விருத்தியைப் பெறுவது தான் பர்த்தா குடும்பஞ் சேர்ந்தும் பின் வயதிலும் பலவிதமான கஷ்ட நஷ்ட சோகமடைவது செல்வங் குன்றுதலாற் சில நாள் வலிந்தியிளைப்பளென வறிக.

### இரேவதியின் பலன்

இரேவதி நட்சத்திரத்தில் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகினும் அவள் மிகவும் பாக்கியமுடையவது செல்வத்தினால் மனோதைரியமும் உருபலாவனிய சரீரபெலனும் காந்தியான மோகனவதியாவது பர்த்தாவுக் கதிக இராஜயோகமும் தனலாபமும் சேரும் புத்திரரைப்பெற்றுச்சுகமாக வாழ்வது எனமேலோர் கூறுகின்றன ரெனவறிக.

கவி

உத்திராட மாதியாக வாறுமாறு முத்தமம்
பித்தனார் பிறந்தனளு பின்னையாறு மத்திமம்
அத்தனோடு சித்திரை யமாந்த வாழு குன்றிடும்
மற்றோராறு நாள் கடம்மின் மங்கைநூலிழப்பளே

## இலக்கின பலன்களாவன

### மேஷலக்கின பலன்

மேஷ லக்கினத்தில் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகினும் அவள் சிவப்பு புதுமையான தேகவருணமுஞ் சமசரீரமுடையவன் குலத்துக்கு மூத்தோளாவது அனேகமான மன்னர் பூஜிதம் உடையவள் புத்திர தோஷமடைவள் பலவிதமான செல்வபோக முண்டாமென வறிக

### இரிஷபவிலக்கின பலன்

இரிஷப விலக்கினத்தில் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகினும் அவள் புத்தி விசாலமும் கல்விமேற் பிரியமாவது அநேக தன வஸ்திராபரணதி செல்வமுடையவள் குடும்பமேன்மையுஞ் சுகுணவதியாகியும் பிரபல வெண்ணமுடையவளாவளென்றும் புத்திரக் குறைவை யடைவள் தேகதிட உல்லாசியாமென வறிக

### மிதுன விலக்கின பலன்

மிதுன லக்கினத்தில் ஜெனனமாகிலும் அல்லது இருதுவாகிநும் அவள் லட்சணவதியாகியும் போகியாகியும் பெண்பிரஜை அதிகமுடையவன் மத்திய காலங்களில் பர்த்தாபீடையுடையவள் யோகமடைவளென வறிக

### கடக விலக்கினத்தின் பலன்

கடக விலக்கினத்தில் ஜெனனலக்கினமாகினும் அல்லது இருதுவாகினும் அவள் சஞ்சாரு மிருதுவாக்குங் கல்வியுடையவள் மிகவும் பிரபல செல்வமும் யோகமுமுடையவள்

புத்திரவிருத்தி யுடையவளாவள் வஸ்திராபரண முடைய வளாவாளென வறிக.

### சிம்மவிலக்கின பலன்

சிம்மவிலக்கினத்தில் ஜெனனமாகிலும் அல்லது இருது வாகினும் அவள் திடபுத்தியுமுடைவள் பெரியோர் புத்தியுஞ் சிரத்தையுடையவள் மேலான உத்தியோகபக்தி சத்தியும் கல்வியிற் பிரியவாஞ்சையும் அடைவள் புத்திரதோஷமடைவள் பர்த்தாவுக்கு வியாதியுண்டாகிச் சுகமாடைவளென வறிக.

### கன்னியாலக்கின பலன்

கன்னியாலக்கினத்தில் ஜெனனமாகிலும் அல்லது இருதுவாகிநும் அவள் பார்த்தாவின் பக்தியுள்ளவள் செல்வத்துடன் யோகமுள்ளவள் தனலாபமும் பிரபல யோகமுடையவள்; கல்வித்திறமையும் பத்திய உடையவள் வஸதிராபரணாதி செல்வமும் அநேகர்களின் அனுகூலத்தையும் பெறுவள அதிகாரமும் பிரபலமுடையவள் பார்த்தாவைச் சேருவாளென வறிக.

### துலாலக்கின பலன்

துலாலக்கினத்தில் ஜெனனமாகிநும் அல்லது இருது வாகிநும் அவள் எவ்விதத் தொழிலுங் கைத்தொழும் விவேகமுடையவள் பர்த்தா புத்திரதோஷமுடையவள் கும்டுபக்ஷய வதர்மியாவள் காலதாமத புத்திரரையடைவள் பின் தரித்திரமடைவளென வறிக.

### விருச்சிகலக்கினத்தின் பலன்

விருட்சிக இல்க்கினத்தில் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகிநும் அவள் கடுஞ்சொற்படி புருடநுக்கடங்காள் கருமை உருவமும் பெருஞ்சரீரியாவள் புத்திர நஷ்ட முண்டு பர்த்தாவகையழியும் பொருட்குன்றுதலும் பயங்கரமில்லாத வள்குருபியாவள் ..திகமாகச்சுகமடையமாட்டாளெனவறிக

### தனுசு லக்கின பலன்

தனுசுலக்கினத்தில் ஜெனனமாகினும் அல்லது இருது வாகினும் அவள் முகவஜீகரமும் பாவியபெலமுடைய சரீர வஞ்சகமுடையவள் தனார்ச்சிதா திரமலதிகக் கருத்தும் தனயோக பிரபலமுடையவள் இராஜயோகமாகி வாழ்வாள் இரண்டுவித குடும்பதன முடையவள் புத்திர விருத்தியும் பெற்றழப்பள் பின் பின் பிரபலமுண்டாகுமென வறிக.

## மகரவிலக்கின பலன்

மகரவிலக்கினத்தில் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகினும் அவள் பர்த்தாவுக்குந் தனக்குஞ் சுகமில்லாள் குடும்ப பகையுடையவள் மனத்துட் கிலேசமுடையவள் தேகத்திற் பிணியா லினைப்பள் தேகவாதைகளாலுந் தேக பாதை சிலகாலத்திலுண்டாகும் யோகமுடையவள் ஜெனன குடும்ப தரித்திரமும் பிரஜாவிருத்திகளு முள்ளான் கருமை பொது நிறத்துடையாள் சமசரீரியாவள் சிலகாலந் தரித்திரத்தையுடையவள் அமங்கிலியாகி மரிப்பாளென வறிக.

## கும்பவிலக்கின பலன்

கும்பவிலக்கினத்தில் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகினும் அவள் தேகதிடமுஞ் தரித்திரமும் உடையவள் அதிபோக மோகியாவாள் செல்வமும் பாக்கியமும் தாம தகுணமுடையவள் தேகங்கருமை அல்லது புதுநிறமுடையவள் கிலேசியாம் புத்திரரால் மனத்துயரமடைவளென வறிக

## மீன இலக்கின பலன்

மீன லக்கினத்தில் ஜெனனமாகினும் அல்லது இருதுவாகினும் அவள் குடும்ச விருத்தியுடையவள் செல்வமும் உடைமையும் ஆபரணாதிதனமும் மேலானபர்த்தா சுகமும் மிகவு மேன்மையுடையவள் பிறர் குடும்ப விருத்தியும் கணவன் வழிபழிவுமுடையவள் என்றும் சுகத்தை பின்னடைவள், புத்திரலாபமதிக விருத்தியடைவாளென்றும் அவ்வழித் துக்க பலன்களையும் அடைவள் எனக் காணவேண்டும்.

## ஆருடந்திக்கு அறியும் வகை

| | | |
|---|---|---|
| கிழக்கு வெள்ளைப்புடவை சோரம் போவாள் | பிள்ளை | 7 |
| தென்கிழக்கு கருப்பு-புடவே | ,, | 1 |
| தெற்கு பீலப்புடவை மலடியாகவிருப்பன் | | |
| தென்மேற்கு வெள்ளைப்புடவை துரோகி | ,, | 4 |
| மேற்கு அழுக்குப்புடவை நல்லது | ,, | 6 |
| வடமேற்கு மஞ்சள் கலந்த சிவப்புப்புடவை சுக்களத்தியுடைவள் | | 2 |

| | | | |
|---|---|---|---|
| வடக்கு | துவரைவர்ணம் | | |
| | புடவை | செல்முண்டு | |
| வடகிழக்கு | நல்லபுடவை | தரித்திரம் | ,, 10 |

### இருது சாந்தி

ஸ்திரீ ருதுவான திதிவார நக்ஷத்திரயோககரண லக்கின கிரக தோஷங்கள் நிவர்த்தியாகும் பொருட்டுத் தம்தம் வருணங்களுக்குரிய விதிப்படி இருதுசாந்தி செய்து பின்பு கருப்பாதானஞ் செய்ய வேண்டும் விவாகத்திற்கு முன் ருதுவான ஸ்திரீகளுக்கு விவாகமானபின் ருதுசாந்தி செய்து தருப்பாதானஞ் செவ்யவேண்டும்.

ஸ்திரீ புருஷர்களுடைய ஜன்ம நக்ஷந்திரங்களுக்கு 7-வது நட்சத்திரங்களும் 8 வது ராசியில் சந்திரனிருக்கும் நட்சத்திரங்களும் திதிகளில் சஷ்டி அஷ்டமி ஏகாதசி சதுர்த்தசி பூரணை அமாவசியை நட்சத்திரங்களில் அசுதனி பரணி கிருத்திகை ஆயில்யம் மகம் பூரம் கேட்டை ரேவதி யோகங்களில் வியதபாதம் வைதிருதி இலக்கினங்களில் விருஷபம் கடகம் கன்னி விருச்சிகம் மகரம் மீனம் இவைகள் அல்லாத காலங்களில் சுபம்.

---

## பாலரிஷ்டம்

### வாசகம்

ஒரு பிரகஜ ஜனிக்காலக்கினத்திற்கு விரையஸ்தானமாகிய பன்னிரெண்டாமிடத்தினும் ஆயுத்தானமாகிய எட்டாமிடம் இவைகளில் க்ளத்திரக் காரகனாகுய சுக்கிரனும் புத்திரச்காரகனாகிய குரு இவர்கள் தனித்து நிற்க ஜாதகனுக்கு ஆயுள் தீர்க்கமாகும் அவம்கள் சத்துரு ஸ்தானமாகிய 6-ஆமிடத்திலும் மேற்கண்ட எட்கிமிடத்திலுமிருக்கிற கெண்டஞ் சம்பவிக்கும் இப்பலன் கிரங்களின் வலிவறிந்து கூறவேண்டுமென வறிக.

மாதுரு ஸ்தானமாகிய 4 ஆமிடத்தினும் குடும்ப ஸ்தானமாகிய 2 ஆமிடம் இவைகளில் சந்திரன், குரு இவர்கள் நிற்க ஜாதகனுக்கும் தீம்புண்டாம் ஆயுள்காரகனாகிய சனியும் சகோதரகாரனாகிய செவ்வாயும் கூடி மேற்கண்ட ஸ்தானங்களிலிருக்க தீம்புண்டாகும் ஒருவருக் கொருவர் எதிராக நிற்கில் மரணஞ் சம்பவிக்குமென வறிக.

சகோதர ஸ்தானமாகிய 3ஆமிடத்திலும் 4,8 இந்த ஸ்தானங்களில் சனி, செவ்வாய் இவர்கள் நிற்க இவரைப் பத்தாமிடத்தோன் பார்க்க ஜாதகருக்கு வருடம் ஒன்றில் கண்டஞ் சம்பவிக்குமென வறிக.

பாம்புஞ் சனியும் புத்திர ஸ்தானமாகிய 5 ஆமிடத்திலிருக்க ஜாதகருக்கு; தீப்புண்டாகும். குலநாசமு அன்னையர்க்குத் தோஷமும் செய்தொழில் கெடுதியும் கலத்தினாற் பயமும் சலிப்பும் இவை முதலானவையும் வயது வருடம் பன்னிரண்டுக்குள் நேருமென வறிக.

சனி இராகு இவர்கள் கூடி ஒரு ராசியிலிருக்க அவர்களுடன் சூரியன் கலக்க ஜாதகருடைய பிதர்களுக்குத் தோஷம் பந்துக்களில் மரணமும் வயது வருடம் ௬-க்குள் நேருமென வறிக.

செவ்வாயும் சந்திரனுங்கூடி ஒரு ராசியிலிருக்க அவருடன் புதன் கலக்க சந்திரனுக்கு 7 ஆமிடத்தில் சனி நிற்க ஜாதகருடைய மாமனும் மாதுரு வம்சமும் நாசமாகுவர் வயது வருடம் 6க்குள்ளென வறிக.

சுக்கிரனுஞ் சனியுங்கூடி ஒரு இராசியிலிருக்க அவர்களுடன் சூரியன் கலக்க அவர்க் கேழில் செவ்வாய் நிற்க ஜாதகருக்கு விவாகமானது கூடி ஒரு வருடத்தில் தீப்புண்டாகும் பின்பு எங்குள்ள மாதர்கட்கும் சோரநாயகனாக விருப்பானென வறிக.

குரு, சூரியன் கூடி நிற்க அவ்விராசிக்கு 7ம் இராசியில் சனி செவ்வாய் இவர்கள் நிற்கஜாதகருடையவம்சம் அழிந்து போகும் அவருடன் சந்திரர் கூடிய தாய் தந்தையர்களுக்கு தோஷம் சம்பவிக்கும் வயது ஷ 9க்குள்ளெனவறிக.

களத்திரக் காரகனாகிய சுக்கிரன் 8ஆமிடத்தில் நிற்க அவரை மற்றக் கிரகங்கள் பாராதிருக்க ஜாதகருடைய குலம் நாசமாகியும் கலகமும் துன்பமும் நேர்ந்து கருவானது அற்றும் மனையானது பாழாகியும் போமென வறிக.

சனி செவ்வாய் கூடி நின்ற விராசிக்கு 5-ம் இராசியும் 7-ம் இராசியும் அல்பமாக விருக்க ராசி அல்லது செவ்வாயால் பார்க்கப்பட்ட ஜாதகருக்குத் தீமையுண்டாகும் வயது ஷ 1-க்குள்ளென வறிக.

ஜன்ம லக்கினத்திற்கு 3ஆமிடத்தில் செவ்வாய் நிற்க ஒன்பதாமிடத்தில் சனி நின்ற ஜாதகருடைய உடன் பிறப்பிற்குக் கண்டமென்பர் அது வல்லாமலும் தகப்பனுக்குத்

தோஷம் வயது மாதம் நான்கினுக்கும் காணும் யகைபெற்ற கிரகங்களின் பார்வை யுண்டாகில் மாதாவிற்கு மரணமும் அம்மனைக்குத் தோஷமுண்டாகுமென வறிக.

ஜன்ம லக்கினத்திற்கு 10ஆமிடத்தில் சனி நிற்க சந்திரன் பலவீனமாக 4ஆமிடத்தில் சூரியனிருக்க 7 ஆமிடத்தில் செவ்வாய் நிற்க மற்ற கிரகங்கள் 6 8ல் நிற்க ஜாதகமான பிள்ளையும் மாதாவும் மரணமாவார் அம்மனைக்குத் தோஷமுமுண்டாகுமென வறிக.

ஜன்ம லக்கினத்திற்கு 6 ஆமிடத்திற் சனி நிற்க அந்த ராசியாதிபதி பலவீனமாக 7 ஆமிடத்தில் சூரியன் பலத்து நிற்க குரு செவ்வாய் இவர்கள் கூடி நிற்க ஜாதகனுடைய தகப்பனுக்குத்தோஷம் நேருவதுடன் ஜாதகன் வயது ஹு ஒன்றில் மரணமாகுவனென வறிக.

ஜன்ம லக்கினத்திற்கு 5-ஆமிடத்திற் சந்திரனுஞ் சனுயுங் கூடி நிற்க 7 ஆமிடத்திற் செவ்வாய் சூரியன் நிற்க ஜாதகனுடைய பாட்டன் பாட்டி தாயார் சுற்றத்தாருடன் ஜாதகனும் வயது மாதம் மூன்றுக்குள் மரணமாவரெனவறிக

ஜன்ம லக்கினத்திற்கு 7-ஆமிடத்தோனும் 2-ஆமிடத்தோனும்அஸ்தமானமாகவிருக்க சந்திரன் 5-ஆமிடத்திலிருக்க உதயத்தில் சனி, பாம்பு குரு செவ்வாய், சுக்கிரன் இந்நால் வருங்கூடி ஜற்ஜாதகமான குழவி வயது ஹு ஒன்றில் பூரணாகுமென வறிக.

ஜன்ம லக்கினத்திற்கு 8-ஆமிடத்தில் குரு நிற்க அதற்கு 7 ஆமிடத்தில் சுக்கிரன் நிற்க, சந்திரன் 3-ஆமிடத்திலிருக்க, உதயத்தில் சனி நிற்க அவருடன் செவ்வாய் கூடிய ஜாதகம் கொஞ்ச நாளில் மரணமாகிய விடுமென வறிக.

இலாபஸ்தானாதிபதியும் அத்தானத்தில்நின்றோனும் அஸ்தயனமாக விருக்க 9-ஆமிடத்தில் சனி நிற்க 4-மிடத்திற் செவ்வாய் நிற்க விறையஸ்தானத்தில் குரு சுக்கிரன், சந்திரன் இம்மூவரும் நிற்க ஜாதகமான குழவியும் தனமும் நரசமாகுமென வறிக.

சந்திரன் மீனவிராசியிலிருக்க குரு சுக்கிரன் இவர்கள் க்ஷிணமாக விருக்கப் பார்வையில்லாததாக மற்றத் தீக்கோட்கள் பலத்து நிற்க ஜாதகமான பிள்ளை உடனே மரணமாகும். இக்குறியானது தப்பாது. ஆதலால் கோட்களின் நிலையறிந்து சொல்வதென வறிக.

சந்திரன் குரு, சுக்கிரன் இவர்தன் கலக்கமில்லாமல் லிருக்க இவர்களைம் பார்போரும் சந்திரன் நின்ற இராசி யசதிபதியும் உறவாக விருக்க ஜாதகனுக்கு நன்மையானது உண்டாகும் நீக் கோட்களாற் தீம்பு செய்வாரே அல்லது மரணமடையச் செய்வார்களென வறிக.

விருத்தம்

ஒருசுபன மிகுந்திருந்தா லொட்டார்க டியர்சூழ்ந்து
இருசுபர் மிகுந்திருந்தா லிரெட்டாப் பகையே செய்யான்
திரிநல மானோர் நன்மை தீயருக் கெட்டார் தூரம்
பெருசுபனாலேயாகிற் போர்சொலக் காணாதியர்:

இதுவுமது

உதயாதி சுங்கன்ராஜ னொளிர்மதிபதியு நல்லோர்
இதமிலாப்பாபி மந்தனிர விசே யெட்யோன்
இதுவைத்து பேருமாகு மெழிற்புதன் சமனேயாகும்
இதிலாகும் நன்மையெண்ணியினிப்பயன்சொல்வாய்மாதோ

இதுவுமது

உதித்தாற் கெட்டோன் காரிமதிக்கெட்டோன் பகையால்
நிற்க
மதித்தந்த விடத்தினின்ற மன்னனும் பகையேயாவர்
கதித்தவர் மேலாய் நின்றாற் கண்டமுந் தோஷமுண்டு
பதித்துடன் மாறிநின்றாற் பாவமுல்லை மாதோ

இதுவுமது

இப்படி நட்பாட்சி யுச்சமு மிந்துபோகும்
பொய்படவிருந்தபேர்கள் போய்பசை நீசமானால்
நற்படி யாகிநின்று வகையே செய்வார் நலந்தரும்
சொற்படி தப்பாதாருந் தொல்புவி யோர்கமதோ

வாசகம்

சந்திரனின்ற விராசிக்கு 6-ம் இராசியில் சனி பாம்புங் கூடி நிற்க. 8-ஆமிடத்தில் சூரியன் செவ்வாய் இவர்கள் நிற்க, ஜாதகமான பிள்ளை மரணமாகுமென வறிக.

சந்திரனுக்கு முன்னும் சனி நிற்க: பின் பக்கம் செவ்வாய் நிற்க. அவர்க்கு ௦ ஆமிடத்தில் பாம்பும் சூரியனுமாக விருக்கில் ஜாதகமான பிள்ளை இரண்டு மாதத்தில் மரணமாகுமென வறிக.

சந்திர லக்கினத்திற்கு 8-ஆமிடத்திற்கு குரு நிற்க விரைய ஸ்தானத்தில் சனி நிற்க அவர்களோமிடத்திற், பாம்ப நிற்க அல்லது சூரியன், செவ்வால் இவர்களிருக்க ஜாதகமான மிகவும் ஆறுமாதத்திற்குன் மரணமாகுமென வறிக.

சதிரன் நின்ற விராசிக்கு முன் சூரியன் நிற்க சந்திரனுக்கு 8-ஆமிடத்தில் சனி நிற்க 7ஆமிடத்தில் செவ்வாய் நிற்க. இலாபனதானத்திற் சுக்கிரனிருக்க 5 ஆமிடத்தில் குரு ஒருவனாகத் தனித்திருக்க ஜாதகமான பிள்ளை மாதம் நாலில் மரணமாகுமென வறிக.

சந்திரன் ஒருவனாக நிற்க. அவர்க்கு 4-ஆமிடத்தில் சனி நிற்க இலக்கினத்திலும் 6-ஆமிடகதிலும் செவ்வாயிருக்க, அவருடன் இராகுகூட குரு சுக்கிரன் இவர்கள் சந்திரனுக்கு 9 ஆம் இடத்திலிருக்க ஜாதகமான குழவியன்றே மரணமாகுமென வறிக.

பூரணச் சந்திரனாக நிற்க அவர்க்கு 8ஆம் இடத்தில் சனியும் செவ்வாய் நிற்க அவர்க்கு 10-ஆமிடத்தில் பாம்பும் சூரியனுமிருக்க சுக்கிரன், குரு இவர்கள் கூடாமல் 0-8 ல் நிற்க ஜாதகமான பிள்ளை எட்டு நாளைக்கு முன்னதாகவே மரணமாகி விடுமென வறிக.

பூரணச் சந்திரனாகவிருக்க அவர்க்கு 7-ஆமிடத்தில் புதன் நிற்க. 10 ல் சனி நிற்க 4ல் செவ்வாய் நிற்க சூரியன் இலக்கினத்திலிருக்க 8 ல் குரு நிற்க ஜாதகமான மகவும் உடனே மரணமாகுமென வறிக.

தேய்பிறைச் சந்திரன் நின்ற விராசிக்கு ஒரு பக்கம் குரு நிற்க அவர்க்கு ஏழாமிடத்தில் சனியும் பாம்புங் கூடி நிற்க தன் ஸ்தானத்தில் செவ்வாய் நிற்க தனக்கு7-ல் நிற்க. சுக்கிரனிருக்க பூரணச் சந்திரனுக்கு 7ல் புதன் நிற்க ஜாதகமான குழவி உடனே சாகுமென வறிக.

பாம்புடன் சந்திரன்கூட அவர்க்கு 7ல் சனியுஞ் செவ்வாயும் நிற்க. செவ்வாய்க்கு 7ல் சுக்கிரனும் புதனுங்கூடி நிற்க. குரு சூரியன் இவர்கள் கூடி 8ல் நிற்க ஜாதகமான குழவி ஆறுமாதத்தில் சாகுமென வறிக.

சனி, சந்திரன், பாம்பு இவர்கள் கூடி நிற்க, 7 ஆமிடத்தில் செவ்வாய் நிற்க, சூரியன், புதன். இவர்கள் குருவிற்கு 8-நிற்க, சுக்கிரன் சனிக்கு 8ல், ஜாதகமான பிள்ளை உடனே மரணமாகுமென வறிக.

சந்திரன் பூரணனாகவிருக்க, குரு பகையாகவிருக்க அல்லது நீசமாக சந்திரன் நின்ற இராசியாதிபதியும் சனியும் சேர சுக்கிரன் அஸ்தமனமாகவிருக்க ஜாதகமான குழவி மரணமாகுமென வறிக.

பூரண சந்திரன் நின்றவிராசிக்கு 2 ஆமிடத்தில் நின் நின்றோனும், சூரியன், சனி இவர்கள் நிற்க 5-ல்செவ்வாய் நிற்க அவர்க்கோடில் சூரியன் நிற்க, 6-ல் புதன் நிற்க 12 -ல் குரு நிற்க சந்திரனும் புதனுங்கூடி நிற்க ஜாதகமன குழவிசாகுமென வறிக,

பாம்புடன் சந்திரன் நிற்க. அவர்க்கு 5-ல் சூரியன் சனி நிற்க இலக்கினத்திற் செவ்வாய் நிற்க 6-ஆமிடத்தில் சுக்கிரனிருக்க 8-ஆமிடத்தில் குரு நிற்க ஜாதகமான குழவி ஆறு மாதத்திற் சாகுமென வறிக.

சனி சந்த்ரநும் உதயத்திநும் மீன விராசியினும் பகை வீட்டினும் மறைப்பாகவும் அஸ்தமனமாகவும் நிற்கில் மரணமாவது நிசமாகும் பகையாகிற் பொல்லாதெனவறிக.

விதியானது அற்றுப்போனவர்களுக்கு சந்திரனைப் பார்த்துச் சொல்லவேண்டும், பதியற்றவர்களுக்குச் சனியைப் பார்த்துச சொல்ல வேண்டும், சனியற்று போகுங் காலில் உதயத்தைப் பார்த்துச் செல்ல வேண்டும், சனி சந்திரன் உதயம் இவைகளைக் கொண்டு பார்க்கில் மரணந் தப்பாமல் அகப்படுமென வறிக.

பாலாரிஷ்டம் முற்றிற்று

## ஜாதக பலாபலன்

### கிரக நிலை

ஜென்ம லக்கினத்திற்கு 5-ஆமிடமாகிய புத்திர ஸ்தானத்தினும் 10 ஆமிடமாகிய கீர்த்தித் தானத்தினும் மாதுர்க் காரனாகிய சந்திரனும் சகோபிக்ரொனாகிய அங்காரகனுமிருக்க ஜாதகன் அம்மானுக்காகவாம் ஆயுட்காரனாகிய

சனி நிற்பாராகின் ஜாதகனுக்காகவும், சந்திரன் நிற்கில் தாயாருக்காகவாம் இலக்கினத்திற் பிதுர்திகாரனாகிய சூரியனிருக்க தகப்பதப்பனுக்காகவாம். சூரியன் சந்திரன் இவ்விருவக்கள் நின்ற விராசிக்கு 7-மிடத்திற் சனி செவ்வாய் இவர்கள் நிற்க அவர்களைப் புத்திரங்காரனாகிய குருபகவான் பார்த்திருப்பாராகில் ஜாதகனுடைய தகப்பனும் தாயாரும் மரணமாவாசகளென வறிக.

ஜென்ம லக்கினத்திற்கு 6 ஆமிடமாகிய சத்துரு ஸ்தானத்தில் பிதுர்காரனாகிய சூரிய பகவானிருக்க அவர் நின்ற விராசிக்கு 7-ஆமித்தில் ஆயுட்காரனாகிய சனியும் சகோரக்காரனாகிய செவ்வாயும் நிற்க ஜாதகனான பிள்ளை மரணமாகும் மேற்கண்ட ஸ்தானத்தில் சந்திரனிருக்க சந்திரனுக்கு 7-ல் சனி செவ்வாயிவர்களிருக்க, பிறந்த பிள்ளை மரணமாகும் ஜன்மலக்கினத்தில் சனியிருக்க சனிக்கு 4-ஆமிடத்தில் செவ்வாய் நிற்க ஜாதகனுடைய தகப்பன் மரணமாகுவன் ஜன்மந்தவிர மற்ற விராசிகளில் நன்மையாகிய கிரகங்கள் நிற்கஜாதகனான பிள்ளை உடனே மரணமாகுவனென வறிக.

ஜன்ம லக்கினத்திற்கு 5-ஆமிடமாகிய புத்திரத் தானத் 3-ம் இராசியில் சகோதரனாகிய செவ்வாய் நிற்க ஜாதகனுடைய பெரிய சகோதரன் மரணமாகுவான் மேற்கூறிய யாசியாகிய 3-ல் சனி செவ்வாயிவர்களிருக்கச் சாதகமான பிள்ளைகளும் மாதுருக்காரனாகிய சந்திரன் களத்திர ஸ்தானமாகிய 7-ஆமிடத்தில் நிற்க ஜாதகனுடைய தாயார் மரணமாகுவன் அந்த 7-ஆமிடத்தில் சூரியனிருக்கத் தகப்பன் மரணமாகுவன் கர்க்கடக விராசிக்கு 3 ஆமிடத்தில் ராசிக்கப்பால் கிரகங்கள் நிற்கினும் விரயஸ்தானமாகிய 12 ஆமிடத்திற் சுபகிரகங்களிருக்க ஜாதகமான பிள்ளை மரணமாகுமென வறிக.

ஜன்ம லக்கினத்திற்கு 8 ஆமிடமாகிய சத்துஸ்தானத்தினும் 7-ஆமிடமாகிய களத்திரஸ்தானத்தினும் 8 ஆமிடமாகிம ஆரிள் ஸ்தானத்திலும் 12ஆமிடமாகிய விரையஸ்தானத்திலும் பிதுர்காரனாகிய சந்திரனிருப்பானாகில் ஜாதனுக்கு மரணஞ் சம்பவிக்கும் சந்திரனும் சூரியனுங் கூடி நிற்கில் ஜாதகனுக்கு இரண்டு கண்ணும் குருடாகப்

போகும் இருவரில் ஒருவர் நிற்கில் ஒரு கண் குருடாகப் போகும் சந்திரன் நின்ற இராசிக்கு 9 ஆமிடத்தில் இராகு கேது இவர்களிலெவரேனு மொருவர் நிற்க ஜாதகனுடைய மாதா மரணமாகுவாள். ஆயுள்தானமாகிய 8 ஆமிடத்தில் சனி செவ்வாய் இவர்களிருக்க சாதகமான பிள்ளை மரண மாகுமென வறிக.

பூராடம், சித்திரை புனர்பூசம் இந்த நட்சத்திரங்களுக் குறிய விராசிகளில் சந்திரன் நிற்க ஜன்ம லக்கினத்தில் செவ்வாய் நிற்க ஜாதகனுடைய தகப்பனுக்குத் தோஷ முண்டாம் மேற்கூறிய நட்சத்திரத்தில் இரண்டாம் காலில் சந்திரன் நிற்கில் தாய்க்குத் தோஷமுண்டாகும் 3ம் பாதத் திலிருந்த ஜாதகமான பிள்ளைககு தோஷம் 4-ம்பாதமாகில் தாயாருடன் பிறந்த அம்மானுக்காகவும 9 ஆமிடமாகிய பாக்கிய ஸ்தானத்தினும் 1-ஆமிடமாகிய இலாபஸ்தானத் திலும் சனி, செவ், இராகு, கேது, இவர்கள் நிற்க மேற் கூறிய தோஷம் தப்புமென வறிக.

பிதுர்க்காரனாகிய சூரியன் நின்றவிராசிக்கு 7-ஆமிட ராசியிலும் ஆறாமிராசியிலும் உச்சக் கிரகங்கள் நிற்க, சிம்மவிராசி லக்கினமாகப் பிறந்த பிள்ளை இராசனாகு வான் ஐந்தி கிரகங்கள் உச்சமாகவிருக்க குருநிற்க ஜாதக மானவன் தீர்க்காயுளுள்ள மன்னனாகுவன் நாலு கிரகங் களுச்சமாக விருக்க கும்பராசி லக்கினமாகச் சாதகனான வன் பாராஜ சிங்யமாகுவன் இவை கிரக நிலையும் இராசி களையும் பார்த்துச் சொல்ல வேண்டுமென வறிக.

கர்க்கடக விராசியில் குரு சூரியன் உதயமாக விருக்க சூரியன் மேஷவிராசியிலிருக்க சுக்கிரன் புதனுடன் கூடி கீர்த்தி ஸ்தானமாகிய 10 ஆமிடத்திலிருக்கச் சாதகனான வன் சிந்தனானகுவான் சந்திரன் ரிஷப விராசியிலிருக்க சூரியன் சிங்க விராசியிலிருக்க குரு தனுசு விராசியிலிருக்க சுக்கிரனுடைய இராசியில்உதயமாக வியாழனுடையகாலில் ஜாதகனானவன் அரசனாகுவனென வறிக.

மகர விராசியில் சனியிருக்க மேஷ விராசியில் செவ்வா யிருக்க கடக விராசியில் சந்திரனிருக்க துலா விராசியில் சுக்கிரனிருக்க தனுசு இராசியில் வியாழனிருக்க அல்லது 10

ஆமிடத்திலிருக்க, சிங்க விராசியில் சூரியனிருக்க மிதுன விராசியில் புதனிருக்க சாதகமானவன் தீர்க்காயுளுள்ள அரசனாகுவானென வறிக.

சூரியன், புதன் சுக்கிரன் இவர்கள் இராசி ஒன்றுக்கு ஒரு மாதம் நிற்பார்கள். சந்திரன் இராசி ஒன்றுக்கு இரண்டே கால் நாள் நிற்பான் செவ்வாய் இராசி ஒன்றுக்கு ஒன்ரறை மாதமாக நிற்பான் சனி இராசி ஒன்றுக்கு இரண்டரை வருடமாக நிற்பான். குரு இராசி ஒன்றுக்குஒரு வருடமாக நிற்பான். இராகு, கேது, இவர்கள் இராசி ஒன்றுக்கு ஒன்றரை வருடமாக நிற்பாரென வறிக.

## அற்பாயுளறியும் வகை

உதயாதிபதியும் சுபக்கிரகங்களும் கூடி ஒரு ராசியில் நிற்க சந்திரனுடன் பாபக்கிரகங்களுடன்கூடி மற்றொரு ராசியிலிருக்க, சுபகிரகமும் பாபக்கிரகமும் கூடி ஒன்றாக நிற்கினும் ஜாதகருக்குத் தீம்பானது உண்டாகி வயது ௵ இருபத்தைந்து வரைக்கு மிருந்து மரிப்பானென வறிக.

ஜன்ம லக்கினத்தில் சுபகிரகங்கள் சேர்ந்து நிற்க குருவுடன் பாபர்கள் சேர்ந்திருக்க பாம்பு சுக்கிரன் இவர்கள் தனித்தும் ஜன்பத்தினும் சனி நின்ற விராசி 7-ஆமிடத்தினுமிருக்க, ஜாதகனானவன் ஈனமடைந்தும் வயது ௵ இருபத்தைந்து வரைக்கு மிருந்த மரிப்பானென வறிக.

ஜன்மாதிபதியும் சனியுங் கூடி 7-ஆமிடத்தில் நிற்க சனி ஜன்மாதிபதிக்கு எதிரேயும் சூரியனுங்கூடி 4-ஆமிடத்திலிருக்க, சன்மாதிபதி இவர்கள் சேர்ந்து செவ்வாயுடன் கூடி நிற்க ஜாதகமானவன் வயது பதினாறு வரைக்கும் மிருந்து மரிப்பானென வறிக.

ஜன்ம லக்கினத்தில் வியாழனிருக்க சந்திரனுடன் சனி கூடி நிற்க செவ்வாய் சூரியனுக்கு 7-ஆமிடத்தில் நிற்க சுக்கிரன் சனி நின்ற விராசியில் பாம்பு நிற்க ஜாதகருக்கு வயது பதினாறு வரைக்கும் மிருந்து மரிப்பானென வறிக.

ஜன்ம லக்கினத்தில் சனி, சந்திரன் இவர்கள்கூடி நிற்க உதயாதிபதியும் சுக்கிரன் சூரியன் இவர்கள் 7-ஆமிடத்திலிருக்க இலக்கிணத்திற்கு 6-ஆமிடத்தில் பாம்பும் குருவும்

கூடி நிற்க ஜாதகமானவனுக்கு வயது ஸ்ரீ பத்து வரைக்கு மிருந்து மரணமாகுவானென வறிக.

இலக்கினத்திற்கு 9-12-ல் சந்திரனுஞ் சனியும் நிற்க உதயாதிபதி ரிஷபத்திலுங் கன்னியாவிராசியிருக்க, ஜாதகனாவான் வயது ஸ்ரீ ஏழுவரைக்கு மிருந்து மரணமடைகுவானென வறிக.

உதய விராசிக்கு "-ஆமிடத்தில் குரு நிற்க அவர்கட்கு 8- ஆமிராசியில் சனி நிற்க சந்திரன் 10 ஆமிடத்திலிருக்க, அவர்க்கேழில் புதன் நிற்க, 8-ல் சுக்கிரனிருக்க சந்திரனுக்கு ஆறில் தீயர்களிருக்கினும் நட்பாகினும் ஜாதகனாவருக்கு வயது ஸ்ரீ 6-5-ல் மரண மடைகுவானென வறிக,

பன்னிரெண்டு இராசிகளில் நின்ற கிரகங்கள் ஒன்பதில் அதிலொரு கிரகம் 8-ஆமிடமாக நிறக அந்த இராசி இன்பமற்றிருக்க ஜாதகனாவன் ஒரு வருடத்தில் மரணமாகுவான் சந்திரன் நின்ற விராசிக்கு 8 ஆமிராசியில் சனியிருக்க ஐந்து வருஷத்தில் மரணமடைகுவான் சுக்கிரன் நின்றவிராசிக்கு எட்டாமிராசியில் செவ்வாயிருக்க மரணம் நேருமென வறிக.

சந்திரன் நின்ற விராசிக்கு 8 ஆமிராசியில் சனி நிற்க, குரு செவ்வாய்க்கு எட்டாமிராசியிலிருக்க அவர்க்கெட்டில் சுக்கிரன் நிற்க சூரியன் நின்ற விராசிக்கு எட்டில் சுக்கிரனிருக்க உதயத்திற்கு 8- ஆமிடத்திலும் புதனுக்கு ஏழாமிராசியிலும் சந்திரனிருக்க ஜாதகனானவருக்கு வயது ஸ்ரீ எட்டு வரைக்குமிருந்து மரணமடைவானென வறிக.

சூரியன் நின்றவிராசிக்கு 8ம் இராசியில் சந்திரனிருக்க சனி உதயத்திற்கு எட்டாமிடத்தில் நிற்க இலக்கினத்திற்கு எட்டாமிடத்தில் வியாழனிருக்க ரிஷபத்திற்கு ஏழாம்இராசியில் உதயாதிபதி நிற்க காரியத்திற்கு எட்டாமிராசியில் சுக்கிரனிருக்க சந்திரனுக்கு ஏழில் செவ்வாயிருக்க சாதகனுக்கு வயது பத்திரைந்வரைக்கு மிருந்து மரணமடைவானென வறிக.

செவ்வாயும் சனி நின்ற வீட்டானும் "உதயத்திலிருக்கும் காமனார் இருந்த வீட்டாலும் சனியுங்கலந்து நிற்க சந்திரனும் சூரியனும் கூடி உதயத்திலிருக்க, உதயத்திற்கு 8-ஆமிடக் குரு செவ்வாயிவர்களிருக்க சாதகன் வயது இரண்டு வரைக்குமிருந்து மரிப்பானென வறிக,

### தீர்க்காயுளறியும் வகை

சனியிருந்த வீட்டான் மரபில்லாமலிருக்க அவருடன் சுபக்கிரகங்கள் சேரில் அஷ்டமாதிபதி நட்புஸ்தானத்தி லிருக்க சூரியனுக்கும் சனிக்கும்முன் பின்னாக நின்றோரும் உளவாகவிருக்க ஜாதகனுக்கு வயது வருஷம் நூறாகுமென வறிக.

அஷ்டஸ்தானத்தில் பாபரில்லாமல் சுபக்கிரகங்களிருக்க சனிநட்புப் பெற்றுச் சுகமாகவிருக்க இரண்டாமிடத்தோன் நின்ற சனி வீட்டான் சமமாக 4-ஆமிடத்திலிருக்க ஜாதக னுக்கு வயது வருஷம் நூறாகுமென வறிக.

சனி நின்ல விராசிக்கு இரண்டு பக்கமும் ஆறாமிடத்தி லும் சுபக்கிரகங்கள் நின்ற நிட்பாட்சியாக விருக்க குரு நாலாமிடமாக விருக்க ஜாதகனுக்கு வயது வருஷம் நூறா கும். பூரணச் சந்திரனாக விருக்கில் இன்னமும் வயத்திக மாகுவென வறிக.

இலக்கினத்திற்கு 6-8-12-ல் சுக்கிரன் குரு சந்திரன் இவர்கள் நிற்க சனி நின்ற விராசிக்கு 6-இராசியில் நட்பா கிய கிரகங்களிருக்க அவருக்குச் சமனாகச் சனி வீட்டானு மிருக்க அதற்கு 4-ம் இராசியில் குரு நிற்க அவருடன் அஷ்டமத்தோன் கூட ஜாதகனுக்கு வயது வருஷம் நூறாகு மென வறிக.

6-8-12க்குடையோர் 4-மிடத்திலிருக்கினும் அல்லது சுபருடன் சேர்ந்திருக்கினும் 6-மிடத்தில் சனி நிற்கினும் இவர்களை சுபக்கிரகங்கள் பார்க்க ஜாதகன் நூறு வய திருப்பானெனவறிக.

சனிக்கு 6, 8-ல் குரு சுக்கிரன் புதன் இவர்கள் சேர்ந்து நிற்க ஜன்மாதிபதிக்கு நாலா மிராசியில் 8-ஆமிடத்தோன் கூட அவருடன் சந்திரன் சேர ஜாதகனுக்கு வயது வருஷம் நூறாகுமென வறிக.

### தீர்க்காயுளும் செல்வமும் அறியும் வகை

அஷ்டமஸ்தானத்தான் சனியும் கூடினும் ஆட்சியில் நாலு கிரகங்கள் நன்கு நிற்கினும் சந்திரனும் ஆட்சி பெறி னும் மற்றக் கிரகங்கள் நாலுக்கு நாலாக இராசிகளில்நிற்க ஜாதகனுகு வயது மிகவுண்டாகித் தரித்திரமானது விலகு மென வறிக.

சனி புதன், சுக்கிரன் சந்திரன் நின்ற வீட்டான் உதயாதிபதி இவர்கள் கூடி நிற்க மற்றக்கிரங்கள் அவர்க்கும் 54 இராசிகளிலிருக்கச் சாதமானவன் செல்வமானது பெற்ற நூறு வயதளவும் பாக்கியத்துடன் வாழ்ந்து மரிப்பானெனவறிக.

அஷ்டமாதிபதி புதன் சுக்சிரன், சந்திரன் உதயாதிபதி இவர்கள் கூடி நிற்க அவர்கள் நின்ம் வீட்டிற்குச் சரியாக இருபுறமாகவிருக்க ஜாதகருக்கு வயது நீர்க்கமும் செல்வமுமுண்டாகுமென வறிக.

எட்டாமிடத்தில் எட்டோளிருக்க மற்ற கிரகங்கள் அவர்க்கு இருபுறமுஞ் சேர்ந்து நிற்க சனிக்கு முன்மனை அம்சமாகவிருக்க ஜாதகருக்கு வயது நூறு அத்துடன் செல்வமானது பெற்று வாழ்வானென வறிக.

எட்டாமிடத்தோனும் எட்டில் நின்றோனும் இவர்களுடன் குரு சுக்கிரன் சந்திரன் சனி இவர்கள் கூடி ஒரு இராசியிலிருக்க ஜாதகருக்குத் தீர்க்கமாகி வயது நூறுடன் நீங்காத செல்வமுடன் பெற்று யானை, குதிரை முதலானவையும் பெற்று வாழ்வானென வறிக.

சனியுடன் இரண்டுகிரங்கள் கூடி நிற்க அவர்க்கு ஐந்து ஐந்திற்கும் மும்மூன்று பேராக நிற்க சாதன் வயதானது நூறும் பெற்றுத் தனபாக்கிய முடையவனாய்ப் பூமியின் மீது வாழ்வானென வறிக.

மூன்று கிரகங்களுடன் சனி, முதல்வனாக நிற்க இரண்டு ஒன்றாக மற்றக் கிரகங்கள் நிற்க சாதகன் செல்வமானது பெற்று வாழ்வானும் பெருகியும் ஆணுடன் பெண்ணுங் பெற்றுங்யாவரும் புகழும்படியாக அவரும் நூறு வயதளவுமிருப்பானென வறிக.

மகரம் கும்பம் இவைகளில் சனி நிற்க நீசவம்சம் பெறாதிருக்க உச்ச வம்சமாக விருக்க ஜாதகன் இலட்சுமி கடாட்சமும் செல்வமும் பெற்று நூறு வயதளவுக் கீர்த்தியோடிருந்து வாழ்வானென வறிக.

சனி உச்சமாகவிருக்க சந்திரன் ஆட்சியாகவிருக்க குரு சுக்கிரன் அவர்க்கு நாலாமிராசியாக விருக்க சாதகனான வன் செல்வமும் பாலபாக்கியமும் பெருகி வயது நூறு வரையிலுமிருந்து வாழ்வானென வறிக.

## ஆயுள் யோகபலா பலன்

சுக்கிரனோடு பாம்பு கூடி மற்றோர்கள் அவரவர்கள் சூறிபோல் நிற்க ஜாதகனாவன் கீர்த்திம னாகியும் எங்குமுள்ள அரசர்கள் இவனைத் தொடர்ந்து நிற்கவும் பாக்கியமுடையவனாய் வாழ்வானென வறிக.

சன்மாதிபதியும் இலாபதிபதியும் சந்திரன் நின்ற வீட்டிற்கு 9-ஆமிராசியோனும் பாம்பும் குருவும், சுக்கிரனும் நிற்க இராசியாபதிகளிருவர்க்கும் இலாபக் கூடாமல் தனித்திருக்க சபகனுக்கு வயது நூறாகவும் பெற்று உலகமுழுவதும் ஒரு குடைக்கீழ் ஆளுவானென வறிக.

ஆட்சி வீட்டிற்கு இலாபமாக அவரவர்கள் நிற்க சாதகனுக்கு காட்சியாகச் செல்வமானது பெருகும் அதற்கு உச்சமாகவிப்பாராகில் சகலவிதமான செல்வமும் தழைத்து ஓங்கி வாழ்வானென வறிக.

பாம்பும் நின்ற விராசிக்கு இலாபமாகிய விராசியில் குரு நிற்க சுக்கிரன் பாம்பு இவர்கள் 3·மிடத்தில் நிற்க பாம்புக்கு 7 மிராசியில் புதன் நிற்க, சாதகனுக்குத் தூர ராசயோக முண்டாகுமென வறிக.

சந்திரனுக்கு அலாபமாக மற்ற கிரகங்கள் நிற்க ஒன்றாக கூடாமல் அவர்கள் இலாபமாக விருக்க ஜாதகனுக்கு அமிர்தயோகமுண்டாம் செல்வமானது வளர்பிறைச் சந்திரனைப்போல் நாளுக்குநாள் பலனாகும். கீர்த்தி பெருகுமென வறிக.

## வெகு புத்திரர் உண்டாவது அறியும் வகை

புத்திரஸ்தானமாகிய 5 ஆமிடத்தோன் ஆட்சியாகியிருக்க, வியாழன் பகையில்லாமலும் பாபக்கிரகங்ளைச்மாக 7ல் நிற்க சாதகனுக்கு அநேக புத்திரருண்டாம்.

ஐந்தாமிடத்தில் நின்றவரும் ஐந்தா மிடத்ததிபரும் ஐந்தாமிடத்தைப் பார்க்க வியாழன் ஆட்சியாகவிருக்க பாம்பு சூரியன் புதன் சனி இவர்கள் 2 6 8 இந்த ஸ்தானங் களிருக்க சாதகருக்கு வெகு புத்திரர்களுண்டாம்

புத்திர ஸ்தானத்தில் நன்மையாகி சுபர்கோட்கள் நிற்க நட்புக்கோட்களின் பக்கல் புத்திரக்காரனாகிய குரு சேர்ந் திருக்க சத்துருவாகிய பாபக்கோட்கள் சரியாக நிற்கா திருக்க வியாழன் நிற்க புத்திரருண்டாகும்

நாலு ஆறு இந்துஸ்தானத்தில் சுபகோட்கள் நிற்க வியாழன் உச்சமாச்சியாக விருக்க அல்லது 5-7ரும் இலா பஸ்தானத்திலுமிருக்க 6-12-8ல் பாபக்ரகங்கள் நிற்க சாதகருக்கு டகிழ்த்சியுள்ள புத்திரருண்டாகும்

வியாழன் பலன் பெற்று நிற்க அவர்க்கைந்து குடை யோன் நட்பாக விறக, 5-ஆமிடத்தைச் சத்துருக் கோட் களாகிய பாபர்கள் பாராதிருக்க பாபக்கிரகங்கள் நட்பாட்சி யுச்சமாகவிருக்க சாதகருக்குத் தீர்க்க வயதுடைய புத்திரர் களுண்டாம்.

வியாழன் பலவீனமில்லாமல் கோணத்திற்கு நடுவாக நிற்க, ஐந்தாமிடத்தோன் இலாபஸ்தான மேறி நிற்க, பாபக் கிரகங்களாகிய செவ்வாய், சனி -8லிருக்க ஐந்தா மிடத்தில் சுபக்கிரகங்களிருக்க சாதகருக்குப் புத்திரருண் டாம்.

வியாழன் சந்திரனாகவிருக்க, அவர்க்குப்பகை யில்லா திருக்க செவ்வாய் சூரியன் பாம்பு சனி இவர்கள் சுபருடன் கூடாமல் 0742 இந்த ஸ்தானத்திலிருக்க சாதகன் புத்திர ருண்டாகி வாழ்வான்.

ஐந்தாமிடத்தோன் ஐந்தாமிடத்தில் நின்றோன் வியா ழன் இவர்களிருக்குமிடத்தில் பாபர்கள் சேராமலும் பாராம லுமிருக்க அஸ்தமனமில்லாமல் முன்பின்னாகப் பாபர் நிற் காதிருக்க சாதகருக்குஅனேக புத்திரர்களுண்டாம்.

பத்தாமிடத்திற் குடையோர்க்கும் ஐந்தாமிடத்திற் குடையோர்க்கும் ஏழு நான்கிற்குடையோன் ஐந்தாமிடத்

திலிருக்க 10ஆமி...த்தில் ஒரு நட்புக்கோள் நிற்க சனிக்கு 7ல் ஐந்தாமிடத்தோனிடமிருந்து பார்வை யில்லாதிருக்க பார்கள் ஒதுங்கினிற்க ஐந்தாமிடத்தைச் சுபர்கள் பார்க்க ஜாதகருக்கு வெகு புத்திரருண்டாகும்.

வியாழன் ஐந்தாமிடத்தைப் பார்க்காதிருக்க ஐந்தாமிடத்திற்குடையவன் சனிக் கெதிரில்லாதிருக்க ஐந்தாமிடத்தில் இருக்காமல் இரு பக்கமும் சூரியன் செவ்வாய் இல்லாதிருக்க 7-வில் ஏறியும் நிற்காமலும் சந்திரனுக்கு எதிரில்லாமலும் 5 7ல் சனியில்லாமலுமிருக்க ஜாதகருக்கு வருங்குழவி நில்லாதென வறிய வேண்டும்.

மேஷ விராசியில் செவ்வாய் நிற்க அதுவே ஐந்தாமிடமாக விருக்க வியாழன் மீன விராசியிலிருக்க சாதகருக்கு வெகு புத்திரருண்டாய்க் கெடுதில்லாதிருக்கும் இப்பலன் 7-மிடத்திற் சனி யில்லாதிரும்க வேண்டுமெனவறிக.

விருச்சிக விராசியில் செவ்வாய் நிற்க அது ஜன்மத்திற் ககந்தாமிடகாக வியாழன் தநுசு இராசியிலிருக்க முக்கோணத்திற்குப் பின்பக்கமம் சனி இல்லாதிருக்க ஜாதருக்குப் புத்திரருண்டாம்.

புதன் ஆட்சியகி ஐந்தாமிடத்திலிருக்க வியாழன் மேஷ விராசியிலிருக்க சனி மிதுன விராசியிலிருக்க அதற்கு சந்தியாகி புதன் சத்துருவில்லாதிருக்கச் சாதகருக்குத் தீரலாகப் புத்திர விருத்தி யுண்டாகி வாழ்வான்

ஐந்தாமிடத்தில் நின் கோள் பெண்ணாக அவ்விரசியாதிபதி ஆண்கிரகமாக ஜன்மாதிபதி ஆண்கிரகமாகி சந்திரன் நின்ற இராசியாதிபதி பெண் கிரகமாக கேந்திர கோணமேரி வியாழனுக்கு 7-மிராசிலிருக்க ஜாகருக்கு ஆணும்பெண்ணும் தீர்க்காயுளுடன் பிறக்குமென வறிக.

சந்திரன் னின்ற இராசி புருஷ விராசியாக குரு நின்ற விராசிக்கு ஐந்தாம் இராசியான் பெண்ணாகக் கேந்திர மேரி நிற்கசென்ம விராசி பெண்ணாக அதில் ஐந்தாமிடத்தோன் நிற்க சாதகனுக்கு ஆணும் பெண்ணுமாக வேண புத்திரருண்டாகும்.

சுக்கிரன் ஐந்தாமிடத்தில் நிற்க. அந்த விராசி வியாழருடைய ஆட்சியாக வியாழன் நின்ற விராசி சந்திரன் வீடாக ஐந்தாமிடத்தோனின்ற மனை சுக்கிரன் வீடாக ஜாதகருக்கு பெண் சந்ததி அதிகமுண்டாம்.

சந்திரன் ஐந்தாமிடத்தில் நிற்க அந்த விராசி சுக்கிரன் வீடாக ஐந்தாமிடத்தோரும் சுக்கிரரும் நடுவாகக் கூடி நிற்க வியாழன் கடகத்திலிருக்க கன்னிகா விராசியும் மீன விராசியும் அங்கிசமாக ஜாதகருக்கும் பெண் சந்ததியுண்டாம்.

வியாழரும் ஐந்தாமிடத்தோரும் நின்ற விராசியில் புதன் கூடி நிற்க நின்றவருக்கு 7ம் இராசியில் நின்றோன் பெண்ணங்கிசமாக விருக்க, அவரைக் குரு பாராதிருக்க மற்றத் தீட்கோட்கலும் பாராமலுருக்க ஜாதகருக்கு எந்நாளும் பெண் சந்ததியுண்டாம்.

மலடா வதறியும் வகை

உதயத்திற்கு ஐந்தாமிடத்தில் நிற்க 8 ஆமிடத்தில் செவ்வாய் நிற்க 7 ஆமிடத்தில் வியாழனிருக்க அவருடன் ஐந்தாமிடத்தோனும் செவ்வாயுஞ் சேர மதியுடன் பாம்பு சேர்ந்து சனிக்கு ஏழாம் இராசியிலிருக்க ஜாதகன் மலடாகுவான்.

பத்தாமிடத்தில் சனி, செவ்வாய் நிற்க, ஐந்தாமிடத்திலு சூரியனிருக்கப் பார்க்க சனியும் இலாபாதிபதியும் உதயத்தோனுங் கூடிய நிற்க, ஐந்தாமிடத்தோன் நீசமாக ஜாதகன் உடன் பிறப்பில்லாமல் மலடாவான்.

ஐந்தாமிடமும் ஐந்தாமிடத்தோன் நின்ற, வீடும் வியாழருக்குப் பார்வையாகில் ஐந்தாமிடத்திற்கு 7 ஆமிராசியில் சனி செவ்வாய் சேர்ந்து நிற்க, இலக்கினாதிபதியைச் சூரியன் பார்க்க கூட ஜாதகன் எந்நாளும் மலடாக விருப்பானை வறிக.

6-8க் குடையோர் சேர்த்து ஐந்தாமிடத்திலிருக்க சூரியன் நீசமாயிருக்க வியாழன் ஐந்தாமிடதோருஞ் சேர்ந்

திருக்க உதயத்தில் சனியும் குளிகனுங்கூடி நிற்க 6-9ல் சந்திரன் செவ்வாய் இவர்கள் சேர்ந்து நிற்க சாதகன் மலடனாக விருப்பானென வறிக.

6-க்குடையவன் 9 ஆமிடத்திலிருக்க அவருடன் சூரியன் கூடி 3-2ல் 8 ஆமிடத்தோனும் செவ்வாயும் சேர்ந்து நிற்க குரு நீசமடைந்திருக்க உதயத்தில் சனி நிற்க அவருடன் பாம்பு சந்திரனும் கூடி நிற்க சாதகன் மலடாகுமென வறிக.

பத்தாமிடத்தோன் பாபியாகியும் சுபக்கிரபங்கள் நீசமாக விருக்க 5 ஆமிடத்தில் உதயாதிபதியும் சுக்ர சந்திரனும் கூடி நிற்க, 5 ஆமிடத்திற்கு 6 ஆமிடத்தில் பாம்பு நிற்க. ஆமிடம் உதயமாக சாதகனுக்குப் புத்திரரே யில்லையாமென வறிக.

சனி 5 ஆமிடத்திலிருக்க சந்திரனுடன் பாபிகள் சேர 6 ஆமிடத்தோன் நட்பாகக் குருவுடன் பாபிகள் கூட உதயத்தில் கேது விருக்க சாதகனுக்குப் புத்திரர் உண்டாகி நசித்தும் போகுமென வறிக.

5 ஆமிடத்தோன் பாபர்களுடன் சேர 5 ஆமிடத்தில் சுபர்களிருக்க குருவும் பாபர்களுங்கூடி நடுவாக விருக்க சந்திரன், செவ்வாயுடன் கூடி நிற்க சாதகனுக்குப் பிறக்கும்படியான பிள்ளைகள் மடிந்து போமென வறிக.

6 ஆமிடத்தில் பாம்பு நிற்ா அவர்க்கு 4 5 ல் சனி செவ்வாய் இவர்களிருக்க தனஸ்தானத்தில் குரு நிற்க உதயத்தில் சந்திரன் பலன் குறைந்து நிற்க சாதகனுக்குப் பிறக்கும் பிள்ளைகள் நாசமடைந்து போகுமென வறிக.

6-4ல் சூரியன் சனி நிற்க அவர்க்கு 4ல் குரு செவ்வாய் இவர்களிருக்க 4ல் 5 ஆமிடத்தோன் நிற்க குருவிற்கு 4ல் 6 ஆமிடமாகவும் உதயத்திலும் சுபக்கிரகங்கள் நிற்க சாதகனுக்குப் பிள்ளை பிதந்மும் மரணமாகுவென வறிக.

உதயத்திலும் 2-மிடத்திலும் சுக்கிரனிருக்க சூரியன் பலவீனமாக குரு சுபஸ்தானங்களிருக்க சூரியன் சனி செவ்

வாய் இவர்கள் உறவாக விருக்கச் ஜாதகனுக்கு ஆணும் பெண்ணும் அடுக் கறிக்காகப் பிறந்தும் நில்லாமல் மரண மாகப்போய் விடுமென வறிக.

ஜன்மத்தில் பாபக்கோட்கள் நிற்க குருவுடன் தீயோர் கள் கூட கர்ம ஸ்தானத்தில் பகைபெற்ற கோட்கள் நிற்க சுபர்கள் 6-8ல் நிற்க கர்மஸ்தானத்தில் பாம்பு நிற்கஜாதக னுக்கும் பிறந்த பிள்ளை உடனே மரணமாகுமென வறிக.

பூரணச் சந்திரனோடு சுபக்கிரகங்கள் மேலாக விருக் கினும் 5 ஆடத்தோனும் குருவும் மூடமாக சனி செவ் வாய் குரு இவர்கள் ஐந்தாடத்தில் நிற்க ஜாதகனுக்குப் பிறக்கும் குழவியானது நாசமாகுமென வறிக.

சுபகோட்களும் பாபக்கோட்களும் கலந்துநிற்க அவ ருடன் குருவுங் கலக்க 5 ஆமிடத்தோனு பாபக்கோளாகி பலன் பெற்றிருக்க ஜாதகனுக்குப் பிறக்கும்பிள்ளை கொஞ்ச நாள் கூடி நில்லாமல் மருத்தும் போகுமென வறிக.

இலத்கினத்தில் சந்திரனிருக்க 5 ஆமிடத்தில் குரு நிற்க சுபக்கிரகங்கள் பார்வை இல்லாதிருக்க பாபர்களே மிகுந்தி ருக்க ஜாதகருக்குப் புத்திரரில்லையாமென வறிக.

குருவும் சந்திரனும் கூடிநிற்க அவரை வேறொரு கிரகங் களும் பாராதிருக்க 5 ஆமிடத்தில் நிற்க ஜாதகருக்குப் புத் திர நாசமாகும் இவை கிரக வலவறிந்து சொல்லவேண்டும்.

## சகோதரர்கள் அறியும் வகை

3 ஆமிடத்தில் பாபர்கள் நிற்க அவருக்கு முன் பின் னாக நின்றோர் அஸ்தமிக்க 9 ஆமிடத்தில் சனிநிற்க அவர்க்கு 4 ஆமிடத்தில் செவ்வா நிற்க சுபக்கிரகங்களில் லாமல் பகையாகி நிற்க ஜாதகனுக்குச் சகோதரமில்லையா மென வறிக.

இலக்கினத்திலும் 2 ஆமிடத்திலும் செவ்வாய் இராகு சனி இவர்கள் நிற்க, உதயாதிபதியும் சனியுங் கூடி நிற்க உதயாதிபதியுங் பாம்புங் கலந்து நிற்க ஜாதகன் சகோதர மின்றி ஒண்டியாகத் திரிவானென வறிக

வியாழன் 8 ஆமிடத்தில் நிற்க செவ்வாயுஞ் சனியுங் கூடி சூரியருக்கு ஆட்சியான ஸ்தானத்தில் குருவும் 3 ஆமி தோறும் கூடவும் பாம்பு கூடி 6 ஆமிடத்திலிருக்கவும் ஜாத கன் சகோரமின்றித் தனியாக விருப்பானென வறிக

ஆறாமிடத்தோன் 3 ஆமிடத்தில் நிற்க சந்திரருடன் பாம்பு, புதன் 3 ஆமிடத்தோன் இவர்கள் கூடி 8 ஆமிடத்தி லிருக்க சனிக்கு 7ம் இராசியில் செவ்வாயும் கரும்பாம்புங் கூடி நிற்க ஜாதகருக்குத் துணைவரில்லையென வறிக.

சுக்கிரருடன் கூடிச்சூரியன் 3-ஆமிடத்திலிருக்க 5-ஆமிடத்தில் செவ்வாய் நிற்க அவர்க்கு 7-ல் சந்திரனிருக்க உதயத்தில் பாம்பு இருக்க சனியும் ‡சூரியன் மிடத்தோன் சேர்ந்திருக்க ஜாதகருக்குச்சகோதரர்கள் இல்லையாமென வறிக

மூன்றாமிடத்தில் பாபர்கள் நிற்க அவருடன் சந்திரன் கூட அல்லது எதிராக விருக்க சந்திரருக்கு 7-ல் சனிநிற்க அவர்க்கேழில் குருநிற்க குருவும் சந்திரரும் 4-ஆமிடத்தி லிருக்க சூரியருங் கூடி நிற்க சாதகருக்குச் சகோதரர்கள் இல்லையாமென வறிக

சனியும் செவ்வாயுங் கூடி உதயம் 3-ஆமிடத்திலிருக்க சூரியருடன் 8 ஆமிடந்தோறும் சுபரும் பாராதிருக்க பாம் பும் சந்திரரும் 4 ஆமிடத்திலிருக்க சாதகருக்குப் பின்பு புத்திரர் இல்லையாமென வறிக.

3 ஆமிடத்தில் பாபர்களிருக்க செவ்வாய் நீசமாக 3-ஆமிடத்தோரும் பாபரும் இருபுறமிருக்க பாம்பு சனி சூரி யன் இவர்கள்சந்திரருக்கு4-ம் செவ்வாய்க்கு4-ம் இராசியில்

குரு நிற்க புதனுக்கு 7-ல் 2 ல் இடத்தோனிருக்க மதாஸ் தானத்திற்கு 3 4லும் சனிக்கு 7-ல் சுக்கிரனிருக்க மூன்று கோட்றடு மூன்றாகவும் 3ல் சூரியன் பாம்பு நிற்க. சந்திரனுக்கு 4-ல் செவ்வாயாக விருக்க ஜாதகருக்குச் சகோதர முண்டாமென வறிக.

ஆறாமிடத்தில் சுபக்கிரகங்களிருக்க அதற்கு அதிபதி அதிலிருக்க அவரை பாபர்கள் பாராதிருக்க செவ்வாய் யாக 2-ஆமிடத்தில் வியாழன் நிற்க அவர்க்கு 4-ம் சந்திரனிருக்க ஜாதகனுக்கு சகோதரம் மிகுதியாக உண்டாகு மென் வறிக.

இரண்டாமிடத்தோன் ஆட்சுயாக அவருடன் குரு சேந்திருக்க, அவமைப் பாராதிருக்க 9-7ல் செவ்வாய்யுஞ் சுக்கிரனும் நிற்க ஜாதகனுக்குச் சகோதரர்கள் விர்யமாக உண்டாகுமென.

4. ஆமிடத்தோன் உச்சமாக 5-ஆமிடத்தோன் ஆட்சியாக செவ்வாய் புதன் குரு இவர்கள் கூடி நிற்க 3-ஆமிடத்தில் சந்திரனிருக்க 12-ல் சூரியன் சனி இவர் களிருக்க ஜாதகனுக்குச் சகோரர் அனேகம் பேருண்டா மென வறிக.

2. மிடத்தில் வியாழன் ஒருவனாக விருக்க சந்திரன் 6 மிடத்திலிருக்க ஆறாமிடத்தோன் இலாபத்திலிருக்க பாபர்கள் நீசமடைந்திருக்க சுக்கிரன் உதயத்திலிருக்க ஜாதகருக்குச் சகோதரர் அநேகம் பேருண்டாமெனவறிக.

3. ஆமிடத்சில் செவ்வாயுமிருக்க சுபர்களும் பார்க்க அல்லது கூடி நிற்க ஜன்மாதிப்திபாகப்பாபர்களிருக்க ஜாதகருக்குப் பின் வேண்டிய சகோதரர்களுண்டாமென வறிக.

3-ஆமிடத்தில் செவ்வாயிருக்க அவர்க்கு 7-ல் செவ்வா யிருக்கசனி 3 மிடத்திலிருக்க சூரியன் 7 ஆமிடத்திலிருக்க சனுயும் பாம்புமாக ஜாதகருக்குச் சகோதரம் பின்பு இல்லையாமெ ன வறிக.

3-ஆமிடத்தில் செவ்வாயுஞ் சனி நிற்க ஜாதகருக்குப் பின் சகோதரம் பிறந்து இறந்துபோகும் சுபர் பாராதிருக்கில் வித்துடன் அழிந்துபோகும் சூரியனும் 3 ஆமிடத்தோனும் சேர்ந்து நிற்க இப்பலத்தில் ஒரு வடத்தில் காட்டுமென வறிக.

3-ஆடத்தில் குருவுஞ் சந்திரனும் கூடிநிற்க இவர் களை நல்லவரெனச் சொல்லப்போகாது சுபக்கிரகமென நம்புவதுமாகாது ஜாதகருக்குச் சகோரம் மோசமாகுமென வறிக.

## மாதுரு பலன் அறியும் வகை

உதயத்தில் சுபகிரகங்களிருக்க சுபகிரகங்களோடும் 4 ஆமிடத்தில் சந்திரனிருக்க சூரியன், சனி செவ்வாய் இவர்கள் பாராதிருக்க குரு 4 ஆமிடத்திலிக்கு பாம்பு சந்தி ரனைப் பாராதிருக்க ஜாதகருடைய தாய்க்குத் தீர்க்காயு ளுண்டாகும்.

10-4ல் பாபர்களில்லாமல் க்பகிரகங்களிக்க 4 ஆமித் தோன் பாக்கியத்திலிருக்க அவருடன் வியாழன் கூட 4-12ல் இருந்தவன் ஆச்சி பெற்றிருக்க ஜாதகருடைய தாயார் தீர்க்கமாக விருப்பாள்.

ரிஷபத்திலும் 4-ஆமிடத்லுமிருக்க அவரைச் சனி செவ்ாய் பாராதிருக்க 7 ஆமிடத்திலிருக்க சுக்கிரன் 4-ஆ மிடத்திலிருக்க உச்சமாகி சந்திரன் உதயத்திலிருக்க ஜாதக ருடைய தாயார் தீர்காயுளுடன் நூறுவயதிருப்பாள்.

உதயாதிபதி 4-7 10க்குடைய அவர்கள் திரிகோண மேறி நிற்க அவை கேந்திரமாக ஜாதகருடைய தாயார் தீர்க்க வயதுடையவளாகும் சந்திரன் 2-ஆமிடத்திலிருக்க, அவரைச் செவ்வாய் சனி சூரியன் இவர்கள் பாராதிருக்கத தீர்க்க வயதாகும்.

சந்திரன் பெருமையாகிய நிற்க அவரை மற்றத் தீக் கோட்கள் பாராமலிருக்க 4-மிடத்தில் குரு நிற்க அவரைச் சத்துருக்கிரகம் சீ-ஆமிடத்திலிருக்க ஜாதருடைய தாயார் நூறு வயதளவும் இருப்பாள்.

நாலுக்குடையோன் சந்திரன் நின்ற விராசியாதிபதி 7-ஆமிடத்தோனும் சேர்ந்து நிற்க 7-ஆமிடத்தில் சுபர்களி ருக்க அவரை சூரியன் செவ்வாய் பாராதிருக்க 9-6-8 ல் ஜாதகருடைய தாய்க்குத் தீர்க்க வயதுண்டாம்.

4-ஆமிடத்திலும் நாலாமிடத்திற்கு 4-ஆமிடத்திலும், சுபக்கிரகங்களில்லாதிருக்க 4-ஆமிடத்தோனும் நீசமாகி யிருக்க சந்திரன் மீன விராசியிலிருக்க ஜாதகருடைய தாயார் பிழைப்பது அரிதாகும்.

10-ஆமிடத்திலும் சனி செவ்வாய் பாம்பு இவர்கள் நிற்க 47க்குடையோனும் நீசமாக விருக்க, சுபக்கிரகங்கள் அஸ்தமனமாக விருக்க க்ஷீண சந்திரனாக விருக்க ஜாதக னுடைய தாயார் மரணமாவாள்.

சந்திரன் நாலாமிடமாக நிற்க அவர்க்கு நாலில் சூரிய னிருக்க உதயத்தில் சனியிருக்க இவகளுடன் சுபர்கள் சேராதிருக்க, குரு 9 8ல் நிற்க ஜாதகருடை தாயார் மரணமாகி விடுவாள்.

4 ஆமிடத்திலும் 7 மிடத்திலும் பாபர்களிருக்க சுபக் கிரகங்கள் நீசமாகவிருக்க சனியுடன் சந்திரன் கூடி அஸ்தமனமாக விருக்க 4-ஆமிடத்தில் குரு நிற்க சூரியன் உதயததிலிருக்க ஜாதகன் வந்தநாளே தாயார் மரணமாவா ளென வறிக.

குரு சந்திரன் இவர்கள் 4-மிடத்தில் கூடியிருக்க ஜாதகனுடைய தாயாருக்கு ஆகாதாம் அத்துடன் வமிசம் நாசமாகும். சுபக்கிரகங்கள் பாராதிருப்பாராகில் கருவுடனே மாதா மரணமாவள். இக்குறி தப்பாதென வறிக.

செவ்வாய் 4-மிடத்திலிருக்க அவரைச் சுபகிரகங்கள் பாராதிருக்க 4-மிடத்தில் சந்திரனிருக்க அவர்க்கு நாளில் சூரியனிக்க சனி உதயத்திலிருக்க ஜாதகத்தின் குழவியுடன் தாயாரும் மரணமாவாளென் வறிக.

மூன்றாமிடத்தோனும் 8-மிடத்தோனுங் கூடி 4-ஆமிடத்தில் 6 8, 12-லிருக்க இவர்க்கு 68-ல் பாம்பும் சந்திரனும் கூடி நிற்க சூரியன் உதயத்திலிருக் ஜாதகனுடைய தாயார் மரணமடைவாளென வறிக.

செவ்வாயும் சனியுங்கூடி 4 மிடத்தில் நிற்க சந்திரன் நீசமாக விருக்க க்ஷீணமாக அவரை சுபர்கள் பாராதிருக்க ஜாதகனுடைய தாயார் மரணமாவாள்.

சூரியன் 4 மிடத்தில் செவ்வாய் பந்திரனும் சனியும் கூடி 4-மிடத்திலிருக்க 7-மிடத்தில் பாம்பு நிற்க புதன் உதயத்திலிருக்க சுபர்கள் நட்பில்லாதிருக்க சுபக்கிரகங்கள் பார்வையில்லாதிருக்க ஜாதகனுடைய தாய் அன்று இரவிற்றானே கரணமாகி விடுவாள்.

4-மிடத்தில் தீயோர்களிக்க அவரைச் சுக்கிரன் குரு இவர்கள் பார்க்க ஜாதனுடைய தாயார் சிறு தோக்காடாக விருப்பான் 5-6ல் நிற்க தாயார் மரணமாவாள் சுபர்களின் பார்வையுண்டாகில் எட்டு வருடம் வரைக்கும் தாயாரிருந்து பின் மரணமடைவாள்.

சுபரும் பாபிகளுங் கூடி நிற்க 4-மிடத்தோனும் பாம்புங் கூடி நிற்க இவர்களுடன் சேராமல் உதயாதிபதியிருக்க சாதகனுடைய தாயார் மரணமாவள்.

## விருத்தம்

சத்தமும் பாபிக்குடி சூரியனுடனே யில்லா
பத்துமுன் நான்கு மெழில் பனிமதியொருவனில்லா
அத்தமுந் நான்கு நான்கோ னாட்சியில்லக் கில்லா
நித்தமுங் கன்னியாசி நெடுங்கால மிருப்பானன்னை

## பிதுர் பலன் அறியும் வகை

9-ஆமிடத்திற்கு 9-ஆமிடத்திலும் 5-ஆமிடத்திலும் குரு நிற்க அத்தானாதிபதியோடு சந்திரன் கூடப் பார்க்க கிரனான் ஆட்சியாக விருக்க இலாபஸ்தானமேற ஜாதகனுடைய தகப்பன் நூறு வந்திருப்பான்.

சூரியன் உச்சமாகி நிற்கோணாதிபதியும் ஆட்சியாக விருக்க கோணத்தில் சந்திரனும் குருவுமிருக்க பாம்பு செவ்வாய் சனி புதன் இவர்கள் 6-8-12ல் நிற்க ஜாதகனுடைய தகப்பன் திரவியவானுமாய்த் தீர்க்காயுளுடன் இருந்து வாழ்வான்.

5-ஆமிடத்தோனும் 9-ஆமிடத்தோனும் உச்சமாக சூரியன் நட்பாக விருக்க 9 ஆமிடத்ததிபன் குரு சுக்கிரன இவர்கள் மேற்கண்டவர்களுக்கு 4-7ல் நிற்க சனி சூரியனுக்கு 5-7ல் நிற்க சந்திரன் திரிகோணத்திலிருக்க ஜாதகருடைய தகப்பனுக்குத் தீர்க்காயுளுண்டாம்.

எட்டில் நின்றவனையும் 8 ஆமிடத்ததிபனையும் சூரியனையும் சுபக்கிரகங்கள் பார்க்க சனி செவ்வாய் பாம்பு இவர்கள் 9-8ல் நிற்க உதயத்தில் சுக்கிரனும் புதனும் நிற்க ஜாதகருடைய தகப்பருக்குப் பாக்கிய மரியாமலிருக்குமென வறிக.

குருபலவானாக விருக்க அவர்க்கு 5-9ல் குரு நிற்க சனி சூரியனுடன் புதன் சுக்கிரன் கூடி நிற்க சனி செவ்வாய் பாம்பு இவர்கள் கூடி 4-7ல் இல்லாதிருக்க ஜாதகருடைய தகப்பருக்கு ஆயுள் தீர்க்கமுண்டாகுமென வறிக

4-ஆமிடத்தில் குரு சந்திரனிருக்க 7-ஆமிடத்தில் சூரியனிருக்க சூரியருக்கு இருபக்கமாகப் புதரும் சுக்கிரரும் நிற்க அவர்களைப் பாபர்கள் பாராதிருக்க ஜாதகருடைய தகப்பன் யோகவானாய்ப் பெருஞ் செல்வம் பெற்று வாழ்வான்.

சூரியருடன் புதன் கூடி நிற்க சனி செவ்வாய் 4-ஆமிடமன்றியிருக்க, 9 ஆமிடத்தேபுன் சந்திரன் இவர்கள் வியாழனுக்கு 4-7ல் நிற்க சுக்கிரருக்கு 4-5ல் நிற்கிரும் ஜாதகருடைய தகப்பருக்கு யோகமுண்டாம்.

சுக்கிரரும் குருவும் உதயத்திலிருக்க, மறைவில்லாமல் சூரியன் இலாபத்திலிருக்க 6-ஆறாம்இடத்தோன் சந்திரருடையவீட்டிலிருக்கசந்திரன் உதயத்திலிருகஅவரைபாபர்கள்

பாராதிருக்க ஜாதகருடைய தகப்பனுக்கு அதியோகமும் தீர்க்காயுளுமுண்டாம்.

9-ஆம் இடத்தில் பாபர்களின்றிச் சுபர்களிருக்கப் பார்க்கதனத்தில் நல்லோர்கள் சேர்ந்து நிற்க மிருகவாகன நேயையோன் கன்னியர் விராசியிலிருக்க ஜாதகருடைய தகப்பன் தீர்க்கமாக வயது நூறாக விருப்பான்.

குரு நீசமாக 5-8ல் நிற்க சனியும் அவர் நின்ற மனை யோனும் சேர்ந்து நிற்க அவரைப் புதனும் சுக்கிரரும் பாரா திருக்க மாம்பு சூரியனுக்கு 7-ல் நிற்க சாதகன் பிறக்கு முன்னே பிதா மரணமாகி விடுவான்.

குரு 8 ஆம் இடத்திலிருக்க சூரியன் 12-ல் நிற்க 9 ஆம் இடத்தில் பர்ம்பு நிற்க சூரியனுக்கு 7-ல் சந்திரனிருக்க சாத கன் பிறவாதற்கு முன்னேபிதா மரணமாகி விடுவானென வறிக.

சுக்கிரன் அஸ்தமனமாக குரு நீசமாக விருக்க 7-ல் செவ்வாய் புதன் நிற்க சூரியனும் 9-மிடத்தில் பாம்பு நிற்க சூரியனும் 9-மிடத்தோனும் 4-மிடத்திலிருக்க ஜாதகன் பிறக்கு முன்னே அவன் பிதா மரணமாவானென வறிக.

## களத்திர பலன் அறியும் வகை

சனிக்கு 7-ல் சுக்கிரனிருக்க இவன் நின்ற விராசியாதி குரு நீசமாக உதயத்தில் சந்திரனிருக்க அந்த விராசிக் கெதிரில் புதன் நிற்க, 7-க்குடையான் செவ்வாய்க்கும் சூரி னுக்கும் நாலாம் இடமாக நிற்க ஜாதகனுக்குக் களத் திரம் நாசமாகுவென வறி;

குரு மூடமாகி நிற்க செவ்வால் 8-ல் நிற்க சூரியனுடன் ஏழாமிடத்தோன் கூடி நிற்க பாம்புக்கு நாலாமிடமாக சுக்கிரனிருக்க சனி சேர்ந்து நாலாமிடத்திலிருக்க ஜாதகமானவனுக்குக் களத்திர மிறந்துபோமென வறிக.

சனியும் செவ்வாயும் சேர்ந்து 7-மிடத்திலிருக்க சூரியன் சுக்கிரன் சேர்ந்து நிற்க ‑க்குடையவன் 11-மிடத்திலிருக்க ஜாதகருக்கு உண்டாகிய களத்திரம் நாசமடைந்து போகுமென வறிக.

குருவும் சந்திரனும் சேர்ந்து 7-மிடத்தில் நிற்க அவர்களைச்சுபரென்று சொல்லப்போகாது ஜாதகனுடையகளத்திர ஹானியும் வங்கிச நாசமுமாகும்.

சுக்கிரன் மீனவிராசியிலிருக்க வியாழன் ஏழுக்கு ஏழாகவிருக்க பாம்பு சனி இவர்கள் 24-ல் நிற்க உதயத்தில் செவ்வாய் நிற்க 7ல் சூரியனிருச்க ஜாதகருடைய துணைவி நாசமடைவாளென வறிக.

சுக்கிரனும் 7-க்குடையோனும் சுகமாக விருக்க இவர்களுடன் நல்லோர் சேர்த்துப் பார்க்க அவருடன் பாபர்கள் சேர்த்துப் பதிவிரதையாக விருப்பாள்.

8-மிடத்தில் நின்ற சுக்கிரனோடு இருப்பவர்கள் சுபர்களாக விருக்க அவரைப் பாபர்கள் பாராதிருக்க ஜாதக்ருடைய களத்திரம் வாழ்வானது பெருகியும் குடும்பத்திற்கு லட்சுமி போலுமிருப்பாள்.

தனஸ்தானாதிபதியும் 7-க்குடையோனும் நட்பாக விருக்க குரு சுக்கிரன் புதன் இவர்கள் 4-7ல் இருக்க அவரைப் பாபர் பாராதிருக்க 7-ல் குருவிருக்க சந்திரன் உதயத்திலிருக்க ஜாதகருக்கு மேகம் போல் களத்திரமானது கலந்து வாழ்ந்திருக்குமென மேலோர் சொல்கின்றனர்.

## அனுபவ சுந்தர சேகரம் இரண்டு பாகமும் முற்றிற்று

---

சீனிவாச அச்சகம் சூளை, சென்னை-600112 (1992)

